E-mail : omsakthieditorial@gmail.com
https://archive.org/search.php?query=omsakthi

# ஓம் சக்தி

ஜனவரி 2019
விலை ரூ.15

நிறுவனர் :
நா. மகாலிங்கம்









## அருள்தரும் அம்மையப்பர்

# கு ம ர கு ரு

பொறியியற் கல்லூரி | வணிக மேலாண்மைப் பள்ளி | வேளாண்மைக் கல்லூரி
பன்முகக் கலை அறிவியல் கல்லூரி | சக்தி மேம்பாட்டுக் கல்வி மையம்

**ஒழுக்கமே வாழ்வு**



"கல்வியைப் போலவே தொழில்களும் கடவுளுக்குச் சமமானவை. படிக்கும் காலத்திலேயே தொழிலுக்கான பயிற்சியை மாணவர்கள் பெறவேண்டும்."

**அருட்செல்வர் டாக்டர்.நா.மகாலிங்கம்**






## குமரகுரு பன்முக கலை அறிவியல் கல்லூரி

அடிப்படை அறிவியலிலிருந்து சமூக அறிவியல் வரையும், இலக்கியத்திலிருந்து நுண்கலைவரையும் அனைத்தையும் வழங்கி, சமூக முன்னேற்றத்திற்கான ஆய்வுகளை முன்னெடுத்து, வாழ்நாள் முழுதும் கற்றலில் ஆர்வம் கொண்டு, உலகியலின் போக்கில் தாக்கத்தை ஏற்படுத்தும் தனியாத ஆர்வம் கொண்ட இளைஞர்களை உருவாக்கும் கல்வி நிறுவனம்.




## குமரகுரு தொழில்நுட்பக் கல்லூரி

150 ஏக்கர் வளாகத்தில் 6000 மாணவர்களுடனும் 400 பேராசிரியர்களுடனும் 34 ஆண்டுகளாக 'ஒழுக்கமே வாழ்வு' எனும் உயர் குறிக்கோளுடன், ஆராய்ச்சியையும் தொழில் இணைவையும் அடிப்டையாகக் கொண்டு தேசிய தர வரிசையில் முதல் நூறு நிறுவனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.




## கே.சி.டி. வணிக மேலாண்மைப் பள்ளி

தொழிலகங்கள் மற்றும் சமூகத்தின் முன்னேற்றத்தில் முனைப்புடன் செயல்படும் இளைய தலைமுறைக்கான தலைவர்களை உருவாக்கும் இந்தியாவின் முதல் 100 நிறுவனங்களில் ஒன்றாகும் கல்வி, மனித வளம், மாணவர்கள் சேவை, ஐ.டி. தொழில்நுட்பம், தொழிலினைவு, சமூக பங்களிப்பு போன்றவைகளில் மிகுந்த ஈடுபாட்டுடன் செயல்படும் இணையற்ற நிறுவனம்.




## குமரகுரு வேளாண்மைக் கல்லூரி

தொழில்நுட்பம் மூலமாக வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கி, வேளாண்மையைத் தற்சார்புத் தொழிலாக மாற்றுவதற்குரிய வேளாண்மைக் கல்வியை, கிராமப்புற மாணவர்களுக்கு வழங்குவதை நோக்கமாகக் கொண்ட நிறுவனம்.

## ஆராய்ச்சி அமைப்புக்கள்

**மாணவர் ஆராய்ச்சிகள்**




GARAGE

re KCT'S PLATFORM FOR RESEARCH & EXPLORATION

**தொழிலக ஆராய்ச்சிகள்**




TECHNOLOGY VISION 2020 TIFAC MISSION REACH




**போர்ஜ்**

கே.சி.டி.யின் ஒர் அங்கமான 'போர்ஜ்' வளர்ந்து வரும் நவீனத் தொழில்நுட்பத்தையும், கணினி அறிவியலையும் இணைத்து ரோபோட் தானியங்கிஇயந்திரங்களையும் செயற்கை அறிவூட்டல் கருவிகளையும், டிஜிட்டல் வணிகத்தையும் வளர்த்தெடுத்துப் பல்வேறு தொழில் துறைகளிலும் இந்த நுண்ணறிவுப் பயன்பாட்டைக் கொண்டுசெல்லும் நோக்கில் செயல்படுகிறது.

குமரகுரு கல்வி வளாகம்
சரவணம்பட்டி
கோயம்புத்தூர்
**0422 2661100**
**kct.ac.in**
**kctbs.ac.in**
**kclas.ac.in**
**kia.ac.in**





சுரங்கம்

டாக்டர் நா. மகாலிங்கம்

# ஜனாதிபதியால் நிலையான ஆட்சி

அருட்செல்வர் சரியாக 20 ஆண்டுகளுக்கு முன்பு (1999) இந்தியாவிலிருந்த அரசியல் கட்சி நிலவரங்களை ஆய்வு செய்து அன்றைக்குச் சவாலாக இருந்த நிலையற்ற ஆட்சியைப் பற்றி நீளச் சிந்தித்தார்.

ஆயிரத்திற்கும் மேற்பட்ட அரசியல் கட்சிகள் மலிந்துவிட்ட நிலையில், குட்டிக் கட்சிகளெல்லாம் பேரம் பேசிப் பெரிய கட்சிகளிடத்தில் ஆதாயம் அனுபவித்து வந்தன. இதனால், ஆட்சிக்கான ஸ்திரத்தன்மை என்பது கேள்விக்குறியாகிவிட்டது. ஏனெனில், ஆளும் கட்சியில் இடம்பெற்ற குட்டிக் கட்சிகள் விலகினால், ஆளும் கட்சிக்கு ஆபத்து வந்துவிடுகிறது. குட்டிக் கட்சிகளைத் திருப்திப்படுத்த குறிப்பிட்ட ஆளும் கட்சி, குட்டிக் கட்சிகளிடம் மண்டியிட வேண்டியுள்ளது.

இந்தத் துயரத்திலிருந்து இந்தியாவிலுள்ள பெரிய கட்சிகளான காங்கிரஸ் கட்சியையும், பா.ஜ. கட்சியையும் விடுவிப்பதற்கு அன்றைக்கு அருட்செல்வர் தந்த ஆலோசனை, இன்றைக்கும் சிந்திக்கத் தக்கதாகும். இம்மாதச் 'சுரங்கத்தில்' வாசகர்கள் எண்ணிப்பார்க்க அருட்செல்வரின் கட்டுரை வழங்கப்பட்டுள்ளது.

– இ.ஆர்.



1947 விடுதலைக்குப் பிறகு 1962 சீன ஆக்கிரமிப்பு வரை இந்திய நாட்டின் அரசியல் ஏறக்குறைய 15 ஆண்டுக்காலம் அமைதியும் அபிவிருத்தியும் ஆக்கப்பணிகளும் நிறைந்த காலமாக விளங்கிற்று. 'ஆசியஜோதி' என்று நாம் அன்போடு அழைத்த பண்டிட் ஜவஹர்லால் நேருஜி பாரதப் பிரதமராக இருந்தார்.

இந்த 15 ஆண்டுக் காலத்தில்தான் 'திட்டமிட்ட பொருளாதாரம்' என்ற ஒரு புதிய திசைவழியை நேருஜி அறிமுகப்படுத்தினார். அன்றைக்குச் செல்வாக்கோடு விளங்கிய சோவியத் யூனியனில் அமல்படுத்தப்பட்டு வந்த 7 ஆண்டுத் திட்டங்கள் பற்றி நேருஜி அறிந்து வந்தார். நம் நாட்டில் அதை 5 ஆண்டுத் திட்டமாக அமல்படுத்தத் தொடங்கினார்.

சமூகநீதி, சமயச் சார்பின்மை இரண்டையும் நேருஜி நேசித்தார். இத்துடன் எதிரும் புதிருமாக இருந்த அமெரிக்கா – ரஷ்யா ஆகிய இருபெரும் ராணுவ அமைப்புகளிலும் இடம்பெறாமல், மூன்றாம் உலகத்திற்கு நேருஜிதான் முதன்முதலாகக் குரல் கொடுத்தார். அவர் குரலில் இருந்த நம்பகத்

தன்மையினால்தான் நாற்பது, ஐம்பது நாடுகள் மட்டுமே அங்கம் வகித்துக் கொண்டிருந்த ஐ.நா. சபையில் 120–க்கும் அதிகமான நாடுகள் அங்கத்தினர்களாயின. இன்று அதன் எண்ணிக்கை 183.


நேருஜி

நேருஜி உருவாக்கிய பஞ்சசீலம் சீன தேசத்தோடு சிநேகிதமாக வாழ்வதற்கான சமாதான சகவாழ்வுக் கொள்கையாக உருவாக்கப்பட்டது. இதனையே இந்தியாவின் சர்வதேச வெளியுறவுக் கொள்கையாகவும் பின்பற்றினார்.

அவர் செய்த மாபெரும் தவறாக இன்றைக்கு விமர்சனம் செய்யப்படுவது ஒன்றே ஒன்றுதான். காஷ்மீர்ப் பிரச்சனையைப் பக்கத்தில் உள்ள ஓர் அந்நிய தேசத்தின் பிரச்சனையாகக் கருதி


பக்ராநங்கல் அணைக்கட்டு

இருந்தால், இந்திய ராணுவம் அங்கு உதவிக்குச் சென்றிருக்கும். பங்களாதேசம் போலக் காஷ்மீர் ஆகியிருக்கும்.

முதல் 15 ஆண்டுக் காலகட்டத்தில் முழுமையாக இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை நேருஜி நிறைவேற்றினார். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேறுவதற்குச் சற்று முன்பாக அவரை நாம் இழந்துவிட்டோம்.

நேருஜி காலத்தில் நிறைவேறிய ஆசியாவிலேயே பெரிய அணைக்கட்டுத் திட்டம் பக்ராநங்கல் திட்டமாகும். இதுபோலப் பல அணைக்கட்டுத் திட்டங்கள் நிறைவேறின. ஒரு தேசத்தின் முதுகெலும்பாக இருக்கக்கூடிய கனரக இஞ்சினியரிங் தொழிற்சாலைகள், எஃகுத் தொழிற்சாலைகள் எல்லாம் அவர் காலத்தில்தான் உருவாயின.

நேருஜியின் மறைவுக்குப் பிறகு ஐந்தாண்டுத் திட்டம் என்பது நேருஜி காலத்தில் இருந்ததைப் போல முக்கியத்துவம் பெறவில்லை.

லால் பகதூர் சாஸ்திரி, இந்திராஜி ஆகிய இந்த இரண்டு பிரதமர்களும் நேருஜிக்குப் பிறகு பாகிஸ்தான் யுத்தங்களைச் சந்தித்தார்கள். இதன் காரணமாக நமது பட்ஜெட்டினுடைய குணாம்சமே ராணுவ பலத்தை மனதில் கொண்டே தயாரிக்க வேண்டியதாகிவிட்டது. Defence & Development என்று பாதுகாப்பும் அபிவிருத்தியும் பட்ஜெட்டில் இடம்பெற வேண்டியதாகிவிட்டன.

சாஸ்திரியின் ஆட்சிக்காலம் மிகக் குறுகியது. அவரது குறுகிய ஆட்சிக்குப் பிறகு பிரதமராக இந்திராஜி பொறுப்பேற்றார். ஆனால், அவரது ஆட்சிக் காலம் முழுவதும் உள்கட்சித் தலைவர்களோடு நிலவிய கருத்து மோதல்களைச் சமாளிப்பதற்கே செலவிட வேண்டியதாகிவிட்டது.

இந்திராஜி தமது ஆட்சியைப் பாதுகாத்துக் கொள்வதற்காகக் கையாண்ட ராஜதந்திரம்தான் ராஜமான்ய ஒழிப்பு. வங்கிகளை தேசியமயமாக்கினார். மக்களிடம் அவை அமோக வரவேற்புப் பெற்றன.

வயதுவந்த குடிமக்கள் வாக்களிக்கும் ஜனநாயகத்தில் குடிமக்களே மன்னராகிய பிறகு, பழைய ராஜாக்களுக்கு மான்யம் எதற்கு என்று மக்களைக் கொந்தளிக்கச் செய்து தனக்கு ஆதரவாக்கிக் கொண்டார். உண்மையில், ராஜாக்களுக்கு வழங்கப்பட்ட மான்யம் மிகச் சொற்பத் தொகைதான். அதை ஒழிப்பதனால் இந்தியா முன்னேறிவிட்டது என்று சொல்லிவிட முடியாது.

அதுவும் இந்திய ஜனநாயகம், பிரிட்டிஷ் ஜனநாயகத்தின் சாயல் என்பார்கள். அத்தகைய பிரிட்டனில் இன்றைக்கும் மாட்சிமை தங்கிய மகாராணியைப் பெருமைப்படுத்துகிறார்கள். அது போன்ற பெருமையைத்தான் இந்தியா தமது மாஜி ராஜாக்களுக்கு வழங்கி வந்தது. இந்திராஜி அதை ரத்து செய்தது ஒரு புரட்சிகரமான நடவடிக்கையாகப் புகழப்பட்டது.

அவர் காலத்தில் தேசியமயமாக்கப்பட்ட

வங்கிகளில் இன்றைய தேதிவரை முடங்கிக் கிடக்கும் சேமிப்பு நிதி ஏறக்குறைய ரூ. 5 லட்சம் கோடிக்கும் அதிகம். வங்கிகளிடம் அந்தப் பெருந் தொகை வீணாகத் தேங்கிக் கிடக்கிறது. தேச அபிவிருத்திக்கு அதைப் பயன்படுத்த முடியவில்லை.

இந்திராஜிக்குப் பிறகு வந்த பிரதமர்கள் யாரும் அவர் அளவுகூட முத்திரை பதிக்கவில்லை. முன்னேற்றத்தைக் கொண்டுவரவில்லை.

ராஜீவ் காந்தியும், நரசிம்மராவும் தவிர, அவர் களுக்கு முன்னும் பின்னும் வந்த ஏறக்குறைய 9 பிரதமர்களும் மாதக்கணக்கில் மட்டும்தான் பிரதமர்களாக இருந்தார்களே தவிர, அவர்களின் ஆட்சிகள் ஓராண்டு தாண்டுவதற்கே படு சிரமப் பட வேண்டியதாகிவிட்டது. தனிக்கட்சி ஆட்சி அத்தியாயம் நரசிம்மராவோடு முடிந்து விட்டது.

நம்முடைய நாடாளுமன்ற அமைப்பில் அறுதிப் பெரும்பான்மை என்ற அளவுகோலை ஆட்சி அமைக்க வைத்துக்கொண்டு மெத்த சிரமப்படுகிறோம். 543 நாடாளுமன்ற உறுப்பினர் களில் 272 உறுப்பினர்களின் ஆதரவு இருப்பவர் களுக்கே ஆட்சி அமைக்க அரசியல் சட்டம் அனுமதிக்கிறது.

அந்த விதியைக் கடைப்பிடிக்க முடியாமல் நாம் பெற்ற அனுபவங்கள் கசப்பானவை. அந்த விதியைக் கட்டாயம் கடைப்பிடித்துத்தான் தீர வேண்டும் என்றால், உதிரிக்கட்சிகளையும், குட்டிக் கட்சிகளையும், மதவாதக் கட்சிகளையும், இனவாதக் கட்சிகளையும் அவர்களுடைய தீய ஆசைகளைத் திருப்தி செய்வதாக ஆதரவளித் துத் திரட்ட வேண்டியுள்ளது.

ஆகவே, ஆளும் கட்சியின் முதல் அத்தி யாயமே கடைசி அத்தியாயமாக முடிந்துவிடு கிறது. 1996–இல் ஐக்கிய முன்னணி ஆட்சி 14 கட்சிகளின் கூட்டணி ஆட்சியாக இருந்தது. ஆதரவு கொடுத்த சில கட்சிகள் ஆட்சியில் பங்கேற்கவில்லை. 'வெளியிலிருந்து ஆதரவு' என்ற புதிய சித்தாந்தத்தை உருவாக்கி ஆட்டிப் படைக்கும் சூத்திரதாரியாக அவர்கள் அமர்ந்து கொண்டார்கள்.

அரசியல் சட்டத்தின் எண்ணிக்கை விளை யாட்டான 272 எம்.பி.க்கள் எந்தத் தனிக் கட்சிக்கும் தேர்தல் மூலம் இனி, கிடைப்பதற்குச் சாத்தியம் இல்லை.

ஆனால், நரசிம்மராவுடைய ஆட்சியேகூட 272 நாடாளுமன்ற உறுப்பினர்களின் ஆதரவைப் பெற முடியவில்லை. முன்னாள் பிரதமர் சரண்



திருமதி. இந்திரா காந்தி

சிங்கின் குமாரர் அஜித்சிங் ஜனதாதளத்திலிருந்து 7 நாடாளுமன்ற உறுப்பினர்களோடு காங்கிரஸ் கட்சியில் இணைந்ததால்தான், நரசிம்மராவ் ஆட்சி தப்பியது.

கட்சித்தாவல் தடைச் சட்டத்தை அஜித்சிங் பிரச்சனையில் கடைசிவரை மத்திய அரசு அமல் படுத்தவேயில்லை. இதனைப் பலரும் தொடர்ந்து சுட்டிக்காட்டி வந்தார்கள்.

தனிக்கட்சி ஆட்சி இந்திய ஜனநாயகத்தில் இனிமேல் சாத்தியமே இல்லை என்கிற அள விற்குப் பலவீனப்பட்டுவிட்டது. பின்னர் தோன்றிய ஐக்கிய முன்னணிக் கூட்டணி ஆட்சியும், பாரதிய ஜனதா கூட்டணி ஆட்சியும் கடந்த 3 ஆண்டு களில் பெரிய அலங்கோலங்களைச் சந்தித்தன. இப்போதுள்ள தேசிய ஜனநாயகக் கூட்டணி 18 கட்சிகளின் கூட்டணிதான். இதற்கு வயது 1 ஆண்டுதான் ஆகிறது.

இன்றைய சூழ்நிலையில் கூட்டணி ஆட்சிக்கு 14 கட்சிகள், 18 கட்சிகள் என்று திரட்டுவது 'குதிரை பேரமாகவே' ஆகிவிட்டது. கூட்டணி ஆட்சியில் உள்ள இரண்டு மூன்று கட்சிகளைத் தவிர, மீதமுள்ள 10–க்கும் அதிக மான கட்சிகள் மிகச் சொற்பமான நாடாளுமன்ற உறுப்பினர்களை வைத்துக்கொண்டு, மிரட்டியே மீன் பிடிப்பவையாக உள்ளன.

சுருக்கமாகச் சொன்னால், எதிர்க்கட்சி களின் பணியை ஆளுகின்ற கூட்டணிக் கட்சி களே செய்கிற விந்தை இந்த 3 – 4 ஆண்டுகளில் அதிகமாகவே நடந்திருக்கிறது.

சென்ற 4 ஆண்டுகளும், அதற்கு முந்தைய 5 ஆண்டுகளும் ஆக மொத்தம் 9 ஆண்டுக்கால மாக இந்தியப் பொருளாதார அபிவிருத்தியைப்

பற்றிய அக்கறை ஆட்சியாளர்களுக்குக் குறைந்துவிட்டது. ஆண்டுக்கு ரூ. 30 ஆயிரம் கோடிக்கும் அதிகமாகக் கடன் வாங்கித்தான் ஆட்சியை அவர்கள் நடத்திக் கொண்டிருக்கிறார்கள்.

இன்றைய தேதியில் நமது அரசின் கடன் ரூ. 10 லட்சம் கோடி. ஆண்டு தோறும் நாம் செலுத்துகிற வட்டித்தொகை ரூ. 1 லட்சம் கோடி. இத்துடன் ராணுவத்திற்கு ரூ. 52 ஆயிரம் கோடி. பெட்ரோல் இறக்குமதிக்கு ரூ. 30 ஆயிரம் கோடி. மாநில அரசுக்குத் தரப்பட வேண்டிய தீர்வைப் பங்கு ரூ. 30 ஆயிரம் கோடி. மத்திய அரசு ஊழியர்கள் சம்பளம் ரூ. 33 ஆயிரம் கோடி. இவற்றின் மொத்தத் தொகை ரூ. 3 லட்சத்து 33 ஆயிரம் கோடி.


திரு. ராஜீவ் காந்தி

பட்ஜெட் வரவு ரூ. 2 லட்சத்து 83 ஆயிரம் கோடி. ஆண்டு தோறும் துண்டு விழும் தொகை ரூ. 50 ஆயிரம் கோடியாகும். அபிவிருத்தித் திட்டங்களுக்கான செலவுகளுக்கு எந்த நிதி வசதியும் மத்திய அரசிடம் இல்லை.

இவற்றைப் பற்றியெல்லாம் அக்கறையோ, ஆழமான ஞானமோ, ஆட்சியைப் பிடிப்பவர்களுக்கு இருப்பதில்லை. அவர்கள் முன்னுரிமை அளிப்பது ஆட்சியையும் பதவிகளையும் தக்க வைத்துக் கொள்வதற்குத்தான்.

நமது தேசத்தில் ஏறக்குறைய 10 ஆண்டுக் காலமாகப் பொருளாதார அபிவிருத்தி வீழ்ச்சியடைந்துவிட்டது என்பதற்கான அடையாளம்தான் இன்றைக்கு ஏற்பட்டிருக்கிற தொழில் துறைத் தேக்க நிலை. பங்குச் சந்தை வீழ்ச்சியடைந்துவிட்டது. எஞ்சினியரிங் தொழிற்சாலைகளின் உற்பத்தி குறைந்து விட்டது. டெக்ஸ்டைல்ஸ் நலிவடைந்து விட்டது. பல நூற்பாலைகள் மூடப்பட்டுவிட்டன. சர்க்கரை ஆலைகள் நஷ்டமடைந்துவிட்டன.

விவசாயத்துறையில் மட்டும்தான் நாம் நமது நிலையைப் பராமரித்து வந்து கொண்டிருக்கிறோம். போதுமான உணவு தானிய உற்பத்தியினால் நமது நாட்டில் பஞ்சம் ஏற்படாமல் தடுத்து வருகிறோம். விவசாயத்துறையிலும் வீழ்ச்சியடைந்திருந்தால் நிலைமையைச் சமாளிக்க முடியாமல் போயிருப்போம்.

பதவிக்காகப் போட்டி போட்டுக் கொண்டிருக்கின்ற இந்தக் கட்சிகள் தேசியப் பிரச்சனை எதைப் பற்றியும் தங்கள் தேர்தல் அறிக்கையில் குறிப்பிடுவதில்லை.

இதுவரை 272 நாடாளுமன்ற உறுப்பினர்கள் என்ற அறுதிப் பெரும்பான்மை எண்ணிக்கையை வைத்துத் தான் ஆட்சி அதிகாரத்தை ஒரு கட்சிக்கோ அல்லது பல கட்சிகளின் கூட்டணிகளுக்கோ ஒப்படைத்தோம்.

குடியரசுத் தலைவருக்குச் சிறப்பு அதி காரங்கள் பல உள்ளன. அவற்றைப் பயன்படுத்தித் தேர்தல் முடிந்தபிறகு அதிக எண்ணிக்கையில் வெற்றி பெற்றுள்ள இரண்டு கட்சிகளை இணைத்து ஒரு தேசிய அரசை உருவாக்குமாறு குடியரசுத் தலைவர் இரண்டு கட்சித் தலைவர் களையும் கேட்டுக் கொள்ளலாம். அந்த அரசில் ஏற்படுகிற அமைச்சரவைப் பிரச்சனைகளை அவ்வப்போது தலையிட்டுக் குடியரசுத் தலைவரே நிவர்த்தியும் செய்யலாம்.

இரண்டாவது உலக யுத்தக் காலத்தின்போது இங்கிலாந்தில் தொழில் கட்சியும், கன்சர்வேட்டிவ் கட்சியும் இணைந்து ஆட்சி நடத்தின. அமெரிக்காவில் ஜனநாயகக் கட்சியும், குடியரசுக் கட்சியும் இணைந்து ஆட்சி நடத்தின. இதேபோல் இந்தியாவில் ஏற்பட்டுள்ள இன்றைய நிதி நெருக்கடிக் காலகட்டத்தில் காங்கிரசும், பா.ஜ.க.வும் இணைந்து ஆட்சி செய்ய வேண்டும்.

பெரிய கட்சிகள் இரண்டு சேர்ந்து ஆட்சி செய்யத் தயாராகிவிட்டால், குட்டிக் கட்சிகள் எல்லாம் அடங்கி ஒடுங்கிப் போய்விடும். ஏனெனில், குட்டிக் கட்சிகளின் ஆதரவு இரண்டு பெரிய கட்சிகளுக்கும் அவசியமே இல்லை.

இத்தகைய ஒரு நடவடிக்கையின் மூலம்தான் நிலையான ஆட்சியை நமது ஜனநாயகத்தில் சாத்தியமாக்க முடியும். பொருளாதார அபிவிருத்தி நடவடிக்கைகளைத் துரிதப்படுத்த முடியும்.

நம்மை வழி நடத்திச் செல்லப் பொறுப்பேற்றுள்ள நமது தலைவர்களுக்கு ஏற்பட்டாக வேண்டிய சிந்தனை பதவியைவிடக் கட்சிதான் பெரிது. உண்மையில் கட்சியையும், பதவியையும் விட தேச நலனே பெரிது என்பதாகும்.

●

# சக்தி பிரிமியர் லீக் – 2018
# கிரிக்கெட் விளையாட்டுப் போட்டிகள்




ரூ. 50 ஆயிரம் பரிசுத்தொகையை எஸ்.பி.எல்.-2018 கிரிக்கெட் இறுதிப்போட்டியில் வெற்றி பெற்ற பொள்ளாச்சி கோர் சாஃப்ட் குளோபல் – ஏ அணிக்கு, என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் வழங்குகிறார்.

**1931–**ஆம் ஆண்டு பொள்ளாச்சியில் திரு. ப. நாச்சிமுத்துக்கவுண்டர் அவர்களால், 21 பேருந்துகளுடன் தொடங்கப்பட்ட 'ஆனைமலைஸ் பஸ் டிரான்ஸ்போர்ட்' (ஏ.பி.டி.) நிறுவனம், சக்தி குழும நிறுவனங்களுக்கு அடித்தளமாக, தாய் நிறுவனமாக அமைந்தது.

பின்னர் அருட்செல்வர் நா. மகாலிங்கம் ஐயா அவர்களால், பல்வேறு தொழில்களாக வளர்ந்து பொள்ளாச்சிக்குப் பெருமை சேர்த்தது. இன்று இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலும், வெளிநாடுகளிலும் சக்தி குழும நிறுவனங்கள் பல்வேறுபட்ட தொழில்களில் சாதனைகள் படைத்து வருகின்றன.

இந்த சக்தி குழும நிறுவனங்களுக்கிடையே உள்ள நல்லுறவை மேம்படுத்தும் நோக்குடனும், பணிபுரியும் பணியாளர்களிடம் நட்புறவை வளர்க்கவும் கடந்த 2016–ஆம் ஆண்டு, என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் தாளாளர் திரு. மா. ஹரிஹர சுதன் அவர்களின் வழிகாட்டுதலின்படி, முதன்முதலாக "சக்தி பிரிமியர் லீக் (SPL)" விளையாட்டுப் போட்டிகள் கோவை குமரகுரு பொறியியல் கல்லூரியில் கிரிக்கெட் போட்டிகளும், இறகுப்பந்துப் போட்டிகளும் நடத்தப்பட்டன.

தொடர்ந்து நடந்து வரும் இந்தப் போட்டிகள் இந்த ஆண்டு, SPL-2018 என்ற பெயரில், பொள்ளாச்சி நாச்சிமுத்து பாலிடெக்னிக் கல்லூரி

எஸ்.பி.எல்.-2018 கிரிக்கெட் இறுதிப் போட்டியில் இரண்டாம் இடம் பெற்ற பொள்ளாச்சி 'டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரி அணியினருடன், என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் தாளாளர் திரு. மா. ஹரிஹரசுதன், என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் செயலர் முனைவர் சி. இராமசாமி.






எஸ்.பி.எல் – 2018 கிரிக்கெட் இறுதிப் போட்டியைக் கண்டு ரசிக்க வந்த என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம், ஸ்ரீ சாமுண்டீஸ்வரி சுகர்ஸ் நிர்வாக இயக்குநர் திரு. ம. ஸ்ரீநிவாசன், கல்லூரித் தாளாளர் திரு. மா. ஹரிஹரசுதன் ஆகியோர்.

மற்றும் டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில் நுட்பக் கல்லூரி வளாகம், பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி வளாகம் மற்றும் பொள் ளாச்சி PIET பொறியியல் கல்லூரி வளாக மைதா னங்களில் 2018 டிசம்பர் 1–ஆம் தேதி முதல் 9–ஆம் தேதி வரை நடத்தப்பட்டன.

ஆம் தேதி முதல் 9.12.2018 வரை பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரியில் நடைபெற்றன.

9 நாட்கள் நடைபெற்ற கிரிக்கெட் போட்டி களில், மொத்தம் 72 போட்டிகள் நடைபெற்றன. இவற்றின் இறுதிப்போட்டிகளும், அதற்கான பரி




எஸ்.பி.எல். – 2018 கிரிக்கெட் போட்டியைக் கண்டு ரசிக்கும் ஏ.பி.டி. – சக்தி நிறுவனங்களின் பணியாளர்களுடன் கல்லூரித் தாளாளர் திரு. மா. ஹரிஹரசுதன், கல்லூரி முதல்வர் திரு. ஏ. இரத்தினவேலு ஆகியோர்.

சக்தி குழுமத்தின் பல்வேறு நிறுவனங் களைச் சேர்ந்த 30 அணிகளின் சார்பாக, சுமார் 500 விளையாட்டு வீரர்கள் இப்போட்டிகளில் பங் கேற்றனர்.

பெண்களுக்கான இறகுப்பந்துப் போட்டியில் சக்தி சக்தி குழுமங்களைச் சார்ந்த 37 அணிகள் கலந்து கொண்டன. இப்போட்டிகள் 7.12.2018

சளிப்பு விழாவும் பொள்ளாச்சி நாச்சிமுத்து பாலிடெக்னிக் கல்லூரி மற்றும் டாக்டர் மகா லிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரி வளாகத்தில் 9.12.2018 அன்று நடைபெற்றன.

SPL – 2018 குறித்து, என்.ஐ.ஏ. கல்வி நிறு

*தொடர்ச்சி 51–ம் பக்கம்*

'நமது நம்பிக்கை' ஆசிரியர் 'கலைமாமணி' கவிஞர் 'மரபின் மைந்தன்' அவர்களின் பூர்வீகம் திருக்கடவூர் வட்டாரம் என்றாலும், அவரைக் கொடுத்த திருக்கொடையூர் கோவை என்றால், அது மிகையல்ல.

பொதுவாக, இளைஞர்கள் ஆன்மீக நாட்டம் இல்லாதவர்களாக இருப்பது ஆச்சரியமல்ல. ஆனால், இளமை முதற்கொண்டே மரபின் மைந்தன் முத்தையாவின் மரபு, அவருடைய ஆன்மீக அடர்த்திதான்.

பாரம்பரியமிக்க சைவக் குடும்பத்தில் உருவான கவிஞர், தனது இயல்பான நல் ஒழுக்கங்களால் சான்றோர்களைச் சந்தித்தது இயல்பானதுதான். அச்சான்றோர்களைப் பற்றி 'ஓம் சக்தி'யில் '**பழகிப் பார்த்ததில் இவர்கள்**' என்ற ஒரு நடைச்சித்திரத் தொடர் எழுத முன்வந்த காரணம், 'ஓம் சக்தி'யினுடைய அருட்செல்வரின் அருள்தான்.

இந்த இதழில் அறிஞர் அ.ச. ஞா. பற்றி நிறையச் செய்திகள். அதில், மார்க்சியவாதி புலவர் ஆதியை அவர் தொட்டுக் காட்டியுள்ள வரிகள், கொள்கை வேறுபாடுகளைவிட மனித நேயம்தான் மரபின் மைந்தனுக்கு மகத்தானதாக உள்ளது என்பதைக் காட்டுவதை அறியலாம்.

வாசகர்கள் நிச்சயம் இத்தொடரை வரவேற்பார்கள். காரணம், இதில் வரலாற்றுப் பதிவுகள், இலக்கியத் தெறிப்புகள், கலை நுணுக்கங்கள் எனப் பல அம்சங்களும் இடம்பெற்றுள்ளன. வாசித்துப் பாருங்கள்.

– இ.ஆர்.

# பழகிப் பார்த்ததில் இவர்கள்... 1

"அய்யா ஒரு சந்தேகம்! சிலப்பதிகாரத்தில் மாதவியை "பிறப்பிற் குன்றா பெருந்தோள் மடந்தை"ன்னு சொல்றார். ஒரு பெண்ணைப் பெருந்தோள் மடந்தைன்னு சொல்றது பொருத்தமா இருக்குமா?" இந்தக் கேள்வியை உள்வாங்கிய படியே வியப்புடன் பார்த்தார் அறிஞர் அ.ச. ஞானசம்பந்தன். (அப்போது அவருக்குப் பார்வை சற்றே மங்கலாக இருந்தது). ஏனெனில், கேட்டவன் பள்ளிச் சீருடையில் இருந்த சிறுவன்


அ.ச.ஞா.

"அதாவது தம்பி! தோள் என்பது காக்கும் திறனைக் குறிக்கும். மாதவி வீட்டில் ஆண்கள் கிடையாது. இவள் ஆடல் கலையினால் தன் குடும்பத்தையும் சார்ந்தவர்களையும் வாழ வைக்கிறாள் இல்லையா! அதனால பெருந்தோள் மடந்தைன்னு இளங்கோவடிகள் பாடியிருக்கலாம்" சற்றே நிதானித்தவர், "பெரிய புராணத்துல திருஞான சம்பந்தர் பற்றிச் சேக்கிழார் ஒண்ணு சொல்றார்" என்றதும், அந்தச் சிறுவன் முந்திரிக் கொட்டை மாதிரி முந்திக் கொண்டு "சிறிய பெருந்தகை" என்றான்.

அகமகிழ்ந்து போன அ.ச.ஞா. "பலே...! பலே...!" என்று அவருக்கே உரிய உரத்த குரலில் சிலாகித்த வண்ணம் தட்டிக் கொடுத்தார். இந்நேரம் அந்தச் சிறுவன்தான் இந்தக் கட்டுரை ஆசிரியன் என யூகித்திருப்பீர்கள்.


மரபின் மைந்தன் முத்தையா

அ.ச.ஞா. அவர்களின் உரத்த குரல் கேட்டு அவரருகில் வந்தார், கோவையின் மிக மூத்த தமிழறிஞராகவும், அ.ச.ஞா.–வின் தலை மாணாக்கராகவும் விளங்கிய பேராசிரியர் ம.ரா.போ. குருசாமி அவர்கள்.




என்னைக் காட்டி அ.ச.ஞா.–விடம் "இது யார் தெரியுதா? திருக்கடவூர் கனகசபைப் பிள்ளை பேரன்" என்றார்.




நினைவஞ்சலிக் கூட்டத்தில் மரபின் மைந்தன் முத்தையா உரையாற்றுகிறார். உடன் நீதியரசர் எஸ். செங்கோட்டுவேலன், கயிலை மாமுனிவர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார், திரு. ஜி.கே. சுந்தரம், திரு. சாம்பமூர்த்தி, முனைவர் அறிவொளி, டாக்டர் பி.கே. கிருஷ்ணராஜ் வாணவராயர், மற்றும் முனைவர் ம.ரா.போ. ஆகியோர்.

"அடேடே! அப்படியா? ஒங்க கொள்ளுத் தாத்தா கைலாசம் பிள்ளை எனக்கு ஃபிரெண்டு" என்றபடியே என் வயிற்றில் செல்லமாய்க் குத்தி விட்டு நகர்ந்தார் அ.ச.ஞா.

கோவை அவருக்கு விருப்பமான நகரங்களில் ஒன்று. அவருடைய ஒவ்வொரு வருகையையும் கோவை கொண்டாடித் தீர்த்தது. அவர்கள் குடும்பத்திற்கு மிகவும் உகந்த வழிபாட்டுத் தெய்வம் அவிநாசி ஆலயத்தில் கோவில் கொண்டுள்ள தேவி கருணாம்பிகை.

அவர் மனதுக்கு மிகவும் நெருங்கிய புரவலர்கள் கம்பன் அறநெறிச் செல்வர் திரு. ஜி.கே. சுந்தரம், அருட்செல்வர் நா. மகாலிங்கம், திரு. ஆர். துரைசாமி நாயுடு முதலியோர். பிற்காலத்தில் ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் அதிபர் திரு. ம. கிருஷ்ணனும் அந்தப் பட்டியலில் சேர்ந்தார்.



ம.கிருஷ்ணன்

அப்போதெல்லாம் கோவையில் பிப்ரவரி மாதம் கம்பன் விழாவும், மார்ச் மாதம் சிலப்பதிகார விழாவும் நிகழும். அதே கால கட்டத்தில் கோவையின் இரு பெரும் பெண் தெய்வங்களாகிய கோனியம்மன், தண்டுமாரியம்மன் ஆலயங்களின் திருவிழாக்களும் நிகழும்.

எனவே, கம்பன் விழாவுக்

கும் சிலப்பதிகார விழாவுக்கும் வருகிற அறிஞர்களைக் கொண்டு அந்த ஆலயங்களில் நிகழ்ச்சிகள் நடத்த ஒழுங்கு செய்வார் அப்போது கோவை வாசியாக இருந்த திரு. சுகி. சிவம்.

7 மணிக்கு சிலப்பதிகார விழாவில் அ.ச.ஞா. அவர்கள் உரையைக் கேட்டுவிட்டு, இரவு 9 மணிக்கு மேல் ஆலயங்களில் அவர் தலைமையில் நிகழும் பட்டிமண்டபங்களையும் கேட்டு விட்டு வீடு திரும்புவோம். மாணவப் பருவத்தில் எங்களுக்கான "நைட்ஷோக்கள்" தரமான இலக்கிய நிகழ்ச்சிகளே.


திரு.வி.க.


ஜி.கே.சுந்தரம்

அப்படி தண்டுமாரியம்மன் கோவிலில் ஒரு முறை அ.ச.ஞா. தலைமையில் ஒரு பட்டிமண்டபம் நிகழ்ந்தது. இராமாயணத்தின் எதிர்நிலைப் பாத்திரமாகிய இராவணன், மகாபாரதத்தின் எதிர்நிலைப் பாத்திரமாகிய துரியோதனன் ஆகியோரைப் பற்றிய விவாதம் மேடையில் நிகழ்ந்தது.

அ.ச.ஞா. தன்னுடைய தீர்ப்புரையில், அந்தப் பாத்திரங்களின் செயல்கள் வழியாக அவர்தம் உளவியலை ஆராய்ந்தார்.

இராவணனின் அத்தனை தவறுகளுக்கும் காரணம் அகங்காரம், துரியோதனனின் அத்தனை தவறுகளுக்கும் காரணம் அறியாமை என்று வகுத்துக் கொண்டு, அகங்காரத்திற்கும் அறியாமைக்கும் நடுவிலான வேற்றுமையின் பரிமாணங்களை விளக்கினார்.

வழக்கமாக காவிய நிகழ்வுகளை மட்டுமே பேசாமல், பாத்திரங்களின் உளவியலை அலசி ஆராய்ந்தது ஒரு பெரும் திறப்பாக இருந்தது.

கோவையில் திருவள்ளுவர் விழா – கம்பன் விழா – சிலப்பதிகார விழா – சேக்கிழார் விழா முதலியவை பெரும் இலக்கியக் கூடுகைகளாக இருக்கும். இரண்டு நாட்கள் விழா என்றால், அறிஞர்கள் இருநாட்களும் தங்கியிருந்து ஒன்றாகக் கலந்து பேசி வெவ்வேறு விஷயங்களை விவாதித்து மகிழ்வார்கள்.

அத்தகைய கூடுகைகளில் அ.ச.ஞா. நடுநாயகமாக அமர்ந்திருப்பார். ம.ரா.போ. குருசாமி, இருசுப்பிள்ளை, இரா.செல்வக்கணபதி, தெ.ஞானசுந்தரம், சோ.சத்தியசீலன், அ.அறிவொளி, சுகிசிவம் என அத்தனை பேர்களும் அவர் அறையில் குழுமியிருக்க, அவர்களில் கடைக்குட்டியாகிய நான் வியப்புடன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பேன். "அந்த நாளும் வந்திடாதோ" என இப்போது எண்ணத் தோன்றுகிறது.

எல்லோரையும் ஒருமையில் அழைத்துப் பேசும் உரிமையும் வயதும் அ.ச.ஞா. அவர்களுக்கே இருந்தது.

அ.ச.ஞா.–வின் முத்து விழா கோவையில் நிகழ்ந்தது. அந்த நாட்களில் பார்வையை முற்றாக இழந்திருந்தார் அ.ச.ஞா. அவருடைய அருமையான புகைப் படம் ஒன்று முத்துவிழா மலரின் அட்டையில் அச்சாகியிருந்தது. ம.ரா.போ குருசாமி அவர்கள் தன் ஆசிரியரிடம் போய், "சார்...! உங்க படம் பிரமாதமா வந்திருக்கு! என்ன செய்ய... “காணநோற்றிலன் கமலக் கண்களால்” என்று கம்பராமாயண

வரியைப் பொருத்தமாகச் சொன்னார். (அசோகவனத்தில் சீதை தவம் செய்வதைப் பார்த்து, இராமனை நினைந்து அனுமன் சொல்லும் வாசகம் அது).

ஜி.கே.எஸ். அவர்களின் புதல்வர் திரு. கரிவரதன் விமான விபத்தில் காலமானார். அந்தச் சம்பவம் நடந்து பல மாதங்களுக்குப் பிறகு ஜி.கே.எஸ். இலக்கிய நிகழ்ச்சி ஒன்றில் தலைமையேற்றார். சிறப்புரை அ.ச.ஞா.

தன் உரையில் அவர் சொன்ன வாசகம், "முதுமைக் காலத்தில் புத்திர சோகத்தைக் கடந்து வந்தவர் இருவர். ஒருவர் டி.கே.சி. இன்னொருவர் ஜி.கே.எஸ். இருவருக்கும் கம்பன்தான் துணை."

யாழ்ப்பாணம் யோகர் சுவாமிகள் முதலிய ஞானியருடனும் வ.உ.சி., திரு.வி.க., தெ.பொ.மீ. முதலிய சான்றோர்களுடனும் நெருங்கிப் பழகிய அ.ச.ஞா. அந்த அனுபவங்களை "நான் கண்ட பெரியவர்கள்" என்னும் தலைப்பில் நூலாக வடித்தார்.

அந்த நூலிலேயே "நான் காணும் இளையோர்" என்னும் தலைப்பில் அடுத்தடுத்த தலைமுறைப் பேச்சாளர்கள் பற்றியும் எழுதியிருந்தார். அந்த வரிசையில் என்னைப் பற்றியும் ஒரு பத்தி இடம்பெற்றிருந்தது.

நான் அ.ச.ஞா.–விடம் "அய்யா! நான் எல்லோர்கிட்டேயும் "நான் கண்ட பெரியவர்கள்"ங்கிற அட்டையைக் காட்டுவேன். அப்புறம், நீங்க என்னைப் பத்தி எழுதியிருக்கிற பத்தியைக் காட்டுவேன்" என்றதும் வெடித்துச் சிரித்து "அட அயோக்கியா" என்றார்.

சென்னை செல்லும் போதெல்லாம் அவரைச் சந்தித்து மீள்வேன். கவிஞர் வைரமுத்துவின் பல அறுசீர் விருத்தங்களையும், எண்சீர் விருத்தங்களையும் ஒருமுறை அவருக்குச் சொல்லிக் காட்டினேன். "அடேயப்பா! மார்வலஸ்டா" என்று சிலாகிப்பார்.

அப்போது காவ்யா சண்முக சுந்தரம், "வைரமுத்து கலை இலக்கியத் தடம்" என்றொரு கட்டுரைத் தொகுப்பைத் தயாரித்துக் கொண்டிருந்தார். நான் கேட்டுக் கொண்டதற்ிணங்க, அந்த நூலுக்கு ஒரு கட்டுரையும் வழங்கினார் அ.ச.ஞா.

அ.ச.ஞா.–வைச் சந்திக்க கவிஞர் வைரமுத்து விரும்பினார். அழைத்துச் சென்றிருந்தேன். உள்ளே நுழைந்ததுமே "வைரமுத்து எனக்குப் பேரன்" என்று தொடங்கினார். எனக்குப் புரியவில்லை. "இவங்க மாமனார் முருகேசன் என் ஸ்டூடண்ட். அப்போ வைரமுத்து எனக்குப் பேரன்தானே" என்றார்.

தன்னைத் தன் குருநாதர் தெ.பொ.மீ., மறைவுக்குப் பின்னரும் சூட்சுமமாக வழி நடத்துவதை உள்ளுணர்வால் உணர்ந்து அவ்வப்போது மறைமுகமாகச் சொல்வார்.

பொள்ளாச்சி தமிழிசைச்சங்கம் நடத்திய நிகழ்வில் இரண்டு நாட்கள் உரைகள் நிகழ்த்திவிட்டு அத்துடன் மேடையில் பேசுவதை நிறுத்தப் போவதாக அ.ச.ஞா. அறிவித்திருந்தார்.

இது நடந்து கொஞ்ச காலங்களுக்குப் பிறகு ஸ்ரீகிருஷ்ணா ஸ்வீட்ஸ் திரு.ம.கிருஷ்ணனுக்கு சுழற்சங்கம் "துறைமாண்புச் செம்மல்" விருது அறிவித்தது. அந்த விழாவிற்கு அ.ச.ஞா.–வை அழைக்க திரு.கிருஷ்ணன் விரும்பினார். தொலைபேசியில் அழைத்துக் கேட்டேன்.

குரலைக் கேட்டே அடையாளம் கண்டுபிடித்து விடுவார் "என்ன முத்தையா?" என்றார். விபரம் சொன்னவுடன் "எனக்கு உத்தரவானா வரேன். இரண்டு நாள் கழிச்சு


புலவர் ஆதி

சொல்றேன்" என்றார். பின்னர் ஒப்புதல் தந்தார்.

பேசுவதை நிறுத்திய அதே கொங்கு மாவட்டத்தில் மீண்டும் மேடைகளில் பேசத் தொடங்கினார். அவர் திரு.கிருஷ்ணன் இல்லத்திற்கு வந்தபோது அருள்நிலையிலும் அவர் பழுத்திருந்ததன் அடையாளமாய் ஒரு சம்பவமும் நிகழ்ந்தது. அதனை அ.ச.ஞா. நூற்றாண்டு மலரில் திரு. கிருஷ்ணனே கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்.

"என் வேண்டுகோளினை ஏற்று என் இல்லத்தில் மதிய உணவுக்கு வரச் சம்மதித்தார்.

குடும்பத்தினர் ஒவ்வொருவராய் வந்து அவரைப் பணிந்து ஆசி பெற்றனர். திருநீறு பூசினார். அவரால் பார்க்க இயலாது என்பதால் ஒவ்வொருவரையும் அறிமுகம் செய்து வந்தேன்.

என் தாயார் ஆசி பெற வந்தார். 'அம்மா..' என்றதும் சில விநாடிகள் மௌனமான அவர், "உடம்பு சரியில் லையா? வைத்தியம் பார்த்துகிட்டிருக்காங்களா?" என்றார்.

என் தாயார் அப்போது சிறுநீரகச் செயலிழப்புக்காக வாரம் இரண்டு மூன்று முறையேனும் மருத்துவமனை போய் டயாலிசிஸ் செய்து கொண்டிருந்தார்.

வாரம் இரண்டு, மூன்று முறை மருத்துவமனைக்குச் சென்று வருவது வேதனையாக இருக்கிறது என்று என் தாய் சொன்னவுடன் "கொஞ்ச நேரம் என்னை யாரும் தொடாதீங்க" என்று குரல் கொடுத்த அ.ச.ஞா. தியானித்து திருநீறு பூசிய கையுடன் என் பக்கம் திரும்பி," இனிமே அம்மா மருத்துவமனைக்கு போக வேண்டிய அவசியம் குறைஞ்சுடும்" என்றார்.

நான் அமைதியாகக் கேட்டுக் கொண்டேன். காரணம் அப்போதெல்லாம் டயாலிசிஸ் சிகிச்சைக்கு மருத்துவமனை சென்றே ஆக வேண்டும். ஏதோ ஆசீர்வாதமாகக் கூறுகிறார் என்று விட்டு விட்டேன்.

அடுத்த முறை அம்மாவை மருத்துவமனைக்கு அழைத்துப் போன போது மருத்துவர் என்னை அழைத்து, “கிருஷ்ணன்! ஹோம் டயாலிசிஸ் என்றொரு சிகிச்சை முறை வந்துவிட்டது. இனி அம்மா வீட்டிலேயே சிகிச்சை செய்து கொள்ளலாம்” என்றவுடன் நான் மலைத்துப் போனேன்.

இந்தச் சம்பவம் நிகழ்ந்தபோது பேராசிரியர் ம.ரா.போ., பேராசிரியர் இருசுப்பிள்ளை, நான் ஆகியோர் உடனிருந்தோம்.

அ.ச.ஞா. அவர்கள் மிகவும் உடல் நலிவுற்று இருக்கிறார் என்று கேள்விப்பட்டுத் தொலைபேசியில் அழைத்தேன். "எப்படி இருக்குங்க அய்யா?" என்றேன். "ஒண்ணும் சொல்றாப்பலே இல்லேய்யா" என்றார்.

சில நாட்களுக்குப் பிறகு அவரின் மறைவுச் செய்தி வந்தது. கோவையில் அவருக்கு அஞ்சலிக் கூட்டம் நிகழ்த்தினோம். பேரூராதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார், திரு.ஜி.கே.எஸ்., திரு. கிருஷ்ணராஜ் வாணவராயர், திரு.ஆர்.துரைசாமி நாயுடு, நான் ஆகியோர் அஞ்சலி உரைகள் நிகழ்த்தினோம்.

அப்போது தாமாக முன்வந்து மேடையேறி புலவர் ஆதி பேசினார். தனக்குக் காவல்துறை கடும் உளைச்சலைத் தந்து கொண்டிருந்த காலத்தில் இவர் ஒரு தமிழ்ப்புலவர் என்று தெரிந்த மாத்திரத்தில் மேற்படி அறிமுகமேயில்லாத நிலையிலும் ஐ.ஜி. அருளிடம் பேசி தன் பெயரை சந்தேகப்பட்டியலில் இருந்து நீக்கச் செய்தவர் அ.ச.ஞா. என அழுதபடியே தெரிவித்தார் ஆதி.

அந்த நிகழ்வில் கோவை கம்பன் கழகச் செயலாளரும், என் பள்ளிப் பருவத் தமிழாசிரியருமான புலவர் க.மீ.வெங்கடேசன் அவர்கள் சொன்ன ஒரு வாசகம், அடிக்கடி என் நினைவில் நிழலாடும்.

"நம்மோடு வாழ்ந்த நல்லறிஞர் அய்யா ஞானசம்பந்தம் அவர்கள் ஊன சம்பந்தம் நீங்கி வான சம்பந்தம் எய்தினார்"

***(நினைவுகள் தொடரும்)***

# கோவை சூலூர் விமான தள எரிப்பு!

அருட்செல்வர் முயற்சியால் ‘கொங்கு நாட்டில் இந்திய சுதந்திரப் போராட்டம்’ என்ற ஒரு தொகுப்பு நூல் 40 ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டு வெளியிடப்பட்டது. அதனுடைய வரலாற்றுப் பக்கங்களை எழுதியவர்கள் தியாகி கே.பி. திருவேங்கடம், தியாகி பி. வேலுச்சாமி, தியாகி பி. சுப்பிரமணியம் ஆகிய மூவரும்தான்.

இம்மூவரும் தயாரித்து வைத்திருந்த போராட்ட வரலாற்றை நூலாக வெளியிட அருட்செல்வரிடம் சமர்ப்பித்தார்கள். அருட்செல்வர் அதைப் படித்துப் பார்த்து, பேரா. இராம. இருசுப்பிள்ளை, அருட்செல்வரின் உதவியாளர் திரு. பெ. சிதம்பரநாதன் ஆகியோரை இந்த வரலாற்றுத் தயாரிப்பை முறைப்படுத்தும்படி கேட்டுக்கொண்டார்.

அதனடிப்படையில் ‘கொங்கு நாட்டில் இந்திய சுதந்திரப் போராட்டம்’ நூல் முறைப்படுத்தப்பட்டு நான்காண்டு உழைப்பிற்குப் பிறகு 1993-இல் சிலம்புச் செல்வர் ம.பொ.சி. தலைமையில் வெளியிடப்பட்டது.

அந்நூலில் இந்திய சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த கொங்கு நாட்டுத் தியாகிகளின் புகைப்படங்களை அவர்களின் ஊர்களுக்கே சென்று திரட்டுவதற்குக் காலதாமதமாகியது. 259 தியாகிகளின் புகைப்படங்களை அவரவர்கள் வாழ்ந்த கிராமங்களுக்குச் சென்று தேடிக் கண்டுபிடித்துத் திரட்டிய அப்புகைப் படங்கள் இவ்வரலாற்று நூலில் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

அதேபோல, கோவை மாவட்டத்தில் விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்ற 981 தியாகிகளின் விலாசங்கள் சேகரிக்கப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இவர்கள் அனைவரும் கோவை, பொள்ளாச்சி, உடுமலை, சிங்காநல்லூர், ஒண்டிப்புதூர், சுல்தான்பேட்டை, ஆனைமலை, திருப்பூர், மேட்டுப் பாளையம், காரமடை, கணியூர் எனப் பல்வேறு ஊர்களைச் சார்ந்தவர்கள்.

இவர்கள் அல்லாமல் பெரியார் மாவட்டத்திலுள்ள தியாகிகளின் பட்டியலும் இந்த வரலாற்று நூலில் பதிவாகியுள்ளன. அவர்களின் எண்ணிக்கை 337 ஆகும். சேலம் மாவட்டத்தில் இத்தியாகிகள் 478 பேர் கலந்து கொண்டு சிறை சென்றுள்ளனர். தருமபுரி மாவட்டத்தில் 111 பேர் சிறைத்தண்டனை பெற்றுள்ளனர். நீலகிரி மாவட்டத்தில் 71 தியாகிகள் சிறைத்தண்டனை அனுபவித்துள்ளனர். இவர்கள் எல்லாரும் கொங்கு நாட்டுத் தியாகிகள்.

இவர்களில் பல தியாகிகளின் புகைப்படங்கள் கிடைக்காமல் போய்விட்டன. கிடைத்தவை மட்டும் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இவ்வளவு தகவல்களையும் தரவுகளையும் 40 ஆண்டுகளுக்கு முன் திரட்டி ‘கொங்கு நாட்டில் இந்திய சுதந்திரப் போராட்டம்’ நூல் வெளியிடப்பட்டது என்பது அரிய சாதனை ஆகும்.

அந்த முயற்சி அன்றைக்கு நிறைவேறாமல் போயிருந்தால், தேசபக்திக்கான அந்த ஆவணம் நமக்குக் கிடைக்காமலேயே போயிருக்கும்.

இந்நூலினுடைய சிறப்பை அறிந்த கோவை இந்திய தொழில் வர்த்தக சபைத் தலைவர் திருமதி வனிதா மோகன் அவர்கள், தமது சொந்தச் செலவில் இதனை இரண்டாம் பதிப்பாக வெளியிட முன்வந்தார். ‘நமது நம்பிக்கை’ பத்திரிகை ஆசிரியர் கலைமாமணி மரபின் மைந்தன் முத்தையா அவர்கள் மூலமாக அதன் இரண்டாம் பதிப்பு கோவையில் பிப்ரவரி 2018-இல் வெளியானது.

**இவ்வரலாற்றில் கோவையில் சுதந்திரப் போராட்டத்தின் உச்சகட்டமாகத் திகழ்ந்த இரு சம்பவங்கள் முக்கியமானவை. ஊட்டி அருவங்காடு ஆயுதத் தொழிற்சாலையிலிருந்து தளவாடங்களை ஏற்றிக்கொண்டு போத்தனூரைக் கடந்து செல்லவிருந்த சரக்கு ரயிலைக் கவிழ்த்ததும், சூலூர் விமான நிலையத்திற்குத் தீ வைத்ததும் அவ்விரண்டு சம்பவங்களாகும்.**

இச்சம்பவங்களில் ஈடுபட்ட தேசபக்தியுள்ள பஞ்சாலைத் தொழிலாளர்களைப் போலீசார் தேடி வந்தனர். அவர்கள் அகப்பட்டிருந்தால் ராணுவச் சட்டப்படி மரண தண்டனை விதிக்கப்பட்டிருப்பார்கள். அவர்களை

விடுவித்துக் காப்பாற்றியவர் அன்றைக்கு வழக்குரைஞராக இருந்த சுதந்திரப் போராட்ட வீரர் திரு. சி. சுப்பிர மணியம் அவர்கள்.

இப்போது 'ஓம் சக்தி' இதழில் வெளியாகியுள்ள இந்த வரலாற்றுச் சம்பவங்களைச் சூலூர் கலைப் பித்தன் சரியாகப் பதிவு செய்து தந்துள்ளார். 'கொங்கு நாட்டில் இந்திய சுதந்திரப் போராட்டம்' என்ற முந்தைய முதற் பதிப்பு நூலில் இச்சம்பவங்கள் விரிவாக இடம்பெறவில்லை. அவற்றை இனிமேலாவது அவ்வரலாற்று நூலில் இணைத்துக்கொள்ள வேண்டும் என்பதற்காகவே விடுபட்டுப் போன அந்த விரிவாக்கம் இந்த இதழில் வெளியிடப்பட்டுள்ளது.

– இ.ஆர்.

"சீமூர், அஸ்தி, பாலியா, கோவை மாவட்டத்தில் சூலூர் – இவையனைத்தும் கூறப்படாத வீரகாவியத்தின் குறியீடுகள்."

வீரகாவியத்தின் குறியீடாக – தென்னாடு முழுமைக்கும் சூலூர் மட்டுமே வரலாற்றாசிரியர் களால் சுட்டிக்காட்டப்படுகிறது. சூலூருக்கு இந்தப் பெருமையும், சிறப்பும் வந்ததற்கு ஒரு வரலாறு உண்டு.

ஆகஸ்டுப் போராட்டத்தின் உச்சகட்ட நிகழ்ச்சியாக – மக்களின் தன்னெழுச்சிப் போராட்டமாக – 26.8.1942–ஆம் நாள் சூலூர் இராணுவ விமான தளம் தீ வைத்துக் கொளுத்தப்படடது.

கோவை பற்றியும், கொங்கு நாடு பற்றியும் தமிழ்நாட்டின் விடுதலைப் போராட்ட எழுச்சி பற்றியும் குறிப்பிடுகின்ற எவரும் – சூலூர் நிகழ்ச்சியைக் குறிப்பிடுவது தவிர்க்க முடியாததாகி விட்டது. சூலூர் நிகழ்ச்சி தற்செயலாக நடந்து முடிந்ததல்ல. இதற்கு ஒரு வலுவான பின்னணியும் உண்டு.

காந்தி, நேரு, ஆசாத், பட்டேல் முதலிய காங்கிரசியக்க முன்னணித் தலைவர்கள் 1942 ஆகஸ்டில் காந்திஜியின் வார்தா ஆசிரமத்தில் கூடி இறுதியான போர்த்திட்டம் ஒன்றை வகுத்தனர்.

'செய் அல்லது செத்து மடி' என்ற முழக்கத்துடன் – சுதந்திரப் போராட்ட இறுதித் திட்டத்தை அறிவிப்பிதற்காக காங்கிரசு செயற்குழு பம்பாயில் 8.8.1942–இல் கூடியது.

அப்போது, கோவை மாவட்டக் காங்கிரசுத் தலைவராக இருந்த தி.சு. அவினாசிலிங்கம் செட்டியார் – பம்பாய் செயற்குழுவில் பங்கேற்கச் சென்றார். செயற்குழு முடிவதற்கு முன்பே அவினாசிலிங்கம் கோவை திரும்பியதால், அவர் கைதாகாமல் தப்பினார். செயற்குழுவில் பங்கேற்ற காந்தி, நேரு, ஆசாத், பட்டேல் முதலிய தலைவர்கள் கைதாயினர்.

கைதுச் செய்தி பரவியதும் – கோவை நகரம் குமுறி எழுந்தது. 9.8.1942 மாலை கோவை வ.உ.சி. பூங்கா (அன்றைய காரனேசன் பார்க்) மைதானத்தில் பெருங்கூட்டம் திரண்டது.

தலைவர்களின் கைதைக் கண்டித்து, கண்டன முழக்கமும் ஆவேச உரைகளும் அனல் எழுப்பின. எதிரே நின்ற மக்கள் கூட்டம் 'ஏதாவது செய்தே தீரவேண்டும்' எனத் துடித்தது.



தொழிற்சங்கத் தலைவர் என்.ஜி. இராமசாமி, கே.பி. திருவேங்கடம், ப.சு. சின்னத்துரை, கே.வி. இராமசாமி முதலியோரின் சொற்பொழிவுகள் – உணர்ச்சி அலையை உருவாக்கின.

ஆனால், காங்கிரசின் பெருந்தலைவர்கள் 'அகிம்சை, சாத்வீகம், சத்தியாக்கிரகம்' என அறைகளுக்குள் அமர்ந்தபடி விவாதித்துக் கொண்டிருந்தனர். மக்கள் உணர்ச்சியோ, மாறுபட்டிருந்தது. பொறுமையிழந்து கொந்தளித்துக் கொண்டிருந்த மக்கள் – தலைமையில்லாமல் தவித்தனர்.

தலைமையேற்று நடத்த சோசலிஸ்ட்டுகள்

முன்வந்தனர். தெளிவான இலக்குகளுடன் போராட்டவலை பின்னப்பட்டது. பம்பாய் செயற் குழுவிலிருந்து கோவை மீண்ட தி.சு. அவினாசி லிங்கம் – சோசலிஸ்ட்டுகளின் போராட்ட நகலோடு வந்திருந்தார்.

காங்கிரசுக் கட்சியின் கட்டளையை எதிர் பார்த்து நின்ற என்.ஜி. இராமசாமியின் கைக்கு – அவினாசிலிங்கம் தந்த சோசலிஸ்ட்டுக் கட்சியின் கட்டளை கிட்டியது.

10.8.1942–ஆம் நாள் இரவு – ஒண்டிப்புதூர் சொக்கங்காளி தோட்டத்தில் உணர்ச்சிமிக்க தோழர்கள் நூறு பேருக்கு மேல் திரண்டனர். என்.ஜி. இராமசாமி தலைமையேற்று உருக்கமாகப் பேசினார். யார் யாருக்கு என்ன பணி என்பதைத் திருவேங்கடமும் சின்னத்துரையும் வகுத்துத் தந்தனர்.

திட்டங்களை நிறைவேற்றும் போராட்டத் தளபதியாகக் கண்ணம்பாளையம் கே.வி. இராம சாமி அமர்த்தப்பட்டார். 'செய் அல்லது செத்து மடி' என்னும் வாசகத்துடன் செயல் திட்ட விளக்க அறிக்கை தயாரானது.

- இராணுவத் தளவாடங்களை ஏற்றிச் செல்லும் இரயில்களைக் கவிழ்ப்பது.
- சூலூர் விமான தளத்தைக் கொளுத்து வது.

இந்த இரு செயல்களும் போராட்ட வீரர் களால் செயல்திட்டமாக ஏற்கப்பட்டன.

இதற்காக ஆறு குழுக்கள் அமைக்கப்பட்டன. ஒவ்வொரு குழுவிற்கும் ஆறுபேர் ஒதுக்கப்பட் டனர். இவர்கள் வகுத்துக் கொடுக்கும் திட்டங் களை, எஞ்சியோர் செயல்படுத்துவது என்ற தீர் மானத்துடன் கூட்டம் கலைந்தது.

**முதல் திட்டம் சிங்காநல்லூர் 'இரயில் கவிழ்ப்பு'** : என்.ஜி.ஆரும் திருவேங்கடமும் விடு தலை இயக்க ஈடுபாடுடைய தொடர்வண்டித்துறை அதிகாரி ஒரு வரை 11.8.1942ஆம் நாள் இரவு, போத்தனூர் சென்று கமுக்க(இரகசிய)மாகச் சந்தித் தனர். இரயில்வே அதிகாரி கூறிய செய்தியைக் கேட்ட இருவரும் புதையல் கிடைத்தது போல் பூரித்துப் போயினர்.

''ஊட்டி அரவங்காட்டில் தயாரான வெடி மருந் துகளோடும், போர்த் தளவாடங்களோடும் பெரிய சரக்கு ரயில் ஒன்று 13.8.1942–ஆம் நாள் இரவு போத்தனூர் வழியாக ஈரோடு நோக்கிச் செல்ல உள்ளது. என்ன செய்ய வேண்டுமோ, அதைச் செய்து முடித்து விடுங்கள்.''

இவ்வாறு இரயில்வே அதிகாரி அறிவித்த செய்தியால் என்.ஜி. இராமசாமியும் திருவேங்கட மும் அமர்ந்திருந்த குதிரைவண்டி வழக்கமில்லாத வேகத்துடன் புறப்பட்டது.

வெடிமருந்துப் பொருள்களோடு சிங்கா நல்லூர் வழியாகச் சரக்கு ரயில் வரவுள்ளதே! தாமதிக்கலாமா? சிங்காநல்லூர் கிருட்டிணன், இராமசாமிப்பிள்ளை முதலியோர் அந்த நள்ளிரவி லேயே எழுப்பி வரவழைக்கப்பட்டனர். போராட்டத் திட்டம் கவனமாக வகுக்கப்பட்டது.

13.8.1942 இரவு 1.30 மணிக்குச் சிங்கா நல்லூர் வழியாக வரவுள்ள சரக்கு ரயிலைக் கவிழ்த்து நாசமாக்க வேண்டும். பொது மக் களுக்கு ஆபத்து நேராமல் இதைச் செய்து முடிக்க வேண்டும். சிங்காநல்லூர் குளத்தேரியை ஒட்டித் திட்டம் நிறைவேற்றப்பட வேண்டும். அப்போது தான் தீ விபத்துப் பரவாமல் பாதுகாக்க முடியும்.

செயல் திட்டம் நிறைவேறக் கருவிகள் வேண் டுமே என்ற கவலை பிறந்தது. வெளியிலிருந்து அவற்றைக் கொண்டுபோக வழியில்லை. ஒரே வழி – இருப்புப் பாதை ஓரத்தில் வைக்கப்பட்டி ருக்கும் ரயில்வே 'காங்கி'ப் பெட்டியைக் கைப் பற்றுவதுதான்! எல்லாக் கருவிகளும் (டூல்ஸ்) அதில் இருக்குமே!

காங்கிப் பெட்டியைத் திறக்கத் திறவுகோல் வேண்டும். அதுதான் சிக்கல்! போராட்ட வீரர்கள் கலந்து பேசியபோது அதற்கும் ஒரு தீர்வு தெரிந் தது. அனைவர் முகத்திலும் ஒளிபடர்ந்தது.

திட்டங்களைக் கேள்விப்பட்ட என்.ஜி.ஆர். கேட்டார். ''எல்லோருக்கும் வேலையைப் பகிர்ந்து கொடுத்துவிட்டு எனக்கென்ன வேலைன்னு சொல்லலியே!'' என்றார்.

அதற்குத் திருவேங்கடம் சொன்னார் ''ஓடியாடி வேலை செய்ய உங்கள் உடல்நிலை இடம் தராது. கமுக்கமாகக் கூடித் திட்ட மிடுவதோ, செயலாற்றுவதோ உங்களால் இப் போது இயலாத செயல். ஒரே வழி நீங்கள் சிறைக்குச் சென்றுவிட வேண்டும்!''

'ஆமாம், ஆமாம்! அதுதான் வழி' – கூடியி ருந்த தோழர்கள் ஒரே குரலில் வழிமொழிந்தனர்.

''உயிரைப் பணயம் வைத்து எல்லோரும் புரட்சித் திட்டத்தைச் செயல்படுத்திக் கொண்டி ருக்கிறீர்கள். நான் மட்டும் சிறைக்குச் சென்று பாதுகாப்பாக உட்கார்ந்து கொள்வதா?'' என்.ஜி.ஆர். மனம் அதனை ஏற்க மறுத்தது.

கோவைப் புரட்சி வேகம் காவல்துறையின் காதைத் தீண்டியதால், போராட்ட வீரர்களை அவர் கள் தேடி அலைந்து கொண்டிருந்தனர்.

தாமாகவே முன்வந்து கைதாகும் சூழலை என்.ஜி. இராமசாமி உருவாக்கிக் கொண்டார்.

சிங்காநல்லூர் ரயில் கவிழ்ப்பிற்குத் திட்ட மிட்ட நாள் 13.8.1942. அதே நாள் காலையில் என்.ஜி. இராமசாமி கைதானார். தொழிற்சங்கத் தோழர்கள் சிலரும் அவரோடு கைதாயினர். தலை மறைவாயிருந்த போராட்டத் தோழர்கள், திட்டத்தை நிறைவேற்ற நள்ளிரவில் புறப்பட்டனர்.

கோவை, திருச்சி சாலையில் இப்போதுள்ள வெங்கடலட்சுமி திருமண மண்டபத்திற்கு எதிரேயிருக்கும் ஒற்றையடிப் பாதை வழியாக – அறுபது பேர் கொண்ட கூட்டம் இருப்புப்பாதை நோக்கி முன்னேறியது.

அவரவர் விடும் மூச்சே அதிகமான ஓசை போலத் தோன்றியது. மூச்சைக்கூட அடக்கி மெது வாக வெளியேற்றியபடி, தோழர்கள் உரிய இடத்தை அடைந்தனர். 'காங்கி'ப்பெட்டியின் சாவி வேண்டும்! கருவிகள் இருந்தால்தானே திட்டத்தை நிறைவேற்ற முடியும்!

ஏதோ நரிக்கூட்டம் வருவதாக அச்சத்தோடு ஒதுங்கி நின்றார் காங்கிப் பெட்டிக் காவலர். நரி களை விரட்டும் புலிகள் வந்திருக்கிறார்கள் என அவருக்குப் புரிந்தபோது – வாயில் துணி அடைக் கப்பட்டு, கைகால் கட்டப்பட்ட நிலையில், பக்கத்துத் தோட்டத்தில் புரண்டு கொண்டிருந்தார் அந்தக் காவலர்.

காங்கிப்பெட்டி சாவி கிடைத்ததும், கருவிகள் கைமாறின. ஆனாலும், வேலையை அவர்கள் உடனே தொடங்கிவிடவில்லை. சொந்தச் சகோதரர்களுக்குச் சோகம் வராமல் நிறைவேற்று வதுதானே புரட்சித் திட்டம்! பயணிகள் தொடர் வண்டி வரும் நேரமல்லவா இது! பொறுமையாகக் காத்திருந்தனர்.

மணி 12.45! அடுத்து நிகழ உள்ளதை அறியாமல், பயணிகள் தொடர்வண்டி (பாசஞ்சர் ரெயில்) ஒன்று அமைதியாய்க் கடந்து சென்றது. சதுரம் சதுரமாய் ஓடிய ரயில் பெட்டிகளின் சாளர வெளிச்சத்தில், தலை தெரியக் கூடாதே என்று தோழர்கள் குனிந்து கொண்டனர்.

இருளும் திகிலும் கலந்த நிலையில், மரங்கள் மட்டும் இலேசாய் அசைந்தன. போராட்ட வீரர் களும் அசையத் தொடங்கினர். தோழர்கள் காட்டிய சுறுசுறுப்பில் வேலைகள் வேகம் பெற்றன. கருவிகளும், கைகளும் வேகமாய் இயங்கின. தண்டவாளத்தின் இணைப்புத் தட்டுகள் அகற்றப் பட்டன.

தொடர்வண்டி ஓட்டுநருக்கு ஐயம் வராமல் இருந்தால்தானே நோக்கம் நிறைவேறும். இருப்புப் பாதை சரியாக இருப்பது போன்ற தோற்றத்துடன் – தண்டவாளத் தகடுகளைக் கவனமாக அகற் றினர். கச்சிதமாக வேலை முடிந்தது.

திட்டமிட்ட பணி நிறைவேறுவதைப் பார்க்கும் ஆர்வம் எல்லோருக்கும் இருந்தது. ஒதுங்கி நின்ற மரங்கள், போராட்ட வீரர்களைச் சுமந்து கொண் டன. மரத்தில் அமர்ந்தபடி – காதையும் கண் ணையும் கூர்மைப்படுத்திக் கொண்டார்கள்.

"உஷ் – சத்தம் கேட்குது... ரயிலாத்தான் இருக்கும். சத்தமாப் பேசாதே... வெளிச்சம் தெரி யுது... ரயிலேதான்!"

நீலகிரி அரவங்காட்டு வெடி மருந்துகளைச் சுமந்து வந்த ரயில், 1.50–க்குப் போத்தனூர் நிலையத்தை விட்டுப் புறப்பட்டது. தண்டவாளத் தகடுகள் அகற்றப்பட்டது தெரியாமல் – புகையைக் கக்கியபடி 'ஊஉ' என்ற ஒலியுடன் தொடர்வண்டி முன்னேறி வந்தது. போத்தனூரில் புறப்பட்டுச் சரியாகப் பத்தாவது நிமிடம் இடி முழக்கம் போல் பெரிய ஓசை!

'ரயில் இஞ்சின்' கரணமடித்துப் பாய்ந்தது! பன்னிரண்டு பெட்டிகளும் ஒன்றின் மேல் ஒன்றாக – செருகிக் கிடந்தன. சில பெட்டிகள் தண்ட



வாளத்தை விட்டு இறங்கிச் சாய்ந்து கிடந்தன! 'நல்ல வேளை, ஆள் சேதம் இல்லை.'

பெட்டிகள் சாய்ந்து கிடப்பதைக் கண்ட போராட்ட வீரர்கள் அந்நிய ஏகாதிபத்தியமே கவிழ்ந்து கிடப்பதுபோல் மகிழ்ந்தார்கள். "யார் பிடிபட்டாலும் யாரையும் காட்டிக் கொடுப்ப தில்லை" – மீண்டும் ஒருமுறை இந்த உறுதி மொழியை நினைவுபடுத்திக் கொண்டபடி வீடு நோக்கிப் புறப்பட்டார்கள்.

கே.வி. இராமசாமி, இராமசாமிப்பிள்ளை, கே.பி. திருவேங்கடம், பெருமாள் கோனார், சின்னமநாயக்கர், ரங்கசாமிக்கவுண்டர், சங்கிலி முதலியார், காமாட்சி பண்ணாடி, மாரியப்பத்தேவர், இராமதாசு, அருணாசலத்தேவர், 'மெக்கானிக்' கிருஷ்ணன், உருமநாவிதன், நல்லசாமித்தேவர், மாரிநாவிதன், சின்னய்யன், சண்முகன், மாரி முத்துநாயக்கர், நாராயணசாமி, பழனிச்சாமி – முன்னணி வீரர்களான இவர்கள், பிறரை வழி நடத்திக் கொண்டிருந்தனர்.

'பத்திரம்... பத்திரம்' எனக்கூறி அனைவரை யும் எச்சரிக்கையோடு வீடுகளுக்கு அனுப்பினர். மறுநாள் காலை சூரியன் எட்டிப் பார்ப்பதற்கு முன்பே 'ரயில் கவிழ்ப்புச் செய்தி' எல்லோரையும் எட்டிவிட்டது. காவல்துறை வாகனங்கள் திருச்சிப் பாதையில் சீறிப்பாய்ந்து கொண்டிருந்தன.

'வடநாட்டுத் தீவிரவாதிகள் வேலையாகத் தான் இருக்க வேண்டும்' – கைக்கு எட்டாத திசையைக் காரணம் காட்டியபடி காவல்துறை கையைப் பிசைந்தது. போராட்டத் தோழர்கள் எது வுமே நடக்காததுபோல் மறுநாள் வேலைக்குச் சென்றுவிட்டனர்.

'யாரும் யாரோடும் இதுபற்றிப் பேசுவதில்லை' என ஏற்கனவே திட்டமிட்டதை இப்போது செய லாக்கிக் கொண்டிருந்தனர். அரசு வாகனமான 'இரயில்' கவிழ்க்கப்பட்டுவிட்டது. அனைத்துப் போர்க்கருவிகளும் நாசமாகிவிட்டன. சிங்கா நல்லூர் நிகழ்ச்சி, தேசத்தைக் குலுக்கியது.

**இரண்டாம் செயல் திட்டம், சூலூர் விமான தள எரிப்பு :** சிங்காநல்லூர் இரயில் பெட்டிக்குள் தேசமே வெடித்துச் சிதறியது போல் காவல்துறை யும் இராணுவமும் கவலைப்பட்டன. அப்பாவிகளை அடித்துத் துன்புறுத்துவதே 'தேச சேவை' என்பது போலக் காவல்துறை செயல்பட்டது.

'சும்மா அடிபட்டுச் சாவதைவிட, ஏதாவது செய்துவிட்டுச் சாகலாமே' என்ற முடிவுடன் அடி பட்ட அப்பாவித் தோழர்கள் காவல் நிலையத்தி லிருந்து கைத்தாங்கலாக வெளியேறிக் கொண்டி ருந்தனர்.

அப்பாவித் தோழர்களை அடித்து நொறுக்கி, மிஞ்சிய நேரத்தில் இராணுவமும், காவல்துறையும் உருண்டு கிடக்கும் பெட்டிகளைச் சுறுசுறுப்பாகச் சுற்றி வந்தன.

'இத்தனை அடி கொடுத்தும் இரத்தத்தைத் தான் கக்குறான்! உண்மையை எவனும் கக்கலையே' – இராணுவமும், காவல்துறையும் விடைகிடைக்காத சோகத்தில் ஒருவரையொருவர் தேற்றிக் கொண்டனர். அவ்வப்போது ஒரு தீர் மானத்திற்கு வருவதும், மாறுவதுமாக இராணு வமும் காவல்துறையும் செயல்பட்டுக் கொண்டி ருந்தன.

'சீக்கிரமாச் சாகடிச்சிருங்க! எதுவுமே தெரியாதுங்க!' காவல் நிலைய அலறல் மட்டும் நிற்காமல் தொடர்ந்து கொண்டிருந்தது. 'அடிக்கிற வனும் இந்தியன்! அடிபடுகிறவனும் இந்தியன்! கூலிக்காக வாழ்பவன் – அடிக்கிறான். கொள் கைக்காக வாழ்பவன் – அடிபடுகிறான்.'

இரத்தம் கசியும் முகத்தோடும், நைந்து போன உடலோடும் தள்ளாடிவரும் அப்பாவிகள் நிலை – இளைஞர்கள் நெஞ்சைக் கசக்கியது. 'சோறும் வீடுமே சுகம்' என்று நினைத்தவர்கள் கூட, தேச விடுதலை பற்றிச் சிந்திக்கத் தலைப் பட்டனர்.

27.8.1942–ஆம் நாள் காலை – விமானதள வேலைக்குச் செல்வதற்காகச் சூலூர் தொழி லாளர்கள் சண்முகதேவி திரையரங்கமருகே கூடி யிருந்தனர். தொழிலாளர்களை அழைத்துச் செல்ல வழக்கமாக வரும் சரக்குந்தை (லாரியை) காணவில்லை.

"ஆறு மணிக்கே வந்திடுமே! மணி ஒன்ப தாச்சு! எந்த லாரியையும் காணோமே!" காரணம் தெரியாமல் தொழிலாளர்கள் தவித்தனர். வீட் டிற்குச் செல்லவும் மனமில்லை. வேலையில்லா விட்டால் கூலி கிடைக்காதே!

கிழக்கே இருந்து ஓடிவந்த சிறுவன் ஒருவன் மூச்சு வாங்கியபடி சொன்னான், "தீ வைச்சுட் டாங்க... தீ வைச்சுட்டாங்க...! ஏரோப்ளேன் காடு ராத்திரி எரிஞ்சுடுச்சு."

லாரியை எதிர்பார்த்து நின்ற சூலூர் நூற் பாலைத் தொழிலாளர்கள் – விமான தளத்தை நோக்கிக் கிழக்குத் திசையில் ஓடத் தொடங் கினர்.

சூலூருக்கும் விமான தளத்துக்கும் இடைப் பட்ட இரண்டு கிலோ மீட்டர் தூரம் ஒரே கல்மயம். எல்லாம் வெங்கக்கற்கள். செருப்பில்லாத கால் களைக் கற்கள் சிரமப்படுத்தின. இரவு அப்படி என்னதான் நடந்தது?

**(மீதி அடுத்த இதழில்)**

ஆன்மிகம்


ஸ்ரீ விஷ்வக்ஸேனர்

# விக்கினங்களைப் போக்கிடும்

# ஸ்ரீ விஷ்வக்ஸேனர்

பூஜைகள், யாகங்கள், உற்சவங்கள் மற்றும் நாம் செய்யும் பலவித மதச் சடங்குகளைத் தொடங்கிடும் முன்பு, அப்புனிதச் சடங்குகள் விக்கினங்கள் (தடைகள்) ஏதுமின்றி நடைபெறுவதற்காக விக்கினேஸ்வரப் பூஜையுடன் தொடங்குவது நம் நாடெங்கிலுமுள்ள வழக்கமாகும்.

பொதுவாக, விக்கினங்களைப் போக்கி அருளுபவர் ஸ்ரீ விநாயகப் பெருமான் என்பதால், பசுஞ்சாணம் அல்லது மஞ்சளில் விநாயகரைப் பிடித்து வைத்து அவ்விக்கினேஸ்வரப் பூஜையைப் புரோகிதர்கள் நடத்துவார்கள்.

அறு சமயத்தினரில் ஒரு சமயத்தினரான வைணவர்கள் மறந்தும் புறந்தொழா மாந்தர்கள் ஆதலால், சிவ பார்வதி மைந்தராகிய ஸ்ரீ விநாயகப் பெருமானுக்குப் பதிலாக, ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் சேனாதிபதியாகிய ஸ்ரீ விஷ்வக்ஸேனரையே தங்கள் காரியங்களில் விக்கினங்கள் நேராதிருக்க வழிபடுகின்றார்கள்.

எம்பெருமான் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் இருப்பிடமாகிய ஸ்ரீ வைகுந்தத்தில் அநாதி காலமாக அவருக்குத் தொண்டு புரிந்து வருபவர்களை நித்யசூரிகள் என்று அழைப்பார்கள். "தத் விஷ்ணோ: ய: பரமம் பதம் ஸ்தா பச்யந்தி சூரய: என்பது வேத வாக்கியம்.

அத்தகைய நித்ய சூரிகளில், அனந்தன் (ஸ்ரீ ஆதி சேஷன்), கருடன் மற்றும் விஷ்வக்ஸேனர் ஆகிய மூவர் முதன்மையான நித்யசூரிகளாவர். இவர்களுள், ஸ்ரீ ஆதிசேஷன் எம்பெருமானுக்குப் படுக்கையாகவும், சிம்மாசனமாகவும் விளங்கிவர, அப்பெருமானை இப் பிரபஞ்சமெங்கும் சுமந்து செல்லும் கைங்கரியத்தை ஸ்ரீ கருட பகவான் செய்து வருகின்றார்.

ஸ்ரீ விஷ்வக்ஸேனரோ, எம்பெருமானின் படைகளுக்குத் தளபதியாகத் தலைமைப் பொறுப்பேற்று, அனைத்துலக நிர்வாகத்தையும் ஒழுங்குபடுத்திக் கொண்டிருக்கின்றார். ஐப்பசி மாதம் பூராட நட்சத்திரம் இவருடைய அவதாரத் திருநாள். இவருடைய தேவியின் பெயர் ஸூத்ரவதி.

எம்பெருமானைப் போலவே (சாரூப்யம்) நான்கு திருக்கரங்கள் கொண்டு, பீதாம்பரப் பட்டாடை உடுத்தி,



எஸ். ஸ்ரீதுரை

சக்கரம், சங்கு, கதாயுதம் மற்றும் தாமரைப் பூ ஆகியவற்றை நான்கு கரங்களில் ஏந்தி, இடுப்பில் செருகிய கத்தியுடன் காட்சி அளிக்கின்றார்.


ஸ்ரீ கருடன்

பொதுவாகக் கிழக்கு நோக்கியிருக்கும் பெருமாள் கோயில்களில் வடக்குப் புறத்தில், (தெற்கு முகமாக) ஸ்ரீ விஷ்வக்ஸேனரின் சன்னிதி அமைந்திருக்கும். தமிழகத்தில் அமைந்துள்ள பெருமாள் கோயில்களில் இவரது பெயர் பெரும்பாலும் (தூய தமிழில்) 'அருள்மிகு சேனை முதலியார்' என்றோ, 'ஸ்ரீ சேனை நாதன்' என்றோ குறிப்பிடப் பட்டிருக்கும்.

ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாம ஸ்தோத்திரத் தில் இரண்டாவது சுலோகமான "யஸ்ய த்விரத வக்த்ராத்யா பாரிஷத்யா பரஸ்ஸதம், விக்னம் நிக்நந்தி சததம் விஷ் வேக்ஸேனம் தம் ஆஸ்ரயே" என்பது இவரைக் குறித்ததே ஆகும். ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாமத்தைத் தடையின்றிக் கூறுவதற்கே இவரது அருள் வேண்டும் என்பதிலிருந்தே, இவ் விஷ்வக்ஸேனருடைய முக்கியத் துவத்தை உணரலாம்.

## கடவுள் பற்றிய விவாதம்

**ஜென்** துறவி ஒருவரிடம் அவரது சீடர் "விவாதம் செய்வதன் மூலம் கடவுளை நிரூபிக்க முடியுமா?" என்று கேட்டார்.

"நிழல் என்றால் என்னவென்று பார்வை யற்ற ஒருவனுக்கு விளக்குவதைப் போன்றதாக அது இருக்கும்" என்றார் துறவி.

– நெ. இராமன், சென்னை

அனைத்துப் பெருமாள் திருக்கோயில்களிலும் பின்பற்றப்படும் பாஞ்சராத்ரம் மற்றும் வைகானசம் ஆகிய இரண்டு ஆகமங்களிலும் ஸ்ரீ விஷ்வக்ஸேனர் வழிபாடு வலியுறுத்திக் கூறப் பட்டுள்ளது.

எழுநூற்றைம்பது வருடங்களுக்கு முன்னர் அவதரித்த ஸ்ரீ வேதாந்த தேசிகன் என்னும் வைணவ ஆசாரியர் தாம் இயற்றிய யதிராஜ ஸப்ததி என்னும் துதியில், "அனைத்துலகும் ஸ்ரீ சேனை நாதனின் பிரம்பின்கீழ் ஆட்சிக் குட் பட்டிருக்கின்றன" என்று கூறுகின்றார்.

இது மட்டு மின்றி –

"என்னுயிர் தந்தளித்த வரைச் சரணம் புக்கி
யான் அடைவே அவர்குருக்கள் நிரை வணங்கிப்
பின்னருளால் பெரும்பூதூர் வந்த வள்ளல்,
பெரிய நம்பி, ஆளவந்தார், மணக்கால் நம்பி,
நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக்கொண்டார்,
நாடமுனி, சடகோபன், சேனைநாதன்,
இன்னமுதத் திருமகள் என்(று) இவரை முன்னிட்(டு)
எம்பெருமான் திருவடிகள் அடைகின்றேனே"

என்ற (ஏறு வரிசையில் அமைந்த) குருபரம்பரைப் பாசுரத்தின் மூலம், ஸ்ரீ மகாவிஷ்ணு மற்றும் ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஆகியோருக்கு அடுத்த முக்கிய இடத்தை ஸ்ரீ விஷ்வக்ஸேனருக்கு வழங்கியுள்ளார் ஸ்ரீ வேதாந்த தேசிகர். இதன்மூலம், ஸ்ரீ வைணவ குருபரம் பரையே ஸ்ரீ விஷ்வக்ஸேனரிலிருந்து தொடங்குகின்றது என்பதை நாம் அறியலாம்.

இவ்விஷ்வக்ஸேனரின் கீழ் கஜானனர், ஜயத்ஸேனர், ஹரிவக்திரர் மற்றும் காலப்பிரகிருதி ஆகிய நான்கு துணைத் தளபதிகள் இருக்கின்றனர். இந்நால்வரில் ஒருவரான (யானை முகம் கொண்ட) கஜானனரையே, வைணவரல்லாதவர்கள் விநாயகராகக் கருதி வழிபடுவதாகவும் ஒரு கருத்து உள்ளது.


ஸ்ரீநிவாச கருடசேவை

பெருமாள் கோயில்களில் நடைபெறும் பிரம்மோற்சவத் திருவிழாக்களில் அங்குரார்ப்பணம் என்னும் தொடக்க நிகழ்வில் ஸ்ரீ விஷ்வக்ஸேனருக்கு முக்கியப் பூஜைகள் நிகழ்த்தப்படுகின்றன. திருக்கோயில்களின் வருடாந்திரப் பெரு நிகழ்வான பிரம்மோற்சவம் தடையின்றி நடைபெற ஸ்ரீ விஷ்வக்ஸேனரின் அருள் முக்கியமாகின்றது.

மேலும் பிரம்மோற்சவம் நடைபெறும் பத்து நாட்களிலும், விதவிதமான வாகனங்களில் எம்பெருமான் ஆரோகணித்து ஊர் வலமாகக் கிளம்புவதற்குச் சற்று முன்னதாக ஸ்ரீ விஷ்வக்ஸேனரின் உற்சவ விக்கிரகத்தைப் பல்லக்கில் வைத்து, (எம்பெருமானின் வாகன ஊர்வலம் நடைபெறும் வழியெங்கும்) நகர்வலமாக எழுந்தருளச் செய்யப்படுகின்றது. எம்பெருமான் எழுந்தருளும் வழியில் தடைகள் ஏதும் ஏற்படாதவாறு ஸ்ரீ விஷ்வக்ஸேனர் கண்காணிப்புச் செய்யும் விதமாக இந்த ஐதீகம் கடைப்பிடிக்கப்படுகின்றது.

மேலும், நித்திய சூரியாகிய ஸ்ரீ விஷ்வக்ஸேனரே இப்பூவுலகில் ஸ்ரீ நம்மாழ்வாராகப் பிறந்து, வேதத்தின் விரிவுரையாகத் திருவாய்மொழி உள்ளிட்ட இனிய திவ்வியப் பிரபந்தங்களை ஓதி, ஜீவாத்மாக்கள் முக்திப் பேறு அடைய வழிகாட்டினார்.

இத்தகைய பெருமைகள் பல வாய்ந்த ஸ்ரீ விஷ்வக்ஸேனரை வணங்கி வழிபடுவதன் மூலம், நாம் தொடங்கும் நற்காரியங்களில் தடங்கல்கள் ஏற்படாத வண்ணம் உறுதி செய்து கொள்வதுடன், நமது பிறவியிறுதியில், எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணனின் திருவடிக்குத் தொண்டு செய்யும் வைகுந்தப் பேற்றையும் பெறுவோமாக!


ஸ்ரீ விஷ்வக்ஸேனர் அம்சமாய் அவதரித்த ஸ்ரீ நம்மாழ்வார்


திரு. துளசிராமன்

கட்டுரை

# ‘தூங்கா நகரத்தின்’ தந்தை!

தொழில்நுட்பத் துறையில் பணி புரிந்து ஓய்வுபெற்ற வெள்ளைக்காரரான ஆல்பிரட் சாட்டர்டன் என்பவர் 1912–ஆம் ஆண்டில் ‘இந்தியாவின் தொழில் வளர்ச்சி’ என்னும் தலைப்பில் தன் அனுபவங்களைத் தொகுத்துப் புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்.

அதில் அவர் மதுரையைப் பற்றிக் குறிப்பிடுகிறபோது, வாணிபம் மற்றும் விவசாயத் தொழில்களில் இன்றைக்கு மதுரை வளம் பெற்றிருப்பதற்குக் காரணமானவர்கள் இருவர். அதில் ஒருவர் பென்னிகுயிக். இவரின் அதிதீவிர முயற்சியால் கட்டப்பட்ட பெரியாறு அணை. இதன் மூலம் மதுரை நகருக்கு வடக்கில் உள்ள நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதியினைச் செய்ததன் காரணமாக விவசாயத் தொழில் சிறப்புற்றது.

விவசாயத் தொழிலுக்கு அடுத்தபடியாக அதிகளவில் மக்கள் மேற்கொண்ட தொழில் நெசவு. இந்த நெசவுத் தொழிலில், நவீன சாயத் தொழில்நுட்பத்தினை அறிமுகப் படுத்திய எல்.கே. துளசிராமன்தான் இன்னொருவர் என்று, அந்த நூலில் சாட்டர்டன் பதிவு செய்திருக்கிறார்.

1870–ஆம் ஆண்டு ஜனவரி 14–இல் செல்வச் செழிப்புமிக்க குடும்பத்தில் தொழில் அதிபராகத் திகழ்ந்த லகுடுவா குப்பய்யர் – மீனாட்சியம்மாள் தம்பதிக்கு மூன்றாவது புதல்வராகப் பிறந்தவர் எல்.கே. துளசிராமன். தொடக்கக் கல்வியினை அமெரிக்க சமயத் தொண்டரான ரெண்டால் என்பவரிடம் கற்றுத் தேர்ந்தார். பின்னர் மதுரை பிஷர் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து 1885–ஆம் ஆண்டில் பள்ளியிறுதி வகுப்பில் முதல் மாணவனாகத் தேர்ச்சி பெற்றார்.

பிறகு 1887–ஆம் ஆண்டில் மதுரைக் கல்லூரியில் சேர்ந்து இரண்டு ஆண்டுகள் பயின்று எப்.ஏ., என்று அந்தக் காலத்தில் சொல்லப்பட்ட இடைநிலைக் கல்வி இறுதித் தேர்வில் வெற்றி பெற்றார். பிறகு சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியில் சேர்ந்து பி.ஏ., பட்டப்படிப்புப் படித்தார்.

என்னதான் வசதி வாய்ப்புகள் இருந்தாலும் கல்வி கற்பதற்கு அன்றைய காலத்தில் சாதீயம் உள்ளிட்ட பல தடைகள் இருந்தன என்பதை உணர்ந்த காரணத்தினால், விடுமுறைக் காலங்களில் உயர்நிலைப் பள்ளியில் படிக்கின்ற பொழுதே, ஏழைக் குடும்பத்துக் குழந்தைகளும் படிப்பறிவு பெற வேண்டும் என்கிற நோக்கத்தில் தன்னுடன் படித்த நண்பர்களின் துணையுடன் ஏழை மாணவர்கள் இலவசமாகப் படிப்பதற்கு வேண்டிய உதவிகளைச் செய்தவர் துளசிராமன்.

## நீ.சு. பெருமாள்




அந்தக் காலத்திலேயே ஆரம்பப் பாடசாலையினை நிறுவ வேண்டும் என்கிற இடைவிடாத முயற்சியின் காரணமாக துளசிராமன் அவர்கள் 1886–இல் குழு ஆரம்பப் பள்ளி என்கிற பெயரில் (Committee Primary School) ஒரு பாட சாலையினை உருவாக்கினார்.

தற்போது மதுரையில் பழைய ராமநாதபுரம் ரோடு என்று அழைக்கப்படுகின்ற அந்தப் பகுதியில் உள்ள தொப்பே பெல்லய்யர் சத்திரத்தில்தான் இந்த இலவச ஆரம்பப் பாடசாலை இயங்கியது. அதனால் இதைச் 'சத்திரப்பள்ளி' என்றும் மக்கள் அழைத்தனர். மதிய நேரத்தில் இலவச போஜனம் உண்டு என்று மதுரை வீதிகளில் மாட்டுவண்டி மூலம் பிரச்சாரம் செய்து அதன்மூலம் ஏழைக் குடும்பத்துக் குழந்தைகளைப் பள்ளிக்கு வரவழைத்த பெருமை துளசிராமனுக்கு உண்டு.



ஒத்தக் கருத்துடைய செல்வந்தர்களின் உதவியை நாடி மதியஉணவு திட்டத்தை நிரந்தரமாகத் தொடரச் செய்தார். ஆம்! அன்றைய அந்த சத்திரப்பள்ளி என்கிற விதைதான் இன்று ஆல விருட்சமாக சௌராஸ்ட்ர மேல்நிலைப் பள்ளியாக உருவெடுத்தது என்பதும் வரலாறு!

கர்மவீரர் காமராசர் மதிய உணவுத் திட்டத்தைத் தமிழகம் முழுவதிலும் தொடங்கி வைக்கிற போது, அவருடன் இருந்த கல்வித்துறையின் இயக்குனர் நெ.து. சுந்தரவடிவேலு, இந்த மதிய உணவுத் திட்டத்தின் முன்னோடியாக இருந்தவர் எல்.கே. துளசிராமன்தான் என்பதை அறிந்து கொண்டோம் என்று பின்னாட்களில் பதிவு செய்தார். ஆம்! இந்தியாவிற்கே பள்ளி மாணவர்களுக்கான மதிய உணவு திட்டத்திற்குத் தமிழ்நாடு முன்னுதாரணம் என்றால், அந்தத் தமிழகத்திற்கே இலவச மதிய உணவு திட்டத்திற்குத் துளசிராமன் முன்னோடியாகத் திகழ்ந்துள்ளார்.

சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியில் படிக்கின்ற காலத்தில் சுவாமி விவேகானந்தரைச் சந்திக்கும் வாய்ப்பினைப் பெற்றார் துளசிராமன். அமெரிக்கா செல்வதற்கு முன் சென்னைக்கு வருகை தந்த விவேகானந்தரிடம் உரையாடிய அனுபவம்தான் பின்னாட்களில் சமுதாயத்தில் பிற்பட்ட மக்களுக்காகப் பாடுபட வேண்டும் என்கிற உந்துதல் கிடைத்தது. "தொண்டே தெய்வீகம்" என்பதை உணர்ந்த துளசிராமன் பொது வாழ்க்கையினைத் தேர்வு செய்து அரசியல் களத்தில் இறங்கினார்.

1904–ஆம் ஆண்டில் மதுரை நகராட்சித் தேர்தலில் பந்தடி பகுதியில் இருந்த வார்டில் போட்டியிட்டு, நகர்மன்ற உறுப்பினரானார். தொடர்ந்து 36 ஆண்டுகள் பந்தடி பகுதியின் கவுன்சிலராக அந்தப் பகுதி மக்கள் அவரைத் தேர்வு செய்கின்றனர். மக்களால் தேர்வு செய்யப் பட்ட கவுன்சிலர்களில், நகர்மன்றத் தலைவர்கள் உருவான காலம் அது. அப்போது 1921 முதல் 1923 வரையில் மதுரை நகர்மன்றத்திற்குத் தலைவ ராகும் வாய்ப்பும் துளசிராமனுக்குக் கிடைத்தது.

இந்தக் குறுகிய கால இடைவெளியில் மதுரைக்குத் தேவையான இரண்டு முக்கிய திட்டங்களை நிறைவேற்றினார். மதுரை மக்களின் அன்றாடப் பணிகள் சூரிய அஸ்தமனத்துடன் நின்றுபோகும் என்கிற வகையில் மின்சாரம் இல் லாத மதுரையாக, வீதிகளில் மண்ணெண்ணெய் விளக்குகள் மட்டுமே எரிந்து கொண்டிருந்த காலம் அது.

இந்த நிலையினை மாற்ற முடிவு செய்து, மின்சார வசதி மதுரை நகருக்கு வேண்டும் என்கிற தீர்மானத்தை நகராட்சியில் நிறைவேற்றி, அதற்கான விரிவான திட்டத்துடன் அன்றைய சென்னை மாகாண முதலமைச்சராக இருந்த பனகல் அரசரை அணுகி, மின்சாரத் திட்டத்தின் தேவை குறித்த அவசியத்தை உணர்த்தினார் துளசிராமன்.

வேகமாக வளர்ச்சி பெற்று வரும் மதுரை நகருக்கு மின்சாரம் அவசியம் என்பதை உணர்ந்த பனகல் அரசர் உடனடியாக, மதுரை நகராட்சியின் தீர்மானத்திற்கு ஒப்புதல் வழங்கினார். இன்று தமிழகத்தின் 'தூங்கா நகரம்' மதுரை என்று போற்றப்படுகிறது என்றால் அதற்கான அடித்தள மிட்டவர் எல்.கே. துளசிராமன்.

இதே சம காலத்தில் பூபானிக் பிளேக் என்கிற கொடிய நோய் மதுரையில் பரவி மக்களை அச்சுறுத்தியது. இதற்கான மூல காரணத்தை அறிந்து கொண்ட துளசிராமன், தேங்கி நிற்கிற சாக்கடை சகதி நீரால்தான் இந்த நோய் பரவுகிறது என்பதை உணர்ந்து, மீண்டும் பனகல் அரசரை அணுகிப் பாதாளச் சாக்கடைத் திட் டத்தை நிறைவேற்றித் தரும்படி வற்புறுத்துகிறார். கோரிக்கையின் நியாயத்தை உணர்ந்த சென்னை மாகாண அரசு பாதாளச் சாக்கடைத் திட்டத்திற்கு நிதி உதவி செய்தது என்பதும் வரலாறு! ஆம். துளசிராமன் நகர்மன்றத் தலைவராக இருந்த காலத்தில்தான் முதன் முதலில் மதுரை நகருக்குப் பாதாளச் சாக்கடைத் திட்டம் தொடங்கியது.

அதன் பிறகு மதுரை நகர் விரிவாக்கத் திட்டம் என்று ஒன்றைத் தயாரித்தார். மதுரை நகரில் பெரும்பாலான மக்கள் அமைப்புசாரா தொழிலாக இருக்கின்ற கைத்தறி நெசவுத் தொழிலையே செய்து வந்தனர். அவர்களின் தொழிலுக்கேற்ற வகையில் போதிய இடவசதி இல்லாத காரணத்தினால் நெருக்கடி ஏற்பட்டது. இதனைச் சமாளிக்கும் திட்டத்தின் அடிப்படையில் உருவானதுதான் மதுரை நகர் விரிவாக்கத் திட்டம். மாகாண அரசிடம் இருந்து இத்திட்டத் திற்கும் ஒப்புதல் வாங்கினார்.

மதுரை நகரின் ஏனைய பகுதிகளை இணைக்கும் வகையில் அனுப்பானடி பகுதியில் சாலை போடப்பட்டது. அதேபோல முனிச்சாலை முச்சந்தியிலிருந்து, மாரியம்மன் தெப்பக்குளம் மற்றும் கீழ் மதுரை ரயில்நிலையம் வரையில் சாலைகள், சாலைகளின் வழித்தடங்கள் அமைக் கப்பட்டன. எவ்வித எதிர்ப்பும் இன்றி நகர் விரி வாக்கத் திட்டம் தானாகவே மக்களால் ஏற்கப் பட்டது. மதுரை நகரைச் சுற்றியும் மக்கள் குடியேற ஆரம்பித்தனர்.

இதை உணர்ந்த மாகாண அரசு எந்தப் பெரிய நகராட்சித் தலைவருக்கும் இல்லாத சலுகையாக துளசிராமனுக்கு ஊதியம் வழங்கிக் கௌரவித்தது!

ஜஸ்டிஸ் கட்சியின் முதல் மாநில மாநாடு 1917–இல் டிசம்பர் 28, 29 ஆகிய தேதிகளில் சென்னையில் நடைபெற்றது. "பின்தங்கிய சமூகத்தார் முன்னேற வேண்டும். அவர்களின் வாழ்வாதாரம் பாதுகாக்கப்பட வேண்டும். ஒரு குறிப்பிட்ட பிரிவினரே உயர் பதவிகளுக்குச் செல் வது அநீதியாகும். வகுப்புவாத பிரதிநிதித்துவம் தான் அனைவருக்குமான பாதுகாப்பாக அமை யும்" என்று அந்த மாநாட்டில் தீர்மானம் இயற்றப் பட்டது.

இதே சமகாலத்தில் அதாவது இரண்டாவது உலகப்போர் முடிவுற்ற தருணம் அது. வெள்ளையர் அரசாங்கம் மாண்டேகு, செம்ஸ்போர்டு ஆகியோர் தயாரித்த அறிக்கையின் அடிப்படையில் 1919–இல் இந்தியாவில் ஓர் அரசியல் சட்டத்திருத்த மசோதா நிறைவேற்றப்பட்டது. அதனடிப்படையில் மாகாணங்களில் ஆளுநரால் நியமனம் செய்யப் படும் அமைச்சர்கள் கட்டாயமாக சட்டமன்ற உறுப் பினர்களாகத் தேர்வு செய்யப்பட்டிருக்க வேண்டும்.

இந்தச் சட்டத்தை ஜஸ்டிஸ் கட்சி ஏற்றுக் கொண்டது. மற்ற மாகாணங்களில் உள்ள மித வாத அமைப்புகளும் ஏற்றன. ஆனால் காங்கிரஸ் கட்சி ஏற்க மறுத்தது என்பதும் குறிப்பிடத்தக்கது.

எனவே இந்த மாண்டேகு, செம்ஸ்போர்டு அறிக்கையில் கூறப்பட்டுள்ள தொகுதி நிர்ணயம், வாக்குரிமை மற்றும் தேர்தல் பிரச்சாரத்தைக் குறித்து பிரிட்டிஷ் பாராளுமன்றக் குழுவின் முன்பு விவாதிக்க முடிவு செய்தது வெள்ளையர் அர சாங்கம். அதற்கான சாட்சியங்களை வழங்க வருமாறு நீதிக்கட்சியைச் சார்ந்தவர்களையும் பிரிட்டிஷ் அரசு வேண்டுகோள் விடுத்தது.

அந்த வேண்டுகோளை ஏற்று சென்னை மாகாணத்தின் சார்பில், எல்.கே. துளசிராமன் மற்றும் வி.எஸ். சீனிவாச சாஸ்திரி, ஆற்காடு சர்.ஏ. ராமசாமி முதலியார், கே.வி. ரெட்டி, சர். சங்கரன் நாயர் ஆகியோர் லண்டனுக்கு 1919–ஆம் ஆண்டில் பயணமானார்கள்.

பாராளுமன்ற இரு சபைகளின் கூட்டுக் கூட்டத்தில் ஆகஸ்ட் 25ல் சுமார் ஒன்றரை மணி நேரம், ஆங்கிலேயர்களே வியக்கும் வண்ணம் மிகச்சிறந்த கருத்துக்களைக் கொண்ட தன் வாதங்களை எடுத்துரைத்தார் துளசிராமன். அதில் முத்தாய்ப்பாக அவர் எடுத்துக் கொண்ட விசயம் என்பது பின்தங்கிய மக்களுக்கான இட ஒதுக்கீடு தொடர்பான செய்திகளாகத்தான் இருந்தது.

“97 சதவிகித மக்கள் உயர்வகுப்பினர் அல்லா தோர்தான் இருக்கின்றனர். ஆனால் அரசாங்க வேலைவாய்ப்பு மற்றும் கல்வியில் மிகவும் பின் தங்கி இருக்கின்றனர். இவர்கள் ஏன் 3 சதவீத மாக இருக்கும் உயர்வகுப்பு சமூகத்திடம் வாய்ப்பு களைக் கேட்க வேண்டும் என்கிற கேள்வி இங்கே எழுப்பப்படுகிறது. ஆனால் நாம் வாழும் வாழ்க்கை என்பது காட்டில் வாழும் விலங்குகளுக்கு ஒப் பானது. ஒரு காட்டில் சிங்கங்களின் எண் ணிக்கை மிகமிக குறைவாகத்தான் இருக்கும். ஆனால் மான்கள், முயல்கள், ஆடு, மாடுகள் என மற்ற விலங்குகளின் எண்ணிக்கை அதிகமாக இருக்கும். இருந்த போதிலும், எண்ணிக்கையில் குறைவாக இருக்கின்ற சிங்கம், புலி, சிறுத்தை முதலியவற்றிற்குக் கட்டுப்பட்டுத்தான் மற்ற விலங்குகள் வாழ முடியும்.

வனாந்திர வாழ்க்கைக்கு ஒப்பானதுதான் இன்றைய பிற்படுத்தப்பட்ட மக்களின் நிலை. இதில் நிறத்தில் பேதம், சாதியப் பிளவுகள் எனப் பல்வேறு அமைப்புப் பிரிவுகளை உருவாக்கிப் பெரும்பான்மை மக்களை ஒன்று சேரவிடாமல் பல கலாச்சாரங்கள் திட்டமிட்டே ஏற்படுத்தப் பட்டுள்ளன.

எனவே, காலம் காலமாக மிகவும் பின்தங்கிய நிலைமையில் இருக்கும் மக்களுக்கு உரிய வகை யில் சட்டத்தினை இயற்றி அனைவரும் சமமாக, வேலை வாய்ப்பில் பங்கேற்க வழிவகை செய்திட இந்தக் கனவான்கள் கொண்ட குழுவினர் உதவிட வேண்டும்’’ என்று மிக விரிவான முறையில் உரையாற்றினார் துளசிராமன்.




1926–ஆம் ஆண்டில் நடைபெற்ற மாகாண சட்டமன்றத் தேர்தலில் டாக்டர். சுப்பராயன் தலை மையிலான ஆட்சி அமைய இரண்டு சட்டமன்ற உறுப்பினர்களின் ஆதரவு தேவைப்படுகிறது. டாக்டர். சுப்பராயன் அவர்கள் துளசிராமன் உதவியை நாடுகிறார். நீண்ட நேரம் ஆலோசித்த பிறகு தன்னுடைய நண்பர்களாக இருக்கின்ற அரங்கநாத முதலியார், ஆரோக்கியசாமி முதலியார் ஆகிய இருவரின் ஆதரவையும் துளசி ராமன் அவர்களின் முயற்சியால் டாக்டர். சுப்பராயன் அவர்களுக்குக் கிடைத்தது.

இதற்குக் கைமாறாக முதல்வராகப் பதவி ஏற்றவுடன் துளசிராமன் அவர்களின் வேண்டு கோளுக்கிணங்க (Communal G.O.) வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவத்தை நடைமுறைப்படுத்தும் சட்டத்தை சுப்பராயன் தலைமையிலான அமைச் சரவை உத்தரவிடுகிறது. இவ்வாறு தமிழகத்தில் கல்வி மற்றும் இடஒதுக்கீடு முதலிய மறுமலர்ச்சித் திட்டங்களுக்கு வித்தாக நின்றவர் துளசிராமன் என்றால் அதுமிகையல்ல. ●

வெட்டுத்துணி 3

# புரியாத புதிர்

எனக்கு அப்போது கிட்டத்தட்ட வயது 25 இருக்கும். ஓர் உயர்நிலைப் பள்ளியில் அறிவியல் பாடம் நடத்திக் கொண்டிருந்தேன்.

வாரத்திற்கு ஒருமுறை பாடக் குறிப்பு எழுதும் மற்ற ஆசிரியர்கள் போல அல்லாமல், நான் தினமும் பாடக் குறிப்பு எழுதுவேன். இன்று இந்த வகுப்பில் என்ன என்ன பாடப் பகுதிகள் நடத்த வேண்டும்? அவற்றை எப்படி நடத்தினால் மாணவர்கள் ஈடுபாடு கொள்ளுவார்கள்? சுவையூட்டுவதற்கு வேடிக்கைக் கதை எதாவது கிடைக்குமா? என்றெல்லாம் முந்திய நாளே யோசித்துக் குறிப்புக்கள் எடுத்துக் கொண்டு வகுப்புக்குப் போவேன்.

வகுப்பில் ஜனநாயக முறையைக் கடைப்பிடித்தால் பாடங்களில் மாணவர்கள் ரசனையோடு கலகலப்பாக ஈடுபடுவார்கள்.

ஒருநாள் மதியம் 12 மணி இருக்கலாம். அறிவியலில் ஏதோ ஒரு பாடப் பகுதி நடத்திக் கொண்டிருந்தேன்.



“திரும்பத் திரும்ப அந்த மாணவி வகுப்பில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் கத்தியபடி வெளியே ஓடுவதும், நானோ அல்லது வேறு ஆசிரியர்களோ அவளை அடக்குவதும் வழக்கம் ஆயிற்று.”

திடீரென்று ஒரு மாணவி தான் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு எழுந்து டெஸ்க்கில் ஏறிக் குதித்து “ஐயோ எரியறதே.... எரியறதே...” எனக் கத்திக் கொண்டே வெளியே ஓடத் தொடங்கினாள்.

அதிர்ச்சியடைந்த நான் அவளைத் துரத்திக் கொண்டு வராந்தாவுக்கு ஓடினேன். வராந்தாவில் அவளைக் கீழே தள்ளி அமுக்கிப் பிடித்தேன்.

மல்லாக்கக் கிடந்த அவள் என்னை உதறித் தள்ளி விட்டு எழ முயன்றாள். அவள் தோள்களை அமுக்கிப் பிடித்தேன். “விடுடா சூத்ரா, விடுடா சூத்ரா” என்று என் கைகளைப் பிரித்துவிட முயன்றாள்.



பொன்னீலன்

“ஐயோ எரியறதே, எரியறதே” என்று அலறினாள்.

எனக்கு நன்றாகத் தெரியும், அவள் ஓர் உழைக்கும் சமூகப் பெண். என்னைச் “சூத்ரா விடுடா, சூத்ரா விடுடா...” என்று சொல்லி அய்யர் வீட்டுப் பெண் போலக் கத்துகிறாள். ஆச்சரியமாக இருந்தது.

சத்தம் கேட்டுப் பக்கத்து வகுப் பறைகளிலிருந்து சில பெண் ஆசிரியர் களும் ஓடி வந்து அவளை அமுக்கிப் பிடித்தார்கள். அவர்களையும் “சூத்ரத்தி விடுடி, சூத்ரத்தி விடுடி” என்று கத்தியபடிக் கடிக்க முயன்றாள் மாணவி.

“ஐயோ எரியறதே எரியறதே...” என்று திரும்பவும் திரும்பவும் அலறினாள்.

விபரம் அறிந்த பக்கத்துவீட்டு நடுத்தர வயது விவசாயப் பெண் “இரு, இரு, மீந் தண்ணியும் விளக்கு மாறும் இன்னா கொண்டு வாரேன்!” என்றாள். அவ்வளவுதான், ஆ.... என்ற அலறலோடு பேய் அவளை விட்டு விலகிவிட்டது.

தரையில் கிடந்த அவள் ஒன்றும் விளங்கமால் திருகத் திருக விழித்தாள். சட்டென்று எழும்பி முகத்தைத் துடைத்துவிட்டுத் தன் இருக்கைக்குப் போனாள்.

எனக்கு அப்போது திருமணம் ஆகவில்லை. பள்ளியை ஒட்டி ஒரு வாடகை வீட்டில் தங்கியிருந்தேன். எப்போதும் போல் அன்றும் மாலை நேரத்திலும் உயர்வகுப்பு மாணவர்கள் என் வீட்டில் கூடினார்கள்.

“சார்... பேய் பிசாசு இல்லைன்னு சொல்லுவீகளே, இதுக்கு என்ன பதில் சொல்லப் போறீயோ? என்றான் தாணுமாலையப் பெருமாள் என்ற ஒரு வளர்ந்த மாணவன்.

“வாங்கடா... நாம போய் அவ ஊர்ல விசாரிப்போம்” என்றேன் நான்.

இரவு பத்து மணி இருக்கும். நாலஞ்சு மாணவர்களோடு நானும் அந்தப் பெண் வாழும் ஊருக்குப் போனேன்.

அந்தப் பெண்ணைப் பிடித் திருந்தது ஒரு பிராமணப் பேய் என்றும், அந்தப் பிராமணப் பேய் தன் திருமணத்திற்கு முன்னால் யாரோ ஒருத்தனோடு தொடர்பு கொண்டு கருவுற்றவள் என்றும், கோபம் கொண்ட அவள் தாயார் அந்தப் பெண்ணின் உடம்பில் மண்ணெண் ணெய் விட்டு எரித்துக் கொன்று விட்டார் என்றும், அப்படிக் கொல்லப்பட்ட பெண்தான் இவளை இப்போது பேயாகப் பிடித்து ஆட்டு கிறாள் என்றும் விசாரித்து அறிந் தோம்.

திரும்பத் திரும்ப அந்த மாணவி வகுப்பில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் கத்தியபடி வெளியே ஓடுவதும், நானோ அல்லது வேறு ஆசிரியர் களோ அவளைக் கடக்குவதும் வழக்கம் ஆயிற்று.

சில நாட்களாக அந்தப் பெண் பள்ளிக்கு வரவில்லை.

விசாரித்ததில், அவள் கட்டியிருந்த உள் பாவடையில் ஒருநாள் தீப்பற்றி விட்டதாகவும், உடம்பு எங்கும் அது பரவி அவள் செத்துப் போய் விட்ட தாகவும் அறிந்தோம்.

ஆசிரியர் என்ற முறையில் துக்கம் கேட்க அன்று மாலையில் அந்த வீட்டிற்குப் போனேன். பெற்றோர் களால் எதுவும் பேச முடியவில்லை.



“பாவி மொவ, தான் செத்தது போதாதுன்னு, என் செல்ல மொவளையும் கொன்னு கூட்டிட்டுப் போயிட்டாளே! சண்டாளி! பாதகத்தி!” தன் நெஞ்சில் அடித்துப் புலம்பினார் தாயார். என்ன சொல்வது என்று தெரியவில்லை.

திரும்பும்போது, கேள்விகளால் என்னைத் துளைத்த என் மாணவர்களுக்குப் பதில் சொல்லவும் இயலவில்லை. இன்றுவரை அது ஒரு புதிராகவே என் மனதைக் குடைந்து கொண்டிருக்கிறது.




# காம்ரேட் பாலன் 2

**1948**-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில், ஒரு ஞாயிற்றுக்கிழமை காலை நேரம். அப்போது நீங்கள் திருநெல்வேலி ஜில்லாவில் கம்யூனிஸ்ட் இயக்கப் பணி புரிந்து கொண்டிருந் தீர்கள். கட்சிப் பணியா? தொழிற்சங்கப் பணியா? என்று எனக்கு நினைவில்லை. அக்காலத்தில் கம்யூனிஸ்ட்டுகளைப் பொறுத்தவரை இரண்டும் ஒன்றுதான்.

கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு மாகாணக் கமிட்டியைச் சேர்ந்த தோழர் கள் கூடி வாழ்கிற கம்யூன் ராயப் பேட்டையில் ஒயிட்ஸ் ரோடி லுள்ள ஒயிட் ஹவுஸில் கொஞ்ச காலம் இருந் தது. அங்கிருந்த தோழர் கள் உங்களைப் பற்றி நிறையப் பேசுவார் கள். உங்களைப் பற்றி அவர்கள் பேசு கிற பேச்சு உங்கள் மீது சொரிகிற புகழாரங்களாகவே இருக்கும்.



உங்களைப் பார்ப்பதற்கு முன் னாலேயே அவற்றை யெல்லாம் நான் கேட்டிருப்பதனால், நானே உங்களோடு பழகி அறிந்தவன் மாதிரி உங்கள் வீரப் பிரதாபங்களைப் பிறரிடம் பேசிக் கொண்டிருப்பேன். ஆங்கிலத்திலும், தமிழிலும் உங்கள் பேச்சுத் திறன் குறித்துத் தோழர்கள் புகழ்வார்கள். அதைக் கேட்ட அனு பவம் இல்லாத நானும் புகழ்வேன்.

ஒருமுறை கோவை மத்திய சிறையி லிருந்து சில தொழிலாளத் தோழர்கள் தப்பித்துப் போய்விட்டார்களாம். அந்தத் தொழிலாளர்களைக் கண்டு பிடிப்பதற்காகத் தொழிலாளர்கள் குடி யிருப்புக் காலனிகளிலும், தொழிற்சங்க ஆபீஸிலும் போலீசார் புகுந்து அட்டூழியம் புரிந்தார்களாம்.

போலீஸ்காரர் களின் அந்த அட்டூ ழியங்களைக் கண் டித்து நடந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் நீங்கள் பேசினீர்களாம்; உங்கள் பேச்சைக் கேட்டுப் போலீஸ் அதிகாரிகள்கூட உங்களைப் பாராட்டி னார்களாம்.

உங்களது வாதத் திறமை யைக் குறித்துப் பலரும் பாராட்டியது அதிசயப் படத்தக்கதல்ல என்பதனைப் பின்னால் நான் அறிந்தேன். உங்களைச் சந்தித்த அன்று, முதற் சந்திப்பின் போதே அந்தப் பிரசங்கம் குறித்து நான் உங்களிடம் விசாரித்தேன்.

அப்போது எனக்குப் பதினாறு வயது. ஞாயிற்றுக் கிழமை ஆபீஸ் கிடை யாது. தோழர்கள் அனைவரும் கம்யூனி லேயே இருப்பார்கள். காலை பத்து

மணிக்கு மேல் கிளம்பி 'ஸ்குவாட் சேல்ஸ்' என்கிற புத்தக விற்பனைக்காக நாங்கள் குழுக்களாகப் பிரிந்து நகரின் பல பகுதிகளுக்குச் செல்வோம். ஒவ்வொரு வீட்டிற்கும் போய் விடுமுறை நாட்களில் ஓய்வாக இருக்கிற குடும்பத் தலைவர்களை அழைத்து அக்கம் பக்கத் தார்களையும் கூட்டி வைத்துக் கொண்டு, அரசியல் பிரச்சாரமும் செய்து, புத்தகமும் விற்போம்.

இந்தப் புத்தக விற்பனையில் மற்ற தோழர்களோடு போட்டி போட்டுக் கொண்டு நான் விற்பேன். நான் எந்த ஸ்குவாடிலிருக்கிறேனோ, அந்த ஸ்குவாடுதான் அன்று அதிகமான புத்தகங்களை விற்றிருக்கும். இதுபற்றி நான் எல்லோரிடமும் பெருமை யடித்துக் கொள்வேன்.

எங்கள் கம்யூனுக்கு நீங்கள் முதல் நாள் இரவோ அல்லது நான் சந்தித்த அன்று விடியற்காலையோ வந்திருந் தீர்கள். நீங்கள் அங்கு வந்திருக்கிற விஷயம் எனக்குத் தெரியாது. ஒயிட் ஹவுஸ் என்பது பெரிய பங்களா. வீட்டைச் சுற்றிப் பெரிய தோட்டம். மாமரங்களும், கொய்யா மரங்களும் நிறைய இருக்கும். காலை நேரங்களில் எனக்கு வாசம் அந்த மரங்களின் மீதுதான்.

அந்தப் பங்களாவுக்குள் நவீன வசதிகளுடைய பல பாத்ரூம்கள் உண்டு. ஆயினும் பெரும்பாலான தோழர்கள் தோட்டத்திலுள்ள பெரிய நீர்த் தொட்டியருகேதான் குளிப்போம். தோளில் டவலும், கையில் சோப்புப் பெட்டியும், வாயில் டூத் பிரஷுமாக நீங்கள் அந்த பாத்ரூமுக்குக் குளிக்கப் போய்க் கொண்டிருந்த வழியில்தான் நான் அந்த மரத்தின் மீதிருந்து உங்களை முதலில் கண்டேன். பார்த்த மாத்திரத் தில் தோழர் பாலதண்டாயுதம் நீங்கள் தான் என்று தெரிந்து கொண்டேன்.

உங்களைப் பற்றி எற்கெனவே தெரிந் திருந்தும் நானாக வந்து அறிமுகம் செய்து கொள்கிற நிலையில் நான் அப் பொழுதில்லை. எனது பிராயம் அப்பொழுது என்னை மரத்தின்மேல் வேறு ஏற்றி வைத்திருந்தது. என்னுடைய அறிவு உங்களுடைய நட்பை அவாவியது. அப்படியெல்லாம் ஒருவரிடம் போய்த் தன்னை ஒருவர் அறிமுகம் செய்து கொள்ள வேண்டும் என்று நான் அறியாத பருவம் அது.

இருப்பினும் உங்களைப் பார்த்த வுடன் என்னுடைய விளையாட்டுத் தனம் என்னிடமிருந்து விலகியது. கொய்யாப் பழத்தின் மீதிருந்த ஆசையை விட்டு உடனே உங்கள் பின் னாலேயே பாத்ரூம் வரைக்கும் வந்தேன்.

அந்த பாத்ரூம் தொட்டியைச் சுற்றிலும் நின்று மூன்று தோழர்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள். அவர் களில் ஒருவராக நீங்களும் குளிக்க ஆரம்பித்தீர்கள். நான் ஏற்கனவே காலைக் குளியலை முடித்திருந்தேன்.


மகாத்மா
காந்தி

அப்போது உங்கள் இடது கால் பெரு விரலுக்கு அடுத்த விரலில் ஏதோ காயம் பட்டு அதற்குக் கட்டுப் போட்டிருந் தீர்கள். அந்த விரல் நனையாதிருக்கும் பொருட்டு ஒரு காலைத் தொட்டி யின்மீது தூக்கி வைத்து, ஒரு காலில் நின்று கொண்டு நீங்கள் குளித்தீர்கள்.

ஏற்கனவே குளித்துக் கொண்டிருந்த தோழர்கள் உங்களை உற்சாகமாக வர வேற்று உங்களோடு பேச ஆரம்பித்தார் கள். தண்ணீர்த் தொட்டிக்குப் பக்கத் தில் உங்கள் மூக்குக் கண்ணாடியைக் கழற்றி வைத்துவிட்டு அக்காலத்தில் நீங்கள் தங்க பிரேம் மூக்குக் கண்ணாடி அணிந்திருந்தீர்கள். இடுங்கிய கண் களோடு நீங்கள் சொன்ன வார்த்தைகள்

எனக்கிப்போதும் நினைவிலிருக்கின்றன. நீங்கள் சொன்னீர்கள் :

“இதென்னப்பா, ஜெயில் வழக்கம் உங்களை இன்னும் விடலையா?” என்று சொல்லி அதைத் தொடர்ந்து ஜெயில் வாழ்க்கையை நீங்கள் விவரித்தீர்கள். நீங்கள் பேசுவது கதை சொல்வது மாதிரி சுவாரஸ்யமாக இருந்தது. நான் கேட்டுக் கொண்டு நின்றிருந்தேன்.

அக்காலத்தில் கம்யூனிஸ்ட்டுகள் ஆடம்பர வாழ்க்கையை அனுபவிப்பதில் நாட்டமில்லாதவர்களாக இருந்தார்கள். பெரும்பான்மையான தோழர்கள், நவீன வசதிகளுடனிருந்த அந்த பங்களாவின் பாத்ரூம்களில் குளிக்காமல் தண்ணீர்த் தொட்டியைச் சுற்றிக் குளிக்க ஆரம்பித்தது அதன் காரணமாயிருக்கலாமோ என்று பின்னால் எனக்குத் தோன்றியது.

நீங்களும் எங்களில் ஒருவராக அந்த நீர்த் தொட்டியினருகே குளித்தது உங்களிடம் நெருங்கி வருவதற்கு என் மனத்தளவில் ஒரு காரணமாகியிருந்தது.

நீங்கள் குளிக்கிற வரை அங்கேயிருந்து நீங்கள் வருகிறபோது உங்களைப் பின்தொடர்ந்து நானும் வந்தேன். அப்போதுதான் நீங்கள் என்னைப் பார்த்தீர்கள். பார்த்தவுடன் கூட இருந்த தோழர்களிடம், “Who is this young Comrade?” என்று கேட்டீர்கள். நான் உங்களுக்கு அறிமுகம் செய்விக்கப்பட்டேன்.


நேருஜி

வீட்டுக்கு யாரேனும் விருந்தாளிகள் வந்தால் அவர்கள்மீது விசேஷ வாஞ்சை கொண்டு அவர்களைச் சுற்றுகிற ஒரு குழந்தையின் குணத்தோடு நான் உங்களையே பின்தொடர்ந்து கொண்டிருந்தேன். காலையில் காப்பி சாப்பிடுகிற பொழுதும், பத்து மணிக்குச் சாப்பாடு சாப்பிடுகிற பொழுதும் நான் உங்கள் பக்கத்திலேயே இருந்தேன். நாம் இருவரும் ஒன்றாகப் பேசிக்கொண்டு சாப்பிட்டோம்.


சர்தார் பட்டேல்

வழக்கமாக ஞாயிற்றுக் கிழமைகளில் புத்தகம் விற்கப் போகிற நாங்கள் அன்றைக்குப் போகவில்லை. அதற்குக் காரணம், சில தினங்களுக்கு முன் மகாத்மா காந்திஜி கொலையுண்டிருந்ததுதான்.

காலையில் காபி சாப்பிடுகிற பொழுதும், பின்னர் ஹாலில் பத்திரிகைகள் படித்துக் கொண்டிருந்த பொழுதும் நீங்கள் காந்திஜியைப் பற்றியும், காந்திஜியின் கொலை பற்றியும் அதிகம் பேசினீர்கள். மற்றவர்கள் பேசுகிற பொழுது அவர்கள் பேசுகிற வரை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, நீங்கள் பேசுகிற முறைக்காகக் காத்திருப்பது போலிருந்து, பின்னர் நீங்கள் அதிக நேரம் பேசினீர்கள்.

சர்தார் வல்லபாய் பட்டேலை நீங்கள் அன்றைக்கு மிகவும் கடுமையாகத் தாக்கினீர்கள். நேருஜியின் தலைமைக்கும், கம்யூனிஸ்ட் இயக்கத்துக்கும் பெரிய ஆபத்து வரப்போகிறதென்று எச்சரித்தீர்கள்.

நீங்கள் விவாதம் செய்கிறபோது அதிகம் உணர்ச்சி வசப்பட்டு முகம் சிவந்து போனீர்கள். ஆனால், விவாத முடிவில் இணக்கமாகப் புன்னகை செய்தீர்கள். சில சமயங்களில் வாய்விட்டுச் சிரித்தீர்கள்.

பிறகு நீங்கள் தனியாக இருந்த பொழுது நான் உங்களிடம் பேசுவதற்காக வந்தேன். நான் பேசுவதென்றால், கையில் ஒரு ‘பைலுடன்’தான் வருவேன். யாராவது சிக்கிக் கொண்டால் நானெழுதி வைத்திருக்கிற கதைகளைப் படித்துக் காட்டுவதற்காகத்தான். எனது சிறுபிள்ளைத்தனமான அந்த முயற்சிகளை எல்லாத் தோழர்களும் இணக்கமாகவோ, ஆதரவாகவோ கவனிப்பது கூட இல்லை.

ஆனால் நீங்கள்





## வள்ளலாருக்கும் பாரதிக்கும் ஒரே சிந்தனை அலைவரிசை

அகவலில் வள்ளலார், "அருளே நம் தொழில்" என்றார். பாரதியாரோ தமது சுயசரிதையில், "எமக்குத் தொழில் கவிதை" என்றார்.

"அருளே நம் தொழில்" என்று வள்ளலார் கூறியதைப் போலவே, பாரதியும் "எமக்குத் தொழில் கவிதை" எனக் கூறியுள்ளதில் ஒரே சிந்தனை ஓட்டத்தைக் காணமுடிகிறது.

பாரதிக்கு முன்பு வாழ்ந்தவர் வள்ளலார். பின்னர் வந்த பாரதி இவ்வாறு எழுதியதற்கான நதிமூலம், "அருளே நம் தொழில்" என்ற வள்ளலார் வரிதானோ என எண்ணச் செய்கிறது.

வள்ளலார் 'அருள்' என்கிறார். பாரதி, 'கவிதை' என்கிறார். வள்ளலாரும் பாரதியும் இருவருமே கையாண்ட பொதுச்சொல் 'தொழில்.'

காலத்தால் வள்ளலார் மூத்தவரானதால், பாரதியாரின் சிந்தனை வள்ளலாருக்குத் தோன்றியிருக்காது. பாரதி ஒருவேளை வள்ளலாரின் அகவலைப் படித்திருக்கலாம். வள்ளலாரின் 'தொழில்' என்ற சொல் ஒட்டம் பாரதிக்குள் தொழில் பட்டிருக்கலாம். தனித்துவமாகவும் பாரதிக்கு அதே சிந்தனை ஏற்பட்டிருக்கலாம்.

எப்படியாயினும், நம் தொழில் அருள் என்பதையும், எமக்குத் தொழில் கவிதை என்பதையும் ஒப்பிட்டுப் படிப்பவர்களுக்குள், ஒருவித ஆனந்தம் ஏற்படுமானால் அது ஆச்சரியமல்ல. ஏனெனில், ஞானிகள் ஒரே மாதிரியே சிந்திப்பவர்கள்.

– ந.நி.

அந்தக் கதைகளைப் படிக்கச் சொல்லி மிகவும் ஆர்வமாகக் கேட்டீர்கள். சில வற்றைப் பாராட்டினீர்கள். பிற தோழர் களிடம் என் கதைகளைப் புகழ்ந்து விமர்சித்தீர்கள். அதன் பின்னர் நானும் உங்களைப் புகழ்ந்து உங்களிடமே பேசினேன்.

"கோயம்புத்தூர் சிறையிலிருந்து தப்பிச் சென்றுவிட்ட அந்தத் தொழி லாளர்களுக்காக நீங்கள் பேசிய பேச்சு உங்களுக்கு நினைவிருக்கிறதா?" என்று நான் கேட்டேன். உண்மையில் உங் களுக்கு அந்தப் பேச்சு நினைவில்லை. உங்கள் வாசகங்களை உங்களுக்கு நினைவூட்டிப் பிரசங்கம் செய்வது மாதிரி உங்கள் முன் நான் பேசினேன்.

"கைது செய்து காவலில் வைக்கப் பட்ட எங்கள் தொழிலாளத் தோழர் களைக் காப்பாற்றுவதற்கு மறுபடியும் எங்கள் கையில் கொண்டு வந்து ஒப்பு விப்பதற்கு – கையாலாகாத அர சாங்கம் தொழிலாளர்களின் வீடுகளில் புகுந்து எங்கே? என்று கேட்கிறது. 'எங்கே அவர்கள்?' என்று கேட்க வேண்டியவர்கள் நாங்கள். கம்யூனிஸ்ட் டுகள் கட்டுண்டிருப்பது போலீசின் பலத்தால் அல்ல, நாங்கள் விரும்பினால் சிறைக்கம்பிகள் வளைந்து கொடுக்கும், சிறைச் சுவர்கள் குனிந்து கொடுக்கும்" என்ற உங்கள் வாசகங்களை நான் உங்களுக்கே பேசிக் காட்டியதைக் கேட்டு மகிழ்ந்து சிரித்தீர்கள்.

கல்கத்தாவில் நடைபெறுகிற அகில இந்திய கம்யூனிஸ்ட் கட்சி காங் கிரசுக்குப் பிரதிநிதியாகப் போகிற வழி யில் நீங்கள் எங்கள் கம்யூனுக்கு வந்திருந்தீர்கள். அன்று இரவோ, மறு நாளோ நீங்கள் கல்கத்தாவுக்குப் போனீர்கள். கல்கத்தா காங்கிரஸ் முடியுமுன் கம்யூனிஸ்ட் கட்சி அடக்கு முறைக்கு இலக்காகியது. உங்கள்மீது வாரண்ட் பிறப்பிக்கப்பட்டது. கல்கத் தாவிலிருந்து திரும்பி வருகிற பொழுதே நீங்கள் ஒரு தேடப்படுகிற மனிதனா யிருந்தீர்கள்.

*(தொடரும்)*

நேர்காணல்

# தமிழ் நூல்கள் மின்னூலாக்கம்

**கா**கிதத்தில் தற்போதுள்ள நூல்கள் தொடக்கத்தில் பனையோலைச் சுவடிகளாக இருந்தன. செப்பேடுகளிலும் பல தகவல்கள் எழுதப்பட்டன. கல்வெட்டுக்களிலும் பல செய்திகள் பொறிக்கப்பட்டன. செப்பேடும், கல்வெட்டும் எல்லோர்க்கும், எல்லா இடங்களுக்கும் சாத்தியமானவையல்ல. பண்டைய ஓலைச்சுவடிகளும், காகிதப் புத்தகங்களும் நீண்ட காலத்திற்குப் பயன்தராதவை.

தற்போது, புத்தகங்களைக் கணினியில் 'மின்னூலாக' (Digitize) மிகப் பாதுகாப்பாக வைத்துக்கொள்ளும் நடைமுறை வந்துள்ளது. பழைய காகிதப் புத்தகங்களையும் அப்படியே 'ஸ்கேனிங்' இயந்திரத்தில் படம் பிடித்து, அவற்றை மின்னூல்களாக இணையதளங்களில் பதிவிட்டுப் பயன்படுத்தும் இந்த முறையால், நமது பழைய நூல்களனைத்தையும் காப்பாற்றிக் கொள்ளலாம்.

இப்பணியைத் தனிப்பட்ட முறையில் பலரும், மின்னூலாக்க அமைப்பினரும் செய்து வருகின்றனர். இதனால் தமிழில் பல அரிய நூல்கள் இணையதளங்களில் மின் நூல்களாகக் காணக்கிடைக்கின்றன.

இந்த மின்னூலாக்கம் செய்யும் அரிய பணியை, "உலகத் தமிழ் நூலக அறக்கட்டளை" என்ற அமைப்பை நிறுவிச் செய்து வருகிறார் முனைவர் ஈழம் தமிழப்பன் அவர்கள். தேவகோட்டையைச் சேர்ந்த இவர், தமிழக அரசின் வருவாய்த் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். இவரது வயது 85.

ஓய்வாக இருக்க வேண்டிய வயதில், இவர் தன் சொந்தப் பொருளைச் செலவிட்டுத் தமிழுக்காக இந்தப் பணியைச் செய்து கொண்டிருக்கிறார். கோவை சின்னியம்பாளையம் அருகில் தனியொருவராகத் தங்கியிருக்கும் அவரை, 'ஓம் சக்தி'யின் சார்பில் சந்தித்தோம்.

அவர் குடியிருக்கும் வீட்டின் வரவேற்பறையில்தான் அவர் தங்குவதும், அலுவலகப் பணிகளும். மற்ற இரு அறைகளில் ஏராளமான புத்தகங்களை அடுக்கி வைத்துள்ளார். இரு இளைஞர்களை வைத்துப் புத்தகங்களைக் கணினியில் மின்னூலாக்கும் பணிகளைச் செய்து வருகிறார். அவர் 'ஓம் சக்தி'க்கு அளித்த பேட்டி...

***கேள்வி : வருவாய்த் துறையில் வேலை பார்த்த உங்களுக்குத் தமிழ் நூல்கள் துறையில் எப்படி ஆர்வம் வந்தது?***




**பதில் :** எனக்குப் பள்ளியில் படிக்கும் போதிலிருந்தே தமிழில் மிகுந்த ஆர்வம் உண்டு. பள்ளியில் நடந்த பேச்சுப்போட்டிகள், கட்டுரைப் போட்டிகளிலெல்லாம் கலந்து கொண்டு பரிசுகள் பெறுவேன். தொடர்ந்த இந்த ஆர்வத்தினால் வருவாய்த் துறையில்

வேலைக்குப் போன பின்பும், தனிப் பட்ட முறையில் தமிழ் படிக்கத் தொடங்கினேன். முதலில் புலவர் படிப்புப் படித்தேன். பின்னர் தமிழில் பி.லிட், எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., பி.எட்., கல்வெட்டியல் மற்றும் சுவடி யியல் பட்டயப் படிப்புகள் எனத் தமிழில் நிறையப் படித்தேன். அதன்பின் தமிழில் 25 நூல்கள் எழுதி வெளி யிட்டுள்ளேன். இவற்றிற்கெல்லாம் காரணம் எனது தமிழ்ப் பற்றுத்தான்.

**கேள்வி : நூல்களை மின்னூலாக்கம் செய்யும் பணியைத் தொடங்கியது எப்படி?**

**பதில் :** எனது படிப்புகளுக்காகப் பல நூல்களை வாங்கினேன். அதன் பின், சில பத்திரிகைகளில் மதிப்புரை எழுதப் பல புத்தகங்கள் தந்தனர். அவற் றையெல்லாம் பாதுகாத்து வைத்திருந் தேன். இவ்வாறு 5 ஆயிரம் புத்தகங்களுக்கு மேல் சேர்ந்துவிட்டன.

இவற்றை அழியாமல் பாதுகாக்க வேண்டுமென்றும், இவற்றால் மற்றவர் கள் பயன்பெற வேண்டுமென்றும் விரும்பினேன். அதற்கு இந்நூல்களை மின்னூலாக்கம் செய்து, இணையத்தில் வெளியிடுவது சிறந்த முறையாக இருப் பதால், முதலில் என்னிடமிருப்பவற்றை மின்னூலாக்கம் செய்தேன். பின்னர் மற்றவர்களிடமிருந்து நூல்களைப் பெற்று மின்னூலாக்கம் செய்து வரு கிறேன்.




**கேள்வி : இன்னும் எத்தனை நூல்களை மின்னூலாக்கம் செய்ய எண்ணி யுள்ளீர்கள்?**

**பதில் :** தமிழ் நூல்கள் தொடர்பான எமது இணையதளத்திற்கு ‘உலகத் தமிழ் நூலகம்’ எனப் பெயரிட்டுள்ளேன். எனவே, தமிழில் அச்சுத் தோன்றிய காலத்திலிருந்து இதுவரை வந்துள்ள அத்தனை நூல்களையும் மின்னூலாக் கம் செய்ய வேண்டும் என்பதே என் குறிக்கோள். ஏதோ சிலவற்றை மின்னூ லாக்கம் செய்துவிட்டு, நிறுத்திக்கொள் வதில் எனக்கு விருப்பம் இல்லை. இது முழுமையான நூலகமாக இருக்க வேண்டும் என்பதே எனது நோக்கம்.

**கேள்வி : இது உங்களால் இயலக்கூடிய பணியா?**

**பதில் :** இது பெரிய திட்டம். பெரிய பணிதான். இதனை நானே முழுமையாக நிறைவேற்றிவிட முடி யாது. நான் தொடங்கி வைக்கிறேன். மற்றவர்கள் அதைக் கொண்டு செல்ல வேண்டும் என்பதே எனது அவா.

**கேள்வி : இந்தப் பணிக்கான செயல் திட்டம் என்ன?**

**பதில் :** தமிழில் வெளிவந்துள்ள நூல்கள் மட்டுமின்றி, கல்வெட்டுகள், செப்பேடுகள் அனைத்தையும் இதில் பதிவு செய்ய வேண்டும். அதன்பின், தமிழைப் பற்றிப் பிற மொழிகளில் வந் திருப்பவற்றைத் தொகுக்க வேண்டும். இதற்கு என்னென்ன நூல்கள் எந்தெந்த ஆண்டுகளில் வெளிவந்திருக்கின்றன என்பதைப் பட்டியலிட வேண்டும். இது மிகக் கடினமான பணிதான். இதற்கு உலகம் முழுவதும் உள்ள தமிழார்வம் உடைய தன்னார்வத் தொண்டர்கள் தேவை. இதற்குப் பொருள் வசதி தேவை. வசதியுள்ளவர்கள் கொடுத்து உதவினால் நாமே முடிந்தவரை செய்ய

லாம். பட்டியலிட்டபின் நூல்களைச் சேகரிக்க வேண்டும்.

நூல்கள் கிடைக்காதபோது, வேறு எங்கே இருக்கிறதோ அங்கே தொடர்பு கொண்டு வாங்கி மின்னூலாக்கம் செய்ய வேண்டும். அவர்கள் தராத போது, 'எம்மிடம் இந்நூல் இல்லை, இன்ன இடத்தில் இருக்கிறது' என்ற குறிப்பை நாம் தரவேண்டும் என விரும்புகிறேன்.

**கேள்வி : இப்பணிக்கு உங்களுக்கு என்ன மாதிரியான வசதிகள் தேவைப் படுகின்றன?**

**பதில்** : இதற்கு இன்னும் பல வசதி கள் தேவையாக உள்ளன. ஒருவரிடத் தில் நமக்குத் தேவையான ஒரு நூல் இருக்கிறதென்றால், நமக்கு அதை அனுப்புமாறு கேட்டால் அனுப்ப மாட் டார்கள். நாம்தான் போய் வாங்கிக் கொள்ள வேண்டும். எனவே, அவர் இருக்குமிடத்திற்கே சென்று அந்நூலைப் பெற்று அங்கேயே மின்னூலாக்கம் செய்துவிட்டு, அதனைத் திருப்பிக் கொடுத்துவிடலாம். அதற்கு, ஒரு குழு வினர் வேண்டும். அந்தக் குழுவினருக்கு, 'கேரவன்' எனப்படும் பல வசதிகள் உள்ள வண்டி நம்மிடம் இருக்க வேண் டும். அந்த வண்டியில் மின்னாக்கம் செய்வதற்குத் தேவையான கருவிகளை வைத்துக்கொண்டு போய், நமது பணிகளைச் செய்து வரலாம்.

இதற்கான கருவிகள் வாங்க வேண் டும். இப்பணியில் 'ரொபாட் ஸ்கேனர்' எனப்படும் ஆட்டோமேடிக் ஸ்கேனர் இருந்தால் நல்லது. இக்கருவி இருந்தால் அது தானாகவே மின்னூலாக்கத்திற் கான ஸ்கேன் செய்யும் பணியை எளி தாகச் செய்துவிடும். ஆனால், இதற்குப் பெரிய விலை கொடுக்க வேண்டி யிருக்கிறது.

ஒரு செயலைச் செய்தால் அது முழு மையாக இருக்க வேண்டும். அதற்கான வசதி என்னிடம் இல்லாமலிருக்கலாம். ஆனால், அதனை முழுமையாகச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. அந்த எண்ணத்தை முழுமைப்படுத்த வேண்டும். அதற்கு நான் ஒருவன் செய் வதை இன்னும் சிலர் சேர்ந்து செய்ய வேண்டும் என விரும்புகிறேன். நான் செய்து வருவது தொடக்கம்தான்.

**கேள்வி : என்னென்ன வகையான புத் தகங்களை மின்னூலாக்கம் செய்துள் ளீர்கள்?**

**பதில்** : தமிழில் தொல்காப்பியத்தி லிருந்து, இன்றைக்கு வந்துள்ளவை வரையான இலக்கிய நூல்கள் பல வற்றை மின்னூலாக்கம் செய்துள்ளேன். சங்க இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள், தேவாரம், திருவாசகம், பெரியபுராணம் எனப் பல உள்ளன. மேலும் சோதிடம், மருத்துவம், புராணங்கள், கலைகள் தொடர்பான நூல்களும், புகழ் பெற்ற ஆசிரியர்கள் எழுதிய சிறந்த நூல்கள் பலவும் உள்ளன.

இந்த நூலகத்தின் பயன்பாடு என்ன வென்று சொன்னால், தமிழைக் கற்றுக் கொள்ளலாம். தமிழில் ஆராய்ச்சி செய் யலாம். அதற்கு என்னென்ன தேவையோ, அந்த நூல்களெல்லாம் இதில் உள்ளன. தமிழைக் கற்றுக் கொள் வதற்கு, தமிழைக் கற்றுக் கொடுப்பதற்கு, ஆராய்ச்சி செய்வதற்கு என மூன்று



மின்னூலாக்கப் பணி

வகையான பயன்பாட்டிற்கு இந்த நூலகத்தைப் பயன்படுத்தலாம்.

**கேள்வி : இந்த நூல்களெல்லாம் நீங்கள் சொந்தமாக வாங்கியவையா? மற்றவர்கள் கொடுத்தவையா?**

**பதில் :** பெரும்பாலான நூல்கள் நான் சொந்தமாக வாங்கியவை. சில நூல்கள் முன்னரே கூறியபடி பத்திரிகைகளுக்கு மதிப்புரை எழுத வந்தவை. மற்ற நண்பர்கள் எழுதி வெளியிட்டபோது கொடுத்த புத்தகங்கள் சில. கொடுத்த, கிடைக்கப்பெற்ற நூல் எதனையும் வீணாக்காமல் மின்னாக்கம் செய்து வருகிறேன்.

**கேள்வி : அரிய நூல்கள் ஏதேனும் மின்னூலாக்கம் செய்துள்ளீர்களா?**

**பதில் :** இப்போது மின்னூலாக்கம் செய்து வரும் நூல்கள் எல்லாம் அரிய நூல்கள்தான். 1800–களில் வெளியான நூல்களிலிருந்து இன்று வெளிவரும் நூல்கள் வரை பல நூல்கள் மின்னூலாக்கம் செய்யப்பட்டு வருகின்றன.

**கேள்வி : இவற்றை இணையத்தில் பார்ப்பதற்கான இணையதள முகவரி என்ன?**

**பதில் :** அதற்கான ஏற்பாடுகள் இப்போதுதான் நடைபெற்று வருகின்றன. அநேகமாக இன்னும் ஒரு மாதத்தில் இணையதளம் தொடங்கப்பட்டுவிடும். அதன்பின் பார்க்கலாம்.

**கேள்வி : புத்தகங்கள் சேகரிப்பில் கடினமான அனுபவம் ஏதேனும் உண்டா?**

**பதில் :** சிலர் கேட்டவுடன் தங்களிடமிருந்த புத்தகங்களைக் கொடுத்தார்கள். சிலர், வைத்திருந்தாலும் கொடுக்கவில்லை. பெங்களூரில் 3 ஆண்டுகள் இருந்தேன். அங்கே தமிழ் அமைப்பைச் சேர்ந்த ஒருவர், சாதாரணக் கட்டடத்தில் நிறைய நூல்களைச் சேர்த்து வைத்திருந்தார். அந்த நூல்களை நான் போய்க் கேட்டேன். அவர்கள் யோசித்தார்கள், கொடுக்கவில்லை.

அந்த இடத்திற்குப் பக்கத்து வீட்டுக்காரர் ஒருவரோடு தகராறு ஏற்படவே, அவர் இந்தப் புத்தகங்களையெல்லாம் எடுத்துத் தெருவில் போட்டுவிட்டார். அவற்றைக் கொடுத்திருந்தால் நான் மின்னூலாக்கம் செய்து அழியாமல் பாதுகாத்திருப்பேன்.

**கேள்வி : ஆய்வு மாணவர்கள் யாரேனும் உங்களிடமுள்ள நூல்களைப் பயன்படுத்தி ஆய்வு செய்துள்ளார்களா?**

**பதில் :** இதுவரை யாரும் செய்யவில்லை. மின்னூலாக்கம் செய்யும் பணி இப்போதுதான் தொடங்கியுள்ளது. இது நிறைவு பெற்றபின் இந்த இணையத்தைப் பயன்படுத்தி ஆய்வு செய்வார்கள். இப்போது யாரேனும் ஆய்வுக்கு வந்தால், என்னிடம் நூலாக இருப்பவற்றையும் பயன்படுத்திக் கொள்ளலாம். அவர்களுக்கு வழிகாட்டவும் நான் தயாராக இருக்கிறேன்.

தமிழ் படிக்க, வெளிநாட்டை, வெளிமாநிலத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும் சரி, இங்குள்ளவர்களாயினும் சரி, என்னிடம் அனுப்புங்கள். நான் கற்றுத்தரத் தயாராக இருக்கிறேன்.

இன்று ஐ.நா. மன்றம், இன்னும் 50 முதல் 100 ஆண்டுக்காலத்திற்குள் தமிழ் அழிந்துவிடும் என்கிறது. அதைத் தடுக்க அரசாங்கமும், பிற அமைப்புக்களும் எதுவும் செய்யாமலுள்ளன. எனவே, தமிழை அழியாமல் காக்க, இந்த மின்னூலாக்கத் திட்டம் தேவையாக உள்ளது.

**கேள்வி : இந்தப் பணிக்கு யாரேனும் பொருளுதவி செய்கிறார்களா?**

**பதில் :** யாரும் பொருளுதவி செய்யவில்லை. எனது சொந்தப் பணத்திலிருந்துதான் செய்து வருகிறேன். இது பற்றி யாருக்கு அக்கறை இருக்கிறது? இப்படிச் செய்ய வேண்டும் என்ற நிலைப்பாடு உள்ளவர்களே மிகவும் குறைவு. நன்கொடை கொடுக்க நினைத்தால் கொடுக்கலாம். இல்லாவிட்டால், தங்களிடமிருக்கும் நூல்களைத் தந்தால் போதும், அவற்றை நாங்கள் மின்னூலாக்கம் செய்துவிட்டுத் திருப்பித் தந்துவிடுகிறோம்.

திரு. ஈழம் தமிழப்பன் அவர்களின் மின்னூலாக்கப் பணிக்கு நூல்களைத் தரவும், உதவிகள் செய்யவும் விரும்புவோர் அவரைத் தொடர்பு கொள்ள வேண்டிய செல்லிடப்பேசி எண் : 98413 95344.

பேட்டி : **இரா. வேணுகோபாலகிருஷ்ணன்**

மதுரை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் தலைவர் சுவாமி கமலாத்மானந்தர் ஏராளமான அனுபவங்களைப் பொக்கிஷங்களாக வைத்திருக்கிறார். காலைக் கடன்கள், உணவு, உறக்கம் எனத் தவிர்க்க முடியாமல் செலவிடப்படும் கால நேரத்தைத் தவிர, மீதி அத்தனை நேரத்தையும் ஆன்மீகச் சிந்தனைகளிலேயே செலவழிப்பதில் விருப்பமுள்ளவராகத் திகழ்பவர் சுவாமிகள்.

தமிழ்நாட்டில் நடந்த ஆட்சி மாற்றங்கள் பற்றிக்கூட அவர் அறிந்து கொள்ளவில்லை. சுனாமி, கஜா புயல் அவருக்குத் தெரியுமா என்பது சந்தேகம்தான். பத்திரிகைகளோ, தொலைக்காட்சியோ அவர் பக்கத்தில் நெருங்காது. இப்படியும் ஒருவரால் புறத்தாக்கங்களுக்கு இடம் கொடுக்காமலிருக்க முடியுமா என்றால், இதோ இருக்கிறார் சுவாமி கமலாத்மானந்தர்.

இதிலிருந்து ஒன்று புரிகிறது. இவரைப் போலத்தான் இமயமலைச் சாரல்களில் ஓயாமல் தவமியற்றி மௌனத்தில் மூழ்கிப்போன ஞானிகள் ஏதும் தெரியாதவர்களாக, ஆனால் எல்லாம் தெரிந்தவர்களாக நிச்சயம் இருந்திருப்பார்கள் என்பது.

இத்தகைய ஞானத் தலைவர் கமலாத்மானந்தர் தமது அனக அனுபவங்களை ‘ஓம் சக்தி’யில் பதிப்பிக்க அனுப்பியுள்ள தகவல்கள் நிச்சயம் நமது சிந்தனையோட்டத்தில் புதிய இரத்த ஓட்டத்தைச் செலுத்தும்.

– இ.ஆர்.

# வெள்ளரிக்காய் வழங்கிய முஸ்லிம் அன்பர்! (1)

அமெரிக்காவில் சிகாகோ நகரத்தில் 1893–ஆம் ஆண்டு சர்வ சமயப் பேரவை நடைபெற்றது. அதில் உலகில் முக்கியத்துவம் வாய்ந்த எல்லா மதங்களையும் சேர்ந்த பிரதிநிதிகளும் கலந்து கொண்டார்கள்.

இந்தப் பேரவை நிகழ்ச்சிகள் 1893 செப்டம்பர் 11–ஆம் தேதி முதல் 27 ஆம் தேதி வரை பதினேழு நாட்கள் நடைபெற்றன.

பேரவை நிகழ்ச்சிகளில் சுவாமி விவேகானந்தர் இந்துமதத்தின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அதனால் அவர் இந்தியாவின் பெருமையை உலக அரங்கில் உயர்த்தினார்.

சுவாமி விவேகானந்தர் அமெரிக்கா செல்வதற்கு முன்பு சுமார் நாலரை ஆண்டுகள், இந்தியாவின் பல பகுதிகளுக்கும் திருத்தலப் பயணம் மேற்கொண்டிருந்தார்.

அவ்விதம் அவர் பயணம் செய்த போது, ஒருமுறை அவருடன் சுவாமி அகண்டானந்தரும் இருந்தார்.

சுவாமி அகண்டானந்தர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் சீடர்களில் ஒருவர். இருவரும் இமயமலையில் இருக்கும் ‘அல்மோரா’ என்ற இடத்திற்கு நடந்து சென்று கொண்டிருந்தார்கள். இருவரும் உணவு சாப்பிட்டுப் பல மணி நேரம் ஆகியிருந்தது.

அல்மோராவை அடைவதற்கு முன்பு, சுமார் மூன்று கிலோ மீட்டர் தூரத்தில் முஸ்லிம்களின் இடுகாடு இருந்தது.

அந்த இடத்தை அடைந்த



**சுவாமி கமலாத்மானந்தர்**



போது பசி, தாகம் காரணமாக விவேகானந்தருக்கு மிகுந்த களைப் பும் சோர்வும் ஏற்பட்டது. அதனால் அவரால் மேற்கொண்டு நடக்க முடிய வில்லை. மயங்கிக் கீழே விழும் நிலைக்கு வந்துவிட்டார்.

எனவே அவரை அங்கேயே படுக்க வைத்துவிட்டு, ‘பக்கத்தில் எங்காவது உணவோ, தண்ணீரோ கிடைக்குமா?’ என்று பார்ப்பதற்கு அகண்டானந்தர் சென்றார்.

அந்த இடுகாட்டில் ‘ஜுல்பிகர் அலி’ என்ற முஸ்லிம் ஒருவர் வேலை செய்து வந்தார். அவர் இடுகாட்டிற்கு

அருகில் ஒரு குடிசையில் வாழ்ந்து வந்தார். அவரிடம் அன்றைய தினம் 'உணவு' என்று சொல்வதற்கு, ஒரே ஒரு வெள்ளரிக்காய் மட்டும்தான் இருந்தது.

விவேகானந்தரின் மோசமான உடல்நிலை ஜுல்பிகர் அலிக்குப் புரிந்தது. எனவே அவர் ஓடிச் சென்று, தம்மிடமிருந்த வெள்ளரிக்காயை விவேகானந்தருக்குக் கொடுத்தார். மிகவும் பலவீனமாக இருந்த விவேகானந்தர், அதைத் தமது வாயில் வைக்கும்படி கேட்டுக் கொண்டார்.

அதற்கு ஜுல்பிகர் அலி, "சுவாமிஜி நான் ஒரு முஸ்லிம் ஆயிற்றே!" என்றார். "அதனால் என்ன?! நாம் அனைவரும் சகோதரர்கள் அல்லவா?" என்று புன்முறுவலுடன் கேட்டார் விவேகானந்தர்.

முஸ்லிம் அன்பர் வெள்ளரிக் காயை விவேகானந்தர் வாயில் வைத்துச் சாப்பிடும்படி செய்தார். அதனால் விவேகானந்தரின் களைப்பு ஒரு சிறிது நீங்கியது.

இதைப் பற்றிப் பிற்காலத்தில் விவேகானந்தர், "அந்த முஸ்லிம் அன்பர் உண்மையிலேயே அப் போது என் உயிரைக் காப்பாற்றினார். அது போல் என் வாழ்நாளில் எப்போதும் நான் களைப்படைந்ததில்லை" என்று கூறினார்.

பின்னர் விவேகானந்தர் இந்தியாவின் ஆன்மிகக் கருத்துக்களை அமெரிக்கா, இங்கிலாந்து, ஐரோப்பிய நாடுகளில் பிரச்சாரம் செய்து புகழ் பெற்றார். ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு அவர் மீண்டும் ஒருமுறை அல்மோராவிற்குச் சென்றார்.

அப்போது அல்மோராவில் விவேகானந்தரை ஊர்வலமாக அழைத்துச் சென்று, மிகவும் சிறந்த முறையில் வரவேற்பு அளித்தார்கள். அந்த நிகழ்ச்சியின்போது, ஜுல்பிகர் அலி ஓர் ஓரமாக நின்று விவேகானந்தரைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அவருக்கு விவேகானந்தரை இன்னார் என்று அடையாளம் தெரியவில்லை. ஆனால், விவேகானந்தர், ஜுல்பிகர் அலியைப் பார்த்தவுடன் அடையாளம் தெரிந்து கொண்டார். உடனே அவர் அங்கிருந்த மக்கள் கூட்டத்தையும் பரபரப்பையும் ஒரு சிறிதும் பொருட்படுத்தாமல் நேராக ஜுல்பிகர் அலியிடம் சென்று, அவரைக் கட்டியணைத்துக் கொண்டார்.

மேலும் விவேகானந்தர் அருகில் இருந்தவர்களிடம் ஜுல்பிகர் அலியைப் பற்றி நன்றியுணர்வுடன் கூறி, அவர்களுக்கு அறிமுகப்படுத்தினார். மேலும் ஜுல்பிகருக்கு விவேகானந்தர் பணமும் கொடுத்தார். ●

விவாதம்

## ஐந்து மாநிலத் தேர்தல் முடிவுகள்

# மோடியின் வீழ்ச்சியா? ராகுலின் வளர்ச்சியா?

சென்ற 2018 நவம்பர் மற்றும் டிசம்பர் மாதங்களில் நடைபெற்ற ஐந்து மாநில சட்ட மன்றத் தேர்தல்களின் முடிவுகள் வெளியாகிப் புதிய அரசுகள் அமைக்கப்பட்டு விட்டன.

ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம், சட்டீஸ்கர், தெலங் கானா, மிசோரம் ஆகிய ஐந்து மாநிலங்களின் சட்டமன்றங் களுக்கு நடைபெற்ற இந்தத் தேர்தலில் ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம், சட்டீஸ்கர் ஆகிய மூன்று மாநிலங்களில் காங்கிரஸ் கட்சி ஆட்சியமைத்திருக்கிறது. தெலங்கானாவில் ஏற்கனவே ஆட்சியில் இருந்த தெலங்கானா ராஷ்ட்ரிய சமிதி கட்சியும், மிசோரம் மாநிலத்தில் மிசோ தேசிய முன்னணிக் கட்சியும் ஆட்சியைப் பிடித்துள்ளன.

இந்தத் தேர்தல்களில் ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம், சட்டீஸ்கர் மாநிலங்களில் ஏற்கனவே ஆட்சியிலிருந்த பா.ஜ.க. வெற்றியைத் தவற விட்டிருக்கிறது. மிசோரம் மாநிலத்தில் காங்கிரஸ் கட்சி தனது ஆட்சியைப் பறி கொடுத்திருக்கிறது. தெலங்கானாவில் மட் டுமே ஆளும் கட்சி மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றியுள்ளது.

நாடாளுமன்றத் தேர் தலுக்கு இன்னும் ஆறு மாதங் களுக்கும் குறைவான காலமே உள்ள நிலையில் நடைபெற்ற இந்த ஐந்து மாநிலத் தேர்தல் கள், நாடாளுமன்றத் தேர்தலுக் கான அரையிறுதிப் போட்டித் தேர்தல்கள் என வர்ணிக்கப் பட்டன. காரணம், மத்தியில் ஆளும்கட்சி மீண்டும் ஆட்சி யைப் பிடிக்குமா? இழக்குமா என்பதற்கு இத்தேர்தல்கள் ஒரு முன்னோட்டமாகக் கருதப் பட்டன.


பாரதப் பிரதமர் நரேந்திர மோடி

பா.ஜ.க.வை எதிர்க்கும் அனைத்துக் கட்சிகளும், ஐந்து மாநிலங்களில் பா.ஜ.க. ஆட்சி களை இழந்ததற்கு, மத்தியில் ஆளும் நரேந்திர மோடியின் மோசமான ஆட்சியே காரணம் என்று சாடின. இந்த முடிவுகள் வரப் போகும் நாடாளுமன்றத் தேர்தல்களிலும் எதிரொலிக்கும், பா.ஜ.க. நாடாளுமன்றத் தேர்தலிலும் தோல்வியடை யும். பா.ஜ.க. ஆட்சியில் மக்கள் மகிழ்ச்சியாக இல்லை என்பதை இம்முடிவுகள் எடுத்துக் காட்டுகின்றன என்றும் எதிர்க்கட்சித் தலைவர் கள் கருத்துத் தெரிவித்தனர்.

ஆனால், மாநிலங்களுக்குள் நடைபெறும் சட்டமன்றத் தேர்தல்களின் முடிவுகள் அந்தந்த மாநில அரசுகளின் செயல்பாடுகளை அடிப் படையாகக் கொண்டவையாகும் என்று மத்திய உள்துறை அமைச்சர் ராஜ்நாத் சிங் கருத்துத் தெரிவித்தார். பிரதமர் நரேந்திர மோடி, மக்களின் தீர்ப்பை பா.ஜ.க. பணிவுடன் ஏற்றுக் கொள் கிறது என்று கருத்துத் தெரிவித்தார்.


திரு. ராகுல் காந்தி

தேர்தல் முடிவுகளில் சட்டீஸ்கர் மாநிலத்தில் மட்டும் தான் காங்கிரஸ் கட்சி மூன்றில் இரண்டு பங்குக்கும் அதிகமான இடங்களை வென்று பெரும் பான்மை பலத்தைப் பெற்றது. ராஜஸ்தானில் சரியாக அறுதிப் பெரும்பான்மை இடங்களையும், மத்தியப் பிரதேசத்தில் ஆட்சி அமைக்கத் தேவையான அறுதிப்

பெரும்பான்மைக்கு நெருக்கமான இடங்களைப் பெற்று, மற்ற கட்சியின் ஆதரவுடனும் ஆட்சி யமைத்துள்ளது.

இந்தத் தேர்தல் தொடர்பாக நாடு முழுவதும் பெரும் எதிர்பார்ப்புகள் இருந்த நிலையில், இது பற்றிய பல்வேறு கருத்துக் கணிப்புகள் வெளி வந்தன. இதில் சட்டீஸ்கர் மாநிலத்தில் பா.ஜ.க.தான் வெற்றி பெறும் என்று கூறப்பட்ட கருத்துக் கணிப்புகள் பொய்யாகி, காங்கிரஸ் கட்சி அங்கு பெரும் வெற்றியைப் பெற்றுள்ளது.

இதேபோல் காங்கிரஸ் கட்சி பெரும் வெற்றி பெறும் என்று கருத்துக் கணிப்புகள் கூறப்பட்ட ராஜஸ்தான் மாநிலத்தில் அக்கட்சியால் அறுதிப் பெரும்பான்மையை நெருங்கத்தான் முடிந்ததே தவிர, பெரும் வெற்றியைப் பெற முடியவில்லை.

மத்தியப் பிரதேச மாநிலத்தில் இழுபறி நிலை தான் ஏற்படும் என்று சொல்லப்பட்ட கருத்துக் கணிப்பு சரியாகவே அமைந்தது. தேர்தலில் வாக்கு எண்ணிக்கையின் போது, காங்கிரஸ், பா.ஜ.க. ஆகிய இரு கட்சிகளும் மாறி மாறி முன்னிலை பெற்று வந்தன. இறுதி யில்தான் காங்கிரஸ் கட்சி, அதிக இடங்களைப் பெற்ற கட்சியாகியது.

மிசோரம் மாநிலத் திலும், தெலுங்கானா விலும் கருத்துக் கணிப்புகள் கூறியபடியே மிசோ தேசிய முன்னணி யும், தெலுங்கானா ராஷ்ட்ரிய சமிதியும் வெற்றி பெற்றன.

பாரதிய ஜனதா கட்சி ஆட்சி செய்த மூன்று மாநிலங்களில் ஆட்சியை இழந்துவிட்டதை எதிர்க் கட்சிகள் அனைத்தும் பா.ஜ.க.வின் ஆட்சி முடி வுக்கு வந்ததாகப் பேசின. ஊடகங்களும் இவ்வாறே கூறின. ஆனால், மிசோரம் மாநிலத்தில் காங்கிரஸ் கட்சி ஆட்சியை இழந்ததைப் பற்றிப் பெரிதாகப் பேசப்படவில்லை.

இதற்கு, 3 மாநிலங்களில் காங்கிரஸ் கட்சி பா.ஜ.க.விடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றியதும், மிசோரம் மாநிலம் வெறும் 40 இடங்களை மட்டுமே கொண்ட சிறு மாநிலமாக இருப்பதுவும் காரண மாக இருக்கலாம் அல்லது திட்டமிட்டே அதைப் பெரிதாகப் பேசாமல் விட்டிருக்கலாம். இதை பா.ஜ.க.–வும் எடுத்துக்காட்டத் தவறிவிட்ட தென்றே கூறலாம்.

பா.ஜ.க. கட்சி 3 மாநிலங்களில் தோல்வி யடைந்ததற்கு அந்தந்த மாநிலங்களில் இருந்த மாநில ஆட்சிகள் காரணமா அல்லது மத்தியில் ஆட்சியிலுள்ள மோடி அரசுதான் காரணமா என்பது ஆய்வுக்குரியது.

மத்தியில் ஆளும் பா.ஜ. கட்சியோ, மாநிலங் களில் தங்கள் கட்சிக்கு ஏற்பட்டுள்ள தோல்வி யானது, அந்தந்த மாநில அரசுகளின் செயல்பாடு களை அடிப்படையாகக் கொண்டது. இதனால், வரும் நாடாளுமன்றத் தேர்தலில் பா.ஜ.க.–வின் வெற்றி பாதிக்கப்படாது. மத்தியில் பா.ஜ.க. ஆட்சி தொடர் வதையே மக்கள் விரும்புகிறார்கள் என்று கூறுகிறது.

எதிர்க்கட்சிகள், அடுத்து வரவுள்ள நாடாளு மன்றத் தேர்தலை முன்னிட்டு, இது மத்தியில் ஆளும் மோடி அரசாங்கத்தின் செயல்பாடுகளுக் கான தீர்ப்பு. வரும் நாடாளுமன்றத் தேர்தலிலும் பா.ஜ.க. தோல்வியே அடையும். அதற்கான முன் னோட்டம்தான் இந்த ஐந்து மாநிலங்களில் ஏற் பட்ட தோல்வி என்று கூறுகின்றன.



பா.ஜ.க. ஆட்சி மீது ஏராளமான குற்றச் சாட்டுகள் எதிர்க்கட்சியினரால் கூறப்படுகின்றன. ‘‘மத்தியில் ஆட்சியில் உள்ள நரேந்திர மோடியின் தலை மையிலான ஆட்சி, எல்லாத் துறை களிலும் தோல்வியடைந்து விட்டது. இந்த ஆட்சியில் வேலை வாய்ப்புகள் பெருகவில்லை. வேலை யின்மை அதிகரித்துவிட்டது. பண மதிப்பிழப்பு நடவடிக்கை ஏழை மக்களையும் தொழில் துறையி னரையும் வெகுவாகப் பாதித்துவிட்டது. இந்தப்

பண மதிப் பிழப்பு நடவடிக்கையால் பலர் உயிரிழந் துள்ளனர்.

மோடி குஜராத் முதல்வராக இருந்த போது எதிர்த்த ஜி.எஸ்.டி. வரி விதிப்பை, பிரதமரானபின் அவரே கொண்டு வந்தார். இந்த வரிவிதிப்பு கடும் விமர்சனங்களுக்கு உள்ளாகியது. 28 சதவிகிதம் வரை உயர்த்தப்பட்ட வரிவிதிப்பு, பொருள்களின் தன்மைக் கும் தரத்திற்கும் ஏற்ற வகையில் இல்லா மல் தாறுமாறாக இருப்பதாகவும், இந்த வரி விதிப்பால் நாடு முழுவதும் தொழில்துறை நலிந்து விட்டதாகவும் கூறப்படுகிறது.

வெளிநாடுகளில் பதுக்கி வைக்கப்பட்டுள்ள கருப்புப் பணத்தை மீட்டுக் கொண்டு வந்து, நாட்டு மக்கள் அனைவரின் வங்கிக் கணக்கிலும் ரூ. 15 லட்சம் போடப்படும். ஏராளமான அந்நிய முதலீடுகள் நாட்டிற்குக் கொண்டு வரப்படும். இதனால் வேலை வாய்ப்புகள் பெருகும் என்றெல்ல ாம் சொல்லப்பட்டது செயலாக்கப்படவில்லை. 'மேக் இன் இந்தியா' என்று சொல்லப்பட்டதெல் லாம் பெயரளவில்தானே தவிர, நடைமுறையில் ஏதுமில்லை. தொழிற்சாலைகள் பெருகவில்லை.

பசுவதைத் தடை என்ற பெயரில் சிறுபான்மை யின மக்கள் பலர் மாட்டிறைச்சி உண்டதாகக் கூறி பா.ஜ.க.–வினரால் தாக்கப்பட்டனர். இந்த ஆட்சி யில் சிறுபான்மை மக்களுக்குப் பாதுகாப்பில்லை. இந்துத்துவம் என்கிற பெயரில் காவிக் கட்சி யினரின் வன்முறை அதிகரித்துவிட்டது.

இந்துத்துவத்திற்கெதிரான எழுத்தாளர்கள் கொல்லப்பட்டனர். தேவையின்றி சமஸ்கிருதம் திணிக்கப்படுகிறது. கல்வித்துறை காவிமயமாகி விட்டது. பள்ளிப் பாடங்களில் வரலாறுகள் திரித்து எழுதப்பட்டுக் கற்பிக்கப்படுகின்றன.

பிரான்ஸ் நாட்டிடமிருந்து ரஃபேல் விமானம் வாங்குவதில் பெரும் ஊழல் நடந்திருக்கிறது. இதைப்பற்றிப் பிரதமர் பேசுவதுமில்லை, இது பற்றிய உண்மைகளை வெளியிடவும் மறுக் கிறார்கள்.

பிரதமர் மோடி முன்பு குஜராத் முதல்வராக இருந்தபோது, கோத்ரா ரயில் எரிப்பு நிகழ்வுக்குப் பிறகு ஏற்பட்ட கலவரத்தில் ஆயிரக்கணக்கான இஸ்லாமியர்கள் கொல்லப்பட்ட கலவரத்தால் இரத்தக் கறை படிந்தவராகவே அவர் விமர்சிக்கப் பட்டதை மறந்திருக்க முடியாது.

இந்த அரசு பெரும் முதலாளிகளுக்குச் சாதகமானதாக இருக்கிறதே தவிர, செத்து மடியும் ஏழை விவசாயி களைப் பற்றியும், கூலித் தொழி லாளிகளைப் பற்றியும் கவலைப்படுவதே இல்லை. எதைப் பற்றிக் கேட்டாலும், அதற்கு முந்தைய காங்கிரஸ் ஆட்சியின்மீது பழி போடுவதுதான் பதிலாக இருக்கிறது. அதைச் சரி செய்யத்தான் தாங்கள் ஆட்சிக்கு வந்திருக்கிறோம் என்பது பற்றி எண்ணிப் பார்ப்பதில்லை'' என்றெல்லாம் கூறப்பட்டது.

ஏழ்மை இல்லாத இந்தியா, கல்வியில் சிறந்த இந்தியா, தொழில்துறையில் வளர்ச்சி பெற்ற இந்தியா, சுற்றுலாத் துறையில் வளர்ச்சி பெற்ற இந்தியா, ஆன்மிகத்துறையில் சிறந்த இந்தியா, இராணுவத்தில் பலம்வாய்ந்த இந்தியா என நாட்டின் முன்னேற்றத்திற்குத் திட்டமிடுவதை விட்டுவிட்டு, 'காங்கிரஸ் இல்லாத இந்தியா' அமைய வேண்டும் என்று கூறி, எல்லா மாநிலங் களிலும் பா.ஜ.க. மட்டுமே இருக்க வேண்டும் என்ற வகையில் பேசியதும், செயல்பட்டதும் மோடி யின் ஆணவப் போக்கையும், அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்துவதையும் எடுத்துக்காட்டு வதாக விமர்சனங்கள் எழுந்தன.

கோவா, மேகாலயா முதலிய மாநிலங்களில் நடந்த சட்டமன்றத் தேர்தல்களில் அதிக இடங் களைப் பெற்ற கட்சி என்ற நிலை காங்கிரசிற்கு இருந்த போதும், தங்கள் அதிகார பலத்தால், ஆளுநரின் மூலம் பா.ஜ.க. கூட்டணி ஆட்சியை அமைத்ததும் தவறான முன்னுதாரணமாகப் பேசப் பட்டது. இதேபோலக் கர்நாடகத்தில் செய்ய முனைந்தும் அங்கு தோல்வி ஏற்பட்ட தால் அவமானத்துடன் பின்வாங்கியதை அனைவரும் அறிவர்.

பல கோடி ஏழைகள் வாழும் நாட் டின் பிரதமர் ரூ. 10 லட்சம் மதிப்புள்ள உடைகளை அணிந்து ஆடம்பரமாக வாழ்கிறார் என்ற குற்றச்சாட்டும் பிரதமர் மோடி மீது உண்டு.

இப்படியெல்லாம் ஆளும் பா.ஜ. கட்சி மீது ஏராளமான குற்றச்சாட்டுகள் வைக்கப்படு கின்றன.

காங்கிரஸ் கட்சி 130 ஆண்டுகளுக்கும் மேலான வரலாறு கொண்ட இந்நாட்டின் பழமை யான அரசியல் கட்சி. காந்தி, நேரு, சுபாஷ், இந்திரா காந்தி, முதலான பெரும் தலைவர்கள் தலைமையில் இயங்கிய இக்கட்சிக்கு இப் போதுள்ள தலைவர், இளம் வயது ராகுல் காந்தி.

ராகுலின் கொள்ளுப்பாட்டனார் ஜவஹர்லால் நேரு இந்தியாவின் முதல் பிரதமராக இருந்து பல சாதனைகளைப் படைத்தவர். அவரது பாட்டி திருமதி இந்திராகாந்தி இந்தியாவின் இரும்புப் பெண்மணி, இந்திராவே இந்தியா என்றெல்லாம் புகழப்படும் அளவுக்கு வலிமையான தலைவராக விளங்கியவர்.

ராகுலின் தந்தையார் ராஜீவ்காந்தி, குறுகிய காலமே பிரதமர் பதவியில் இருந்தாலும், நாட்டை முற்போக்குப் பாதைக்குக் கொண்டு செல்லக்

கால்கோள் செய்தவர் என்ற பெருமை உண்டு. இவரது காலத்தில்தான், இந்தியாவை 21–ஆம் நூற்றாண்டிற்குக் கொண்டு செல்லவேண்டும் என்ற குறிக் கோளுடன் நாட்டில் கணிப்பொறித் துறைக்கு பிள்ளையார் சுழி போடப்பட்டு, இன்று இந்தியா தகவல் தொழில்நுட்பத் துறையில் உலக அளவில் முன்னணியில் இருக்கும் நிலை ஏற் படுத்தப்பட்டது.

ஆனால், ராகுல் காந்தியைப் பற்றிச் செய்யப் படும் விமர்சனங்கள், அவர் இளம் வயதினர் என்பது மட்டுமின்றி, அரசியல் முதிர்ச்சி இல்லா தவர். சிறு பையன். அவருக்கு நேரு குடும்ப வாரிசு என்பதைத் தவிர, அரசியலில் வேறு தகுதி இல்லை.

இவர் இதுவரை பிரச்சாரம் செய்த பல மாநிலத் தேர்தல்களிலும், சென்ற நாடாளுமன்றத் தேர்தலிலும் காங்கிரஸ் கட்சி தோல்வியையே சந்தித்துள்ளது. இவர் முதிர்ச்சியின்றிப் பேசக் கூடியவர். தேசியக் கட்சிக்குத் தலைமை தாங்கும் தகுதியில்லாதவர்.

ராகுல் காந்தியின் அன்னை திருமதி. சோனியா காந்தி இத்தாலி நாட்டைச் சேர்ந்த கிறித்தவர். எனவே, ராகுலும் கிறித்தவர் என் றெல்லாம் பரப்புரைகள் செய்யப்பட்டன.

ராகுல் காந்தியின் மைத்துனர் ராபர்ட் வதேரா மீது பெரும் ஊழல் குற்றச்சாட்டு உள்ளது. 'நேஷனல் ஹெரால்டு' பத்திரிகை தொடர்பான ஊழல் குற்றச்சாட்டு காங்கிரஸ் தலைமை மீது உள்ளது.

ஆனால், இன்னொரு தரப்பில், இளம் தலைவ ரான ராகுல் காந்தி, தன்னை மேம்படுத்தி வருவ தாகப் பாராட்டப்படுகிறார். மோடி அரசுக்கு எதி ராக எதிர்க்கட்சிகள் கொண்டு வந்த நம்பிக்கை யில்லாத் தீர்மானத்தின்மீது நாடாளுமன்றத்தில் அவர் பேசிய பேச்சு, சிறப்பாக இருந்ததாகப் பாராட்டப்பட்டது.

அவர் பிரச்சாரத்திற்குப் போன பஞ்சாபில் காங்கிரஸ் வெற்றி பெற்றுள்ளது. பிரதமரின் சொந்த மாநிலமான குஜராத் மாநில சட்டப் பேரவைத் தேர்தலிலும், மத்திய அமைச்சர்கள் கூட்டத்தின் பெரும் படையெடுப்பிற்கும், பண பலத்திற்கும் இடையில் மிகக் குறைந்த இடங்கள் வித்தியாசத்தில்தான் ஆட்சியைப் பிடிக்க முடி யாது போயிற்று.

கர்நாடகத்தில் மதச்சார்பற்ற ஜனதா தளம் ஆட்சியமைப்பதற்கு ஆதரவு தந்ததன் மூலம், பா.ஜ.க. அங்கு ஆட்சிக்கு வர முடியாமல் தடுத்துள்ளார். தற்போது இந்த மூன்று மாநிலங் களிலும் அவரது கடுமையான பிரச்சாரத் தால்தான் காங்கிரஸ் வெற்றி பெற்றுள்ளது என்று அவரைப் பாராட்டு கிறார்கள்.

ராகுல் காந்தி, தன்னை ஒரு சிவபக்தர் என்று கூறிக்கொண்டு, தான் பிரச்சாரத்திற்குச் சென்ற மாநிலங்களி லெல்லாம் அங்குள்ள பிரபலமான கோயில்களுக்குச் சென்று வழிபட்டார். ஆன்மிக மடாலயங்களுக்குச் சென்று அங்குள்ள ஆதீன கர்த்தர்களிடம் ஆசி பெற்றார். கைலாயத்திற்குச் சென்று வழிபாடு செய்து வந்தார். இவையெல் லாம், தான் இந்துக்களுக்கு எதிரானவரல்ல என்பதை எடுத்துக்காட்டுவதாகக் கூறுகிறார்கள்.

இம்மாதிரியான செயல்பாடுகளால் ராகுல் காந்தி வளர்ச்சி பெற்று வருகிறார். இந்த வெற்றி களால், இதுவரை பா.ஜ.க. மற்றும் காங்கிரஸ் அல்லாத அணி அமைப்போம் என்று சில கட்சி கள் கூறிவந்த நிலை மாறி, காங்கிரசின் தலைமை யில் எதிர்க்கட்சிகள் கூட்டணி அமைக்கும் எண்ணம் பல கட்சிகளுக்கு ஏற்பட்டுள்ளது.

எனவே, இனி ராகுல்காந்தி தலைமையில் எதிர்க்கட்சிகள் ஒன்றிணைந்து வரும் நாடாளு மன்றத் தேர்தலில் பா.ஜ.க.–வைத் தோற்கடிக்கும் என எதிரணிகள் சார்பாகக் கூறுகிறார்கள்.

நாட்டை குஜராத் பாணியில் முன்னேற்றப் பாதையில் கொண்டு செல்வேன் என்று ஆட்சிக்கு வந்த மோடி, நாட்டைத் தொழில் துறையில் முன் னேற்றுவதற்குப் பதிலாக, இந்துத்துவ சக்திகளின் கட்டுப்பாட்டில் இருந்து கொண்டு, நாட்டின் வளர்ச்சியைக் கவனிக்கத் தவறிவிட்டார் என்பது எதிரணிகளின் குற்றச்சாட்டு.

மத்திய பா.ஜ.க. ஆட்சியில் தாங்கள் மகிழ்ச்சியாக இல்லை என்பதைப் பிரதமர் மோடிக்கு மக்கள் உணர்த்தி விட்டனர். மாற்றத் திற்குத் தயாராகிவிட்டனர் என்கிறார் ராகுல் காந்தி. பேரவைத் தேர்தல்களில் காங்கிரஸ் வெற்றி பெற்றதற்கு ராகுல் காந்திதான் காரணம் என்கிறார் காங்கிரஸ் மூத்த தலைவர் அசோக் கெலாட்.

ஆக, மூன்று மாநிலங்களில் காங்கிரஸ் வெற்றி பெற்றதற்கும், ஐந்து மாநிலத் தேர்தல் களில் பா.ஜ.க. எதிலும் ஆட்சியமைக்க முடியாமல் மூன்று மாநிலங்களில் ஆட்சியைப் பறிகொடுத் ததற்கும் காரணம் மோடியின் வீழ்ச்சியா? ராகுல் காந்தியின் வளர்ச்சியா? என்பதைப் பற்றி வாசகர் களாகிய நீங்கள் என்ன எண்ணுகிறீர்களோ, அதை எழுதுங்கள் ஜனவரி 12–க்குள்.

**– ஆர்.வி.**

# வாசகர் கடிதம்

**‘ஓ**ம் சக்தி’ டிசம்பர்–18 இதழில் வெளியாகியிருந்த ஷீரடி சாய்பா பாவின் அட்டைப்படம் இதழுக்குப் பெருமை சேர்த்துவிட்டது என்றே கூறலாம்.

– பி.கோவிந்தசாமி, ஊத்தங்கரை.

**டி**சம்பர் மாத ‘ஓம் சக்தி’ இதழில் ‘சுரங்கம்’ பகுதியில் வெளியாகியிருந்த ‘நீர்வழித் தடங்கள்’ பற்றிய அருட் செல்வரின் கட்டுரை அரசியலாளர் களின் கவனத்திற்கு மிகவும் உகந்த தாகும். அவரது சிந்தனை நிச்சயம் ஒரு நாள் செயல்வடிவம் பெறும்.

– ஏ. பாஸ்கர், சேலம்.

**டா**க்டர் க. பழனித்துரையின் கட் டுரை மாணவர்களுக்கும், பெற்றோர் களுக்கும் மட்டுமல்ல, கல்வி நிறுவன உரிமையாளர்களும்கூடச் சிந்திக்க வேண்டியதை எடுத்துக்காட்டுவதாக அமைந்திருந்தது.

– ஏ.எம். சாலன், கொச்சி.

**டி**சம்பர் மாத ஓம் சக்தியைத் திறந்த வுடனே ஜெயமோகனின் ‘பிரதமன்’ சிறுகதையைத்தான் தேடினேன். அவரு டைய சமையல் வர்ணிப்பு ரசனையான வர்ணிப்பு. சமையல் கூடத்தில் நேரடி யாக உட்கார்ந்து பார்த்ததுபோல் உள்ளது கதை.

– பா. இசக்கிமுத்து,
வெள்ளானைக்கோட்டை.

**உ**ஷா முத்துராமனின் ‘அம்மா வந்தாள்’ சிறுகதை ஆரம்பம் முதல் இறுதிவரை விறுவிறுப்புடனும் உயி ரோட்டத்துடனும் இருந்தது. மன நிறைவைத் தந்த கதை.

– மு. உமாமகேஸ்வரி, செங்கோட்டை.

**‘உ**ள்ளொன்று வைத்துப் புற மொன்று பேசாத உத்தமர்தம் உறவு வேண்டும்’ என்ற பாடலையொட்டி ‘எது வேண்டும்?’ என்ற கவிதை எளி மையாகவும், சிறப்பாகவும் இருந்தது.

– இரா. கல்யாணசுந்தரம், மதுரை.

**இரா.** வேணுகோபாலகிருஷ்ணன் எழுதியிருந்த ‘அண்ணன் பெருமாள் கோவில்’ பற்றிய அதிசயத் தகவல் களைக் கொண்ட கட்டுரை, அந்த ஆலயத்தைக் கண்டு தரிசிக்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டியது.

– என்.ஆர். ஜெயசந்திரன்,
காவேரிப்பட்டணம்.

**த**னி ஆளுமை கொண்ட எழுத் தாளர் ஜெயகாந்தன் தன்னைக் கவர்ந்த ஆளுமையான காம்ரேட் பாலனுக்கு எழுதிய கடிதம் புதுமை விருந்து படைத் தது.

– முத்தமிழருவி இ. மாரிமுத்து,
அ.வாடிப்பட்டி.

**ஷீ**ரடி சாய்பாபாவின் அட்டைப் படக் காட்சி அவரை நேரில் தரிசித்தது போன்று இருந்தது. அட்டைப்படக் கட்டுரையும் அரிய தகவல்களைத் தந்தது.

– இரா. வளையாபதி,
தோட்டக்குறிச்சி.

**டி**சம்பர் மாத ஓம் சக்தி இதழ் மிக வும் அருமை. அருட்செல்வரின் சுரங்கம் முன்னுரை முதல் விவாதம், கட்டுரை கள், கதைகள், கவிதைகள் என அனைத்துமே சிறப்பாக இருந்தன.

– இரா. சோமு. திருப்பூர்.

**‘ந**வீன நீர்வழிச்சாலை பற்றிப் பொறியாளர் ஏ.சி. காமராஜ் அடிக்கடி வலியுறுத்தி வருகிறார். அவரது திட் டத்தை அரசு செயல்படுத்தினால் தமிழ் நாடு மட்டுமல்ல, இந்தியாவே அதிகப் பாசனவசதி பெறும்.

– லிங்கம் சின்னசாமி, தாராபுரம்.

**“ம**லையை அழித்தால் நாம் அழி வோம்” என்ற அருமையான கட்டு ரையை எழுதியிருந்தார் ஈரோடு ஜீவா. இயற்கையைப் பாதுகாக்க நினைக்கும் அனைவரும் படிக்க வேண்டிய கட் டுரை அது.

– எஸ். சந்திரன், ஈரோடு.

# ‘தினமணி’ பத்திரிகையைப் போற்றுவோம் வாருங்கள் !

**தே**சியப் பத்திரிகை 'தினமணி' மகாகவி பாரதியின் 137–ஆவது பிறந்த தினத்தை டிசம்பர் 11–ஆம் தேதியன்று, அவர் பிறந்த எட்டயபுரத்தில் 'தினமணியின் மகாகவி பாரதியார் விருது' வழங்கிக் கொண்டாடியது. அந்த விருதுக்கு பாரதி அறிஞர் சீனி. விஸ்வநாதனைத் தேர்ந்தெடுத்து, அவருக்கு ரூ. 1 லட்சம் பொற்கிழி அளித்துச் சிறப்பித்துள்ளது.

கவிதைகளை வெளியிட்டு வந்தது. இப்போதுகூட பாரதி அறிஞர் பேரா. ய. மணிகண்டன் சுதேசமித்திரன் பத்திரிகையில் சென்னையில் பாரதி தலைமையேற்ற இரண்டு நிகழ்ச்சிகளைத் தேடிக் கண்டுபிடித்து டிசம்பர் 11–ஆம் தேதி 'தமிழ் இந்து' நாளிதழில் வெளியிடப்பட்டது நினைவுகூரத்தக்கது. பாரதியாரின் சுதேசமித்திரன் பத்திரிகை இப்போது இல்லை.



*பாரதி அறிஞர் சீனி. விஸ்வநாதனுக்கு ‘தினமணியின் மகாகவி பாரதியார் விருது’ மற்றும் ரூ. 1 லட்சத்திற்கான காசோலையை வழங்குகிறார் ஆளுநர் பன்வாரிலால் புரோஹித். உடன் நல்லி குப்புசாமி, தினமணி ஆசிரியர் கி. வைத்தியநாதன் ஆகியோர்.*

ஒரு தேசியப் பத்திரிகை, ஒரு தேசியக் கவிஞனுக்கு விழா எடுத்தது என்பது தினமணிக்குக் கூடுதல் சிறப்பைச் சேர்த்துள்ளது. இதில் வரவேற்புரை நிகழ்த்திய தினமணி ஆசிரியர் கே. வைத்தியநாதன், இந்த விழாவை தினமணி நடத்துவதற்கான காரணத்தைச் சொல்லியபோது, பாரதியார் மறைந்த 13–ஆவது ஆண்டு நினைவு நாளில் தினமணி தொடங்கப்பட்டதைக் குறிப்பிட்டுள்ளார். அதன்படி தினமணிக்கு வயது 97. தூத்துக்குடி கவியரங்கத்தில் ‘தினமணி’ ஆசிரியர் பாரதி பற்றிய கவிதையை வாசித்தது புதிய செய்தி.

பாரதியார் உதவி ஆசிரியராகப் பணியாற்றிய 'சுதேசமித்திரன்' பத்திரிகை, அவரது பல்வேறு

தினமணி, பாரதியாரைப் போற்றும் வகையில் மட்டுமல்லாமல், தமிழனின் தனிப்பெரும் அடையாளமாகக் காட்டுவதற்குக் காரணம், பாரதியைப் படித்தவர்களுக்கு மத்தியில் மட்டுமல்லாமல், பாமர மக்களிடத்திலும் கொண்டு செல்ல வேண்டும் என்பதற்காகத்தான்.

பாரதியைப் பற்றி எண்ணிப் புளகாங்கிதமடைந்த 'ஓம் சக்தி' பத்திரிகையின் நிறுவனர் பத்மபூஷண் அருட்செல்வர் நா. மகாலிங்கம் அவர்கள், சென்னையில் பாரதி தமிழ்ச்சங்கத்திற்குப் பேராசிரியர் கல்கிக்குப் பிறகு தலைமையேற்று நடத்தி வந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. அவருக்குப் பிறகு சென்னை உயர்நீதிமன்ற வழக்

குரைஞர் திரு. காந்தி அவர்கள் தலைமையில் அது நடத்தப்பட்டு வருகிறது.

அருட்செல்வருக்கு மகாகவி பாரதியிடம் அளவற்ற ஈடுபாடு உண்டு. பாரதியை நேசித்த அளவுக்கு பாரதிதாசனையும் அவர் நேசித்து வந் தார். அதுமட்டுமல்ல, பாரதிதாசனுடைய வாழ்க்கை வரலாற்றை சேலம் கவிஞர் முருகு சுந்தரம் எழுதியதைப் படித்துவிட்டு, அதிலுள்ள சில செய்திகளை அடுத்த பதிப்பில் தவிர்க்குமாறு எழுதியிருந்தார்.

மகாகவிகளின் பட்டியலை வரிசைப்படுத்தி னால், வங்கக் கவிஞர் தாகூர்தான் முதலில் வரு கிறார். பாரதியைவிட அவர் வயதில் மூத்தவரும் கூட. வசதியானவரும் ஆவார். இலக்கியத் திற்காக முதல் நோபல் பரிசு பெற்றவர்.

தாகூரின் படைப்புகள் சிலவற்றை பாரதியாரே மொழிபெயர்த்துள்ளார். ஆனால், பாரதியாரைப் பற்றித் தாகூருக்கு எந்தச் செய்தியும் தெரியாம லேயே போய்விட்டது.

வங்காளத்திலுள்ள சாதாரணக் குடிமகன் கூட மகாகவி தாகூருக்குச் சகல மரியாதைகளை யும் கொடுத்து வணங்கித் தாகூரைப் போற்றுவார். தாகூர் மீது வங்க மக்களுக்கு அப்படிப்பட்ட ஈடு பாடு இருப்பதை இன்றைக்கும் வங்காளத்திற்குப் போய்ப் பார்த்தால் அறிந்து கொள்ளலாம்.

எனது அனுபவம், கல்கத்தா தமிழ்ச்சங்கம் நடத்திய பாரதி விழாவிற்கு நான் சென்றபோது, அந்த ஆங்கில அழைப்பிதழில் மகாகவி பாரதி என்று இருப்பதைப் பார்த்து, வங்க மாநிலத்தின் கலாச்சாரத்துறை அமைச்சர் அதைத் திருத்தச் சொன்னார். மகாகவி என்பவர் தாகூர் ஒருவர் தான் என்றும் வாதிட்டார்.

அவர் சொன்னது சரியா, தவறா என்பதை விட, வங்க மக்களிடத்தில் தாகூரின் தாக்கம் எந்த அளவிற்கு அழுத்தமாக உள்ளது என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அந்த அழுத்தம் நமது மனத்திலும் இருந்திருக்குமானால், மூன்று தலைமுறையைக் கடந்து இன்றைய தலை முறைக்கு பாரதியை நாம் 'தெய்வமாப் புலவர்' என்று தெருக்கள் தோறும் மட்டுமல்ல, வீடுகள் தோறும் கொண்டாடி வந்திருப்போம்.

நாம் பாரதியை மட்டுமல்ல, தமிழுக்கு முகம் கொடுத்த கம்பனை, அவன் பிறந்த தேரழுந்தூர் என்ற இடத்திற்குச் சென்று பார்ப்பீர்களானால், அங்கே ஒரு அடையாளமும் இல்லை. 'கம்பர் மேடு' என்று ஒரு பொட்டல் காடுதான் இருக்கிறது. ஆனாலும் கம்பன் கழகங்கள் மாவட்டம் தோறும் கம்பன் விழாவைக் கொண்டாடி வருகின்றன. எத்தனை முரண்பாடு?

இதேபோல, நாட்டரசன் கோட்டையிலுள்ள கம்பன் சமாதிக்குக் காரைக்குடி கம்பன் விழா நேரத்தில் மட்டும்தான் வழிபாடு நடக்கிறது.

இதே கதி பாரதிக்கும் ஏற்பட்டுவிடுமோ என உணர்ந்த தினமணி, தமிழர்களை ஒன்று திரட்டி, பாரதியை வழிபாட்டிற்குரிய கவிஞனாக, வழி காட்டிக் கவிஞனாகப் பரப்புரை செய்யும் பணியை எட்டயபுரத்தில் தொடங்கியுள்ளது. எத்தனை பெரிய மகத்தான பணி என்பதைத் தமிழர்களாகப் பிறந்த நாம் அனைவரும் எண்ணிப்பார்த்துப் பெருமை கொள்ள வேண்டும்.

பாரதி இல்லாமல் தமிழனுக்கு முகவரி இல்லை. தேச பக்தியே தெரியாமல் போயிருக்கும். அனைத்து உயிர்களையும் நேசிக்கும் அக் கவிஞன், தமிழனுக்கு அந்நியன் ஆகியிருப்பான். பாரதியைத் தக்க தருணத்தில் இனம் கண்டு 'எங்கள் பாரதி, எங்கள் பாரதி' என்றென்றும் வாழியவே என்று நம்மை முழக்கமிடுமாறு தினமணி தூண்டிவிட்டுள்ளது.

அவன் சாதிகளைக் கடந்தவன். மதங் களுக்கு அப்பாற்பட்டவன். இனங்களின் அடை யாளங்களை வரலாறாக உணர்ந்தவன். மனித உயிர்களைப் போலவே மற்ற எல்லா உயிர்களின் மீதும் பிரியம் கொண்டவன்.

இங்கிலாந்து மக்கள் சேக்ஸ்பியரையும், ஷெல்லியையும் போற்றிக் கொண்டாடுகிறார்கள். ரஷ்ய மக்கள் மாயகோவஸ்கியைக் கொண்டாடு கிறார்கள். ஜெர்மானியர் கதேயைக் கொண்டாடு கிறார்கள். நமக்கு அருளப்பட்டுள்ள நவகவி பாரதி. அவனை இன்றளவும் அதிகம் கொண்டாடு பவர்கள் படித்த மேல்தட்டு மக்கள்தான்.

தோழர் ஜீவா, பாரதியின் புகழைத் தோளில் சுமந்து சென்று தெருத்தெருவாகப் பிரச்சாரம் செய்தார். பாரதிக்கு மூத்த தேசிக விநாயகம் பிள்ளை, "பாட்டுக்கொரு புலவன் பாரதியடா" என்று பாடினார். ஏனோ, சென்ற 50 ஆண்டுக் காலத்தில் மகாகவி பாரதி, இருட்டடிப்புச் செய்ய முடியாதவராக, தவிர்க்க முடியாதவராக, தள்ளி ஒதுக்கிவிட முடியாதவராகத்தான் தமிழ்ச் சமுதாயத்திற்கு அவர் தாங்கிப் பிடிக்கப்பட்டு வந்துள்ளார்.

பாரதிதாசன் மட்டும் இல்லாமல் போயிருப் பாரானால், பாரதி இன்னொரு புறநானூற்றுக் கவி ஞனாகப் புதையுண்டு போயிருப்பான். நாம் செய்த தவம், பாரதியை மீட்டெடுத்திருக்கிறோம். அத் திசையின் முதல் மைல் கல்லிலிருந்து தினமணி தொடங்கியுள்ள இப்பயணத்திற்கு இதயம் கனிந்த வாழ்த்துக்கள், வரவேற்புக்கள், பாராட்டுக்கள்!

– பி.சி.

8-ம் பக்கத் தொடர்ச்சி

வனங்களின் தாளாளர் திரு. மா. ஹரிஹரசுதன் அவர்கள் தொகுப்புரையாற்றினார். விழாவிற்குத் தலைமையேற்ற என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள், விளையாட்டின் முக்கியத்துவம் குறித்தும், அது எவ்விதம் ஒருவரின் ஆளுமைத் தன்மையை அதிகரிக்கின்றது என்பது பற்றியும் உரையாற்றினார்.

எஸ்.பி.எல். 2018 கிரிக்கெட் போட்டிகளின் அரையிறுதிப் போட்டிக்கு, பொள்ளாச்சி கேர் சாஃப்ட் குளோபல் பிரைவேட் லிமிடெட் – ஏ அணியும், பொள்ளாச்சி டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரி அணியும், ஏ.பி.டி. லிமிடெட் கீக் டைனோ அணியும் தகுதி பெற்று, விளையாடின.

இவற்றில் வெற்றி பெற்ற பொள்ளாச்சி டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரி அணியும், பொள்ளாச்சி கேர் சாஃப்ட் குளோபல் பிரைவேட் லிமிடெட் – ஏ அணியும் இறுதிப் போட்டிக்குத் தகுதி பெற்றுக் களமிறங்கின.

முதலில் பேட் செய்த கேர் சாஃப்ட் பொள்ளாச்சி ஏ அணி, 7 விக்கெட் இழ்பிற்கு, 131 ரன்களைக் குவித்தது. இதனைத் தொடர்ந்து விளையாடிய பொள்ளாச்சி டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரி அணி, ஆட்ட இறுதியில் அனைத்து விக்கெட்டுகளையும் இழந்து 97 ரன்கள் மட்டுமே எடுத்தது.

வெற்றி பெற்ற பொள்ளாச்சி கேர் சாஃப்ட் ஏ அணிக்கு ரூ. 50 ஆயிரம் மற்றும் வெற்றிக் கோப்பை பரிசளிக்கப்பட்டது. இரண்டாம் இடம் பெற்ற டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரி அணிக்கு ரூ. 40 ஆயிரம் பரிசளிக்கப்பட்டது. ஏ.பி.டி. லிமிடெட் கீக் டைனோ அணி, மூன்றாம் இடத்தைப் பெற்று ரூ. 30 ஆயிரம் பரிசுத்தொகையைப் பெற்றது.

பெண்களுக்கான இறகுப்பந்துப் போட்டியில் இறுதிப் போட்டியில் வடலூர் வள்ளலார் கலை அறிவியல் கல்லூரி முதல் இடம் பெற்று, கோப்பையுடன் ரூ. 10 ஆயிரம் பரிசுத்தொகையைத் தட்டிச் சென்றது. இரண்டாம் இடம் பெற்ற நாச்சிமுத்து பாலிடெக்னிக் அணியும், மூன்றாம் இடம் பெற்ற சக்தி பாலிடெக்னிக் அணியும் முறையே ரூ. 8 ஆயிரம் மற்றும் ரூ 6 ஆயிரம் பரிசுத் தொகைகளைப் பெற்றன.

சிறந்த பேட்ஸ்மேனுக்கான விருதையும், பரிசாக ரூ. 10 ஆயிரத்தையும் ஏ.பி.டி. கீக் டைனோ அணியின் வீரர் திரு. மகேஷ்குமார் அவர்கள் பெற்றார். சிறந்த பவுலருக்கான ரூ. 10 ஆயிரம் மற்றும் விருதை அதே அணியைச் சேர்ந்த திரு. சதீஷ்குமார் அவர்கள் பெற்றார்.

மேன் ஆஃப் த மேட்சிற்கான ரூ. 20 ஆயிரம் பரிசினை டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரி அணியைச் சேர்ந்த வீரர் திரு. நாச்சிமுத்து அவர்கள் பெற்றார்.

தொடரின் சிறந்த வீரருக்கான ரூ. 20 ஆயிரம் பரிசை கேர் சாஃப்ட் அணியின் வீரர் திரு. விஜயகுமார் சாமிநாதன் அவர்கள் பெற்றார். மற்ற அனைத்து வீரர்களுக்கும் சான்றிதழ்களும், பரிசுகளும் வழங்கப்பட்டன.

பரிசளிப்பு விழாவில் என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் வெற்றி பெற்ற அணிகளுக்குப் பரிசுகளை வழங்கினார்.

விழாவில், கோவை பாரதிய வித்யா பவன் மற்றும் கோவை குமரகுரு பொறியியல் கல்லூரித் தலைவர் டாக்டர் பி.கே. கிருஷ்ணராஜ் வாணவராயர், ஸ்ரீ சாமுண்டீஸ்வரி சுகர்ஸ் நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் திரு. ம. சீனிவாசன், கோவை குமரகுரு பொறியியல் கல்லூரியின் இணைத் தாளாளர் திரு. சங்கர் வாணவராயர், ஸ்ரீ சாமுண்டீஸ்வரி சுகர்ஸ் நிறுவனத்தின் இயக்குநர் திரு. பிரகாஷ், திருமதி கௌரி மாணிக்கம், ஏ.பி.டி. லிமிடெட்டின் தலைமைச் செயல் அலுவலர் திரு. சண்முகசுந்தரம், எஸ்.பி.எல். – 2018 போட்டிகளின் ஒருங்கிணைப்பாளர் திரு. ரகுகுமார், என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் செயலர் முனைவர் சி. இராமசாமி, டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரியின் முதல்வர் டாக்டர் ஏ. இரத்தினவேலு, நாச்சிமுத்து பாலிடெக்னிக் கல்லூரியின் முதல்வர் ஆர். மணிவண்ணன், நாச்சிமுத்து பாலிடெக்னிக் கல்லூரியின் துணை முதல்வர் டாக்டர் எம். அசோக், என்.ஐ.ஏ. பள்ளிகளின் நிர்வாக அலுவலர் திரு. ஏ. சின்னசாமி மற்றும் தலைமை ஆசிரியர்கள், துறைத் தலைவர்கள், சக்தி குழும நிறுவனங்களின் பணியாளர்கள் கலந்து கொண்டனர்.

**– ந.நி**

சிறு வயதிலேயே சிந்தனை நிறைந்த அறிவாளிகளைப் பற்றிக் கேள்விப்படுகிறோம். இலங்கையில் யாழ்ப்பாணப் பகுதியில் விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களிடம் காளமேகப் புலவர் சென்று, தன் பசியைப் போக்கிக் கொள்ள, "சோறு எங்கே விற்கும்?" என்று கேட்டார்.

சிறுவர்களோ, "சோறு தொண்டையில் விக்கும்" என்று சொல்லிச் சிரித்தனர். கோபமடைந்த காளமேகப் புலவர் அங்கிருந்த ஒரு கரித்துண்டை எடுத்து அருகிலிருந்த சுவரில்,

"பாக்குத் தெறித்து விளையாடு சிறுபாலகர்க்கு

நாக்குத் தெறித்து விழ"

என்று எழுத எண்ணி, அவ்வாறே எழுதத் தொடங்கினார். 'நாக்கு' வரைக்கும்தான் அவரால் எழுத முடிந்தது. அவருக்குப் பசியும் அதிகமாகிவிட்டது. அதனால், சாப்பிட்டு விட்டு வந்து, இதை நிரப்பலாம் என்று சென்று விட்டார்.

அவர் திரும்பி வருவதற்குள் இச் சிறுவர்கள் 'நாக்கு' என்பதற்குப் பின், "தமிழ் விளங்க நாகேசா" என்று எழுதி நிறைவு செய்து விட்டனர்.

திரும்பி வந்து இதைப் படித்த காளமேகப் புலவர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

பிற்காலத்தில் அந்தச் சிறுவர்கள் என்ன ஆனார்கள் என்ற எந்தத் தகவலும் இல்லை. அவர்கள் இலக்கிய மேதைகளாக ஆவதற்குத் தகுதியானவர்கள்.

# அதிசயம் ஆனால் உண்மை!


ஆதித்யன் ராஜேஷ்

இதோ, கேரளாவைச் சேர்ந்த ஆதித்யன் ராஜேஷ் என்ற 13 வயதுச் சிறுவன், துபாயில் 'சாஃப்ட்வேர்' எனப்படும் மென்பொருள் நிறுவனம் நடத்தி வருகிறான்.

கேரள மாநிலம் திருவல்லாவைச் சேர்ந்த சிறுவன் ஆதித்யன் ராஜேஷ், தனது 5–ஆவது வயதில் தனது பெற்றோருடன் ஐக்கிய அரபு எமிரேட்சில் உள்ள துபாய்க்குச் சென்றான். 9–ஆவது வயதில் செல்போன் செயலி ஒன்றைப் பொழுதுபோக்காக உருவாக்கினான். மேலும் இணையதள வடிவமைப்பு, லோகோக்கள் வடிவமைப்பிலும் ஆர்வம் காட்டினான்.

தற்போது 'டிரைநெட் சொல்யூஷன்ஸ்' என்ற நிறுவனத்தைத் தொடங்கி நடத்தி வருகிறான். இந்த நிறுவனத்தின் மூலம் தன் வாடிக்கையாளர்களுக்கு இணையதளங்கள் உருவாக்கும் பணிகளை ஆதித்யன் ராஜேஷ் செய்து வருகிறான். இந்நிறுவனத்தில் அவனுடைய பள்ளித் தோழர்கள் 3 பேர் உடன் பணியாற்றுகின்றனர். இதுவரை 12 வாடிக்கையாளர்களுக்கு, இணையதளம் அமைத்தல், டிசைன், கோடிங் சேவைகளை அளித்துள்ளனர்.

இந்தச் சந்தர்ப்பம், காளமேகப் புலவர் கண்ட அப்பாலகர்க்கு அமையாமல் போய்விட்டதே!

– ந.நி.

(சென்ற 2018 நவம்பர் மாதத்தில் தஞ்சை, திருவாரூர், நாகப்பட்டினம், புதுக்கோட்டை முதலிய பகுதிகளில் வெடித்து வீசிய 'கஜா' புயல் செய்த அலங்கோலங்களைத் தொலைக்காட்சியில் பார்த்தவர்கள் துடித்துப் போனார்கள். பத்திரிகைகளில் படித்தவர்கள் துயரத்தில் மூழ்கினார்கள். கவிஞர் முத்தமிழருவி மாரிமுத்து இதயம் வெடிக்க வடித்த கவிதையைப் படிக்க வாசகர்களுக்கு வழங்குகிறோம்).

# கடல்மிராண்டி 'கஜா'

"இயற்கையே!
கடலிலிருந்து
மழையைத் தந்தாய்
மகிழ்ந்தோம்.
புயலைத் தந்து ஏன்
பூண்டோடு அழித்தாய்?

தென்றல் தவழத்
தெரியும் சோலை
மழை பொழிய மலரும் பூமி
புயல் புகுந்தால் அழியுமென்பது
உனக்குத் தெரியாதா இயற்கையே!

மண்ணில் வாழும் உயிரெல்லாம்
பசியாறப் பண்ணும்
விவசாயி விதைச்ச விளைச்சலை
விர்ரென வந்து நீ
அநியாயமாய் அழித்தாயே!

உழைக்கிற வலியையும்
பசிக்கிற வலியையும்
நீ அனுபவித்ததுண்டா?

பண்படுத்தி வச்சுப்
பார்த்திருந்த பூமியைப்
புரட்டிப் போட்டுப்
புண்படுத்தி விட்டாயே இயற்கையே!

புள்ளை குட்டி குடும்பத்தையும்
ஆடு, மாடு, கன்றுகளையும்
அசுரத்தனமாய் வந்து நீ
அழித்து விட்டாயே இயற்கையே!

பெரிசா ஒண்ணுமில்ல
பெட்டி படுக்கை வைக்கக்
கட்டி வெச்ச வீட்டையும்
எட்டி உதைச்சு,
நிம்மதியாப் படுத்துறங்க
விடாமல் செய்திட்டாயே இயற்கையே!

வீடு இல்லைனா
வீதின்னு சொல்லுவாங்க.
வீதியும் இல்லாம
விளையாடிட்டுப் போய்விட்டாயே இயற்கையே!

வயிறாரச் சோறு கொடுத்து வந்த
அன்னம் விளையும் எங்கள் பூமியைச்
சின்னாபின்னப் படுத்தினாயே இயற்கையே!

புயலாக வந்து
அடிவேரை அழித்த வஞ்சகனே

பாவம், பழிகளை ஏந்தவா
கருவெடுத்துக் கரைக்கு வந்தாய்?

அதற்குப் பதிலாக,
அந்தக் கடலிலேயே
கரைந்து போயிருக்கலாமே!"

**முத்தமிழருவி மாரிமுத்து**

# ‘எனக்கும் ஒரு கனவு இருந்தது’
## – வர்கீஸ் குரியனின் தன்வரலாறு நூல்

*இந்தியாவில் வெண்மைப் புரட்சிக்குக் காரணமானவர் என்று அறியப்படுபவர் வர்கீஸ் குரியன். ‘அமுல்’ என்கிற கூட்டுறவுப் பால் உற்பத்திச் சங்கத்தை நிறுவி, சர்வதேச அளவில் புகழ் தேடித் தந்தவர்.*

*‘எனக்கும் ஒரு கனவு இருந்தது’ என்பது வர்கீஸ் குரியன் எழுதிய தன் வரலாற்றுப் புத்தகம். இந்தப் புத்தகத்தில் 33, 38, 39 பக்கங்களில் சர்தார் வல்லபபாய் படேலின் மகள் மணிபென் படேலுடனான அவரது சந்திப்புகளையும் அனுபவங்களையும் பதிவு செய்திருக்கிறார். மணிபென் படேல் வர்கீஸ் குரியனிடம் தெரிவித்த உண்மைச் சம்பவம் பற்றி திரு. சத்தீஷ் என்பவர் 14.11.2018 ‘தினமணி’யில் தெரிவித்திருக்கிறார்.*

*அப்புத்தகத்தில் வர்கீஸ் குரியன் செய்துள்ள பதிவு இதுதான் :*



சர்தார் படேலும் அவரது மகள் மணிபென்னும்

“எனது தந்தையார் சர்தார் வல்லபபாய் படேலின் மறைவைத் தொடர்ந்து, அவருடைய நோட்டுப் புத்தகம் ஒன்றையும், ஒரு கைப்பையையும் எடுத்துக் கொண்டு பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேருவைச் சந்திக்கச் சென்றேன். மரணத் தருவாயில் என்னை அழைத்து, ‘இவை இரண்டையும் பிரதமர் நேருவிடம் நேரில் போய் ஒப்படைக்கும்படி எனது தந்தையார் தெரிவித்திருந்தார். அதை வேறு யாரிடமும் கொடுத்துவிடக் கூடாது’ என்றும் கூறியிருந்தார்.

அந்தப் பையில், காங்கிரஸ் கட்சி நன்கொடையாகப் பெற்றிருந்த கட்சிப் பணம் ரூ. 35 லட்சம் இருந்தது. அந்த நோட்டுப் புத்தகத்தில் கட்சியின் கணக்கு வழக்குகள் இருந்தன. அவற்றைப் பெற்றுக்கொண்டு, நேரு ‘தன்யவாத்’ (நன்றி) என்று கூறினார். அவர் மேலும் ஏதாவது கூறுவார் என்று எதிர்பார்த்தேன். ஆனால் எதுவும் பேசவில்லை.

அவருக்கும் எனது தந்தை சர்தார் படேலுக்கும் இடையேயான உறவு கசந்திருந்ததால், பண்டித நேரு அதற்கு மேல் என்னிடம் பேச விரும்பவில்லை என்பதைப் புரிந்து கொண்டு நானும் எதுவும் பேசாமல் திரும்பிவிட்டேன்” என்று என்னிடம் தெரிவித்தார்.

“இனி என்ன செய்யப் போகிறாய்? உனக்கு அப்பா இல்லாத குறை இல்லாமல் நான் பார்த்துக் கொள்கிறேன்” என்று பிரதமர் அவருக்கு ஆறுதல் வார்த்தைகளைக் கூடச் சொல்லாதது ஆச்சரியமாக இருக்கிறது. அதை மணிபென் பொருட்படுத்தியதாகவும் தெரியவில்லை.

மணிபென் தனது இறுதிக் காலத்தைத் தனிமையில் தான் கழித்தார். சர்தார் வல்லபபாய் படேலையே மறந்து விட்டிருந்த காங்கிரஸ்காரர்கள் அவரை எப்படி நினைவில் வைத்திருப்பார்கள்? மணிபென் மரணத் தருவாயில் இருக்கிறார் என்று தெரிந்த போது, அன்றைய குஜராத் முதல்வர் சிமன்பாய் படேல் புகைப்படக்காரருடனும், பத்திரிகையாளர்களுடனும் ஓடோடி வந்தார். அவரது தலைமாட்டில் நின்றபடி புகைப்படம் எடுத்துக் கொண்டார். அடுத்தநாள் அந்தப் புகைப்படம் எல்லா நாளிதழ்களிலும் வெளிவந்தது.”

*வர்கீஸ் குரியனின் ‘எனக்கும் ஒரு கனவு இருந்தது’ புத்தகத்தில் காணப்படும் விழியில் நீர்கோக்கும் இந்தப் பதிவு மணிபென் படேல் போன்று மெழுகுவர்த்தியாக வாழ்ந்து மறைந்தவர்களின் தியாகத்தை எடுத்தியம்புகிறது.*

**– ந.நி.**

சென்ற டிசம்பர் 2018 இதழ் விவாதம்

# படேல் சிலை!

*விவாதக் கடிதங்களில் சில... சில...சில...*

**ம**காத்மா, நேரு, ஆகியோரும் படேலுக்கு இணையான தலைவர்கள்தான். மகாத்மா, படேலைவிட ஓர் உயர்ந்த தலைவன் என்பதை நாடறியும். பட்டினியால் பல லட்சம் மக்கள் வாழும் இந்தியக் குடியரசு நாட்டில், இவ்வளவு பெருந் தொகையில் சிலை நிறுவுவது ஏற்புடையதன்று. இந்த 3 ஆயிரம் கோடி ரூபாயில், 40192 ஹெக் டேர் நிலத்திற்கு 425 சிறு அணைகளைக் கட்டிப் பாசன வசதி செய்திருக்கலாம். 5 சூரிய சக்தி மின் நிலையங்கள், 5 ஐ.ஐ.டி. நிறுவனங்கள், 2 எய்ம்ஸ் மருத்துவமனைகள் நிறுவியிருக்கலாம் என்று ஓர் ஊடகச்செய்தி கூறுகிறது. எனவே, 3 ஆயிரம் கோடிச் செலவில் படேல் சிலையை நிறுவியதை ஏற்றுக் கொள்வது எப்படி?

– தி. குமாரராஜா, உடுமலைப்பேட்டை.

**ப**டேல் முதலான மாமனிதர்களின் தேச சேவையை இருட்டடிப்புச் செய்துவிட்டு, ராஜீவ் காந்தியும், இந்திரா காந்தியும்தான் பாரதத்தின் முதுகெலும்பாக இருந்தனர் என்பது போன்ற ஒரு பிம்பத்தை உருவாக்கும் விதமாக மத்திய அரசுத் திட்டங்களுக்கு அந்த ஒரு குடும்பத்தின் பெயர் களைச் சூட்டி அழகு பார்த்தது மத்தியில் ஆண்ட காங்கிரஸ் ஆட்சி. இன்று வானளாவிய வல்லப பாய் படேலின் சிலையை நிறுவி, அவருடைய நாட்டுப் பற்றையும், ஆளுமைத் திறனையும் அகி லம் அறியத் தூக்கி நிறுத்திய பிரதமர் மோடி அவர்களுக்கு, தேசியப் பற்றுள்ள அனைவரின் பாராட்டும், நன்றியும் உரித்தாகட்டும்.

– இரா. கல்யாணசுந்தரம், மதுரை.

**ம**த்திய அரசின் திட்டங்களில் பிரதமர்களுக் கும், மாநில அரசின் திட்டங்களில் முதல்வர் களுக்கும் பெயர்கள் சூட்டும் நடைமுறையில் நேரு, இந்திரா, ராஜீவ் பெயர்கள் சூட்டப்பட் டுள்ளன. துணைப் பிரதமராக இருந்த படேல் அவர்களுக்கு இந்த வாய்ப்புக் கிடைக்காதது உண்மையே. அதேசமயம், 'இரும்பு மனிதர்' என்ற பட்டத்தின் மூலம் கிடைக்கும் புகழைவிட, இரும்புச் சிலை உயர்வானதா? எந்தப் பதவியிலும் இல்லாத காந்தி பெயர் அரசுத் திட்டங்களுக்கு உள்ளதுதான் மரியாதை. அதேபோல, படேல் பெயரைத் தவிர்த்ததைக் குறைகூறாமல், தற் போதாவது அரசின் திட்டங்களுக்கு அவர் பெயர் வைத்து மரியாதை கொடுக்கலாம்.

– வ. நவநீதகிருஷ்ணன், நென்மேனி.

**இ**ந்திய விடுதலைப் போராட்டத்தைப் படித் தால், அதில் கலந்து கொண்ட அனைவருக்கும் சிலை அமைத்து வழிபட வேண்டும் என்ற உணர்வு மேலிடுகிறது. இதுவரை மகாத்மா காந்தியை உயர்த்திப் பிடித்த நாம், இந்தச் சிலை யின் மூலம் சர்தார் வல்லபபாய் படேலை உயர்த்திப் பிடிக்க முயன்றுள்ளோமோ என்ற எண்ணமும் எழு கிறது. சிலை அமைப்பதில் மாறுபட்ட கருத்து இல்லை. ஆனால், உலகிலேயே உயரமான சிலை படேலுக்கு என்னும்போது, பெருமையும் கூடவே நெருடலும் எழுகிறதே!

– ரவிச்சந்திரன், ஆவுடையாள்புரம்.

**ப**டேல் சிலை சத்தியமாக விரயம் கிடையாது. காரணம், உலகத்தையே திரும்பிப் பார்க்க வைக் கும் இந்திய நிகழ்வுகளில் மற்றுமொரு நிகழ் வாகவே நான் கருதுகிறேன். காரணம், விரயம் என அரசியல் காரணங்களுக்காக வாதிடலாம். ஒரே குறை என்னவெனில், அந்த மாமனிதரின் பிரம்மாண்டச் சிலையைத் தலைநகர் டெல்லியில் வைத்திருக்கும் பட்சத்தில் சிலையின் உயரத்தைப் போலவே, சிலையின் பெருமையும் இன்னும் பலத்த குரலுடன் உலகெங்கும் ஒலித்திருக்கும்.

– இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

**ப**டேலை உயர்த்தியதில் தவறில்லை. தவிர, காங்கிரசும் அவரைக் குறைவாக மதிப்பிட்ட தில்லை. 'இரு கோடுகள்' தத்துவ அடிப்படை தனை பிரதமர் மோடி கையாண்டிருக்கிறார்; தேசப் பிரச்சனை ஒன்று மட்டுப்பட! இந்நிலையில் பிரத மரது செயலாக்கம் சரியேயாயினும், செய்த விதம் தவறு. சிக்கனம்தனைக் கடைப்பிடிக்க வேண்டிய

மைய அரசு, சுதந்திரச் சிலை ஒன்றினுக்கு மேலானதாக இருக்க அபரிமிதமான செலவினம் நியாயமானதாகப் படவில்லை. படேலும் இத்தகு நிலையை விரும்பியிருக்க மாட்டார்.

– எஸ்.ஜி. இசட்கான், திருப்பூர்.

**வி**வசாயிகளெல்லாம் தற்கொலையிலும், மீளாத கடன் சுமையிலும் இருக்கும்போது, படேலுக்கு ரூ. 3 ஆயிரம் கோடியில் சிலை தேவையா? படேல் உயிரோடு இருந்தால் சத்தியமாக இதை ஏற்றுக்கொண்டிருக்க மாட்டார். மக்கள் வறுமையோடு இருக்கையில் ரூ. 3 ஆயிரம் கோடியில் சிலை எதற்கு? அதானி, அம்பானி, நீரவ் மோடி வாராக்கடன் 3.5 லட்சம் கோடியைத் தள்ளுபடி செய்த மோடியால், விவசாயிகள் கடனைத் தள்ளுபடி செய்ய மனமில்லை. படேலே மோடியை மன்னிக்க மாட்டார்.

– பா. சீமான்ஜிபாரதி,
வெள்ளானைக்கோட்டை.

**565** சமஸ்தானங்களைக் குறுநில மன்னர்களோடு பேசி இணைத்த தலைவருக்கு நன்றியாகப் படேலுக்குச் சிலை வைத்தது பெரிய மகுடம் சூட்டிப் பாராட்டியதாகும். ஆனால், இன்று நதிநீர் இணைப்பு, அல்லது பிணைப்பு என்று நீர்வழிச் சாலை உருவாக்கிப் பெரிய திட்டத்தை கங்கை முதல் காவிரி வரை இணைத்தால், அது இமயம் முதல் குமரி வரை இந்திய பாரத மாதாவுக்கு ஒரு பெரிய மகுடம் சூட்டிய செயலாகும். அந்த நீர்வழிச் சாலைக்கு படேல் அவர்கள் பெயர் சூட்டியிருந்தால், அதை இந்தியாவை இணைத்து ஒரு குடையின்கீழ் கொண்டு வருவதற்குச் சமம்.

– முசிபுசி. முத்துக்குமார், ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**இ**துவரையில் ஆண்ட காங்கிரஸ் அரசு, படேலைச் சரியான முறையில் முன்னிறுத்தி அவரது பெருமையை இந்திய அளவில் சரியாகப் பிரபலப் படுத்தாமல் மறைத்துவிட்டது என்பதும் உண்மை. அதற்காக, இன்றைய அரசு அவருக்காக ரூ. 3 ஆயிரம் கோடியைச் செலவழித்திருக்க வேண்டுமா? என்பது சற்றே நெருடலாகத் தானுள்ளது. நம் நாடு இன்று இருக்கும் நிலையில் – குறிப்பாக முதுகெலும்பாக இருக்கும் விவசாயத் துறை பெரிதும் நலிவடைந்து, அவர்களின் வாழ்வாதாரம் கேள்விக்குரியதாக இருக்கும் நிலையில், அத்தனை கோடிகளைச் செலவு செய்து சிலை வைத்திருப்பது எவ்வகையிலும் பொருத்தமானதாகத் தெரியவில்லை.

– வெ. பாண்டுரங்கன், திருநின்றவூர்.

**வே**று கருத்துக் கூற முடியாத அளவில் கருத்துக்கள் தெளிவாகவும், ஆணித்தரமாகவும், அருமையான விளக்கங்களோடும், சர்தார் படேல் பற்றி நாட்டு மக்கள் அறிந்து கொள்ளவில்லையே என்கிற ஆதங்கத்தோடும், அப்படி அறிந்து கொள்ள விடாமல் செய்துவிட்டார்களே என்கிற அறச்சீற்றத்தோடும் விவாதக் கட்டுரை அமைந்திருந்தது.

– எஸ். கோகுலாச்சாரி, புவனகிரி.

**ப**டேலின் ஆளுமை, நிர்வாகத்திறன் பற்றிச் சுதந்திரத்திற்குப் பின் அவருடன் பணியாற்றிய ஐ.சி.எஸ். அதிகாரிகள், படேலின் இறந்த உடலை, ஒரு நாற்காலியில் உட்கார வைத்தாலும், அது ஆட்சி செய்து கொண்டிருக்கும் என்பார்களாம். படேல்தான் சுதந்திரப் போராட்டத்தை நடத்திச் சென்ற நிர்வாகியும், சுதந்திரத்திற்குப் பின் புதிய நாடு உருவானதன் சிற்பியும் ஆவார். இவ்வளவு வல்லமை வாய்ந்த இரும்பு மனிதருக்கு இரும்பினாலேயே, உலகிலேயே மிக உயரமான சிலைக்கு அடிக்கல் நாட்டியும், நிறுவியும், எந்தக் காங்கிரஸ் தலைவர்களும் செய்யாத இக்காரியத்தைச் செய்து, பெரும் சாதனை புரிந்திருக்கிறார் மோடி.

– பே. சண்முகம், செங்கோட்டை.

**ப**டேல் சிலை நியாயம் என்பதைச் சொல்லி நிற்கும் காரணங்களில் ஒன்று காஷ்மீர். அவர் பொறுப்பில் இருந்தால் இணைத்திருப்பார். இப்படித் தொங்கு நிலை வந்திருக்காது என்பது. இன்னொன்று, வாரிசுகள் அரசியலில் வளம் கொழிக்கும் காலகட்டத்தில் படேலின் ஒரே மகள் திருமணம் செய்யாது, காங்கிரசுக்காக உழைத்து, வெறுத்து ஒதுங்கி, வறுமையில் வாடினார் மணிபென் படேல். சர்தார்களில் ஒருவருக்குச் சிலை வைத்தது சரி. இன்னொரு சர்தாருக்கு வேதாரண்யத்தில் சிலை வேண்டும். அது போல, நேதாஜிக்குச் சிலை வேண்டும்.

– சீத்தலைச் சாத்தன், திருப்பத்தூர்.

**ப**டேல் சிலை விவாதக் கட்டுரையின் விளக்கம் அருமையாக இருந்தது. படேல் சிலை அமைந்துள்ள இடமும், 2001–இல் நிலநடுக்கம் ஏற்பட்ட இடமும் அதிக தூரமில்லை என்பதுதான் உண்மை. இதைச் சிலை அமைப்பாளர்கள் கருத்தில் வைத்துத்தான் சிலை அமைக்கும் இடம் தேர்வு செய்யப்பட்டதா? சிலைக் கலாச்சாரம் அரசர்கள் காலத்தில் இருந்தது. ஆனால், தற்போது அரசியல் ஆதாயத்திற்காகச் சிலை வைப்பதுதான்



<u>அட்டைப்பட விளக்கம்</u>

## அருள்தரும் அம்மையப்பர்

**சி**வபெருமான் தன் பக்தர்களுக்கு அருள் செய்யச் செல்லும்போது, உமையம்மையுடன் நந்தி வாகனத்தில் அமர்ந்து சென்று அருளியதாகப் பெரிய புராணத்தில் படித்திருப்போம். திருஞான சம்பந்தருக்கு அருள் செய்ய அம்மையுடனே சென்று, அவருக்கு அன்னை ஞானப்பால் அளித்ததை அறிவோம். அருள் செய்வதற்கு அன்னையுடனும், தீமைகளை அழிப்பதற்கு அன்னையின்றியும் செல்பவர் சிவபெருமான். மாணிக்கவாசகர், சிவபெருமானையே அம்மையாகவும், அப்பனாகவும் கண்டு, ‘அம்மையே அப்பா ஒப்பிலா மணியே’ என்று பாடினார். அம்மையோடு அமர்ந்து அருள் தரும் அம்மையப்பரை, இம்மாத ‘ஓம் சக்தி’ இதழின் முகப்போவியத்தில் காணலாம்.

– ஆர்.வி.

ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

– சி. பிரகாஷ், முத்தரசநல்லூர்.

**ந**மது நாட்டிற்குத் தற்போது அத்தியாவசிய மாகச் செயல்படுத்த வேண்டிய நதிநீர் இணைப்பு, வேளாண் உற்பத்தித் தன்னிறைவுத் திட்டம் முதலிய திட்டங்கள் இருக்கும்போது, மூன்றாயிரம் கோடி செலவில் திரு. படேல் அவர்களுக்குச் சிலை நிறுவியிருப்பது விரயம்தான், நியாயமில்லை என்றே கருதத் தோன்றுகிறது. இது குறித்து இங்கிலாந்து நாடாளுமன்ற உறுப்பினர் திரு. பீட்டர் போன் 1.17 பில்லியன் பவுண்டு (ரூ. 9492 கோடி) எங்கள் நாட்டிலிருந்து உதவித்தொகை பெற்றுக்கொண்டு, மூன்றாயிரம் கோடி ரூபாய் செலவில் சிலை அமைத்திருப்பது முட்டாள்தன மானது என்று விமர்சனம் செய்திருப்பது வேதனை யளிக்கிறது.

– உ.மு.ந. ராசன் கலாமணி,
கோபிசெட்டிபாளையம்.

**உ**லகின் இரண்டாவது மிகப்பெரிய இந்திய ஜனநாயகத்தின் கட்டுமானத்தில் அளப்பரிய ஆற்றலாக விளங்கியவர் சர்தார் வல்லபபாய் படேல் அவர்கள். ஐந்நூறுக்கும் மேற்பட்ட சமஸ் தானங்களைத் தமது அயராத உழைப்பால் இந்தியாவோடு இணைத்து, அதனை இரும்புக் கோட்டை போல அரணாக்கி, இரும்பு மனிதராகப் புகழப்பட்ட சர்தார் வல்லபபாய் படேலுக்கு இந்தச் சிலையை நிறுவியது மிகப் பொருத்தமே. நாட்டுக் காக உழைத்தவர்க்கு நாடு நினைவூட்டும் நன்றி யாக இச்சிலையை எடுத்துக்கொள்ள வேண்டும்.

– முத்தமிழருவி இ. மாரிமுத்து,
அ. வாடிப்பட்டி.

**இ**ந்தியாவின் தந்தை யார் எனக் கேட்டால், ‘காந்திஜி’ என்றுதான் கூறுவார்கள். ஆனால், படேல், ஜெயப்பிரகாசர், டாக்டர் லோகியா, நேதாஜி மற்றும் ஏராளமான தேசியத் தலைவர்கள் சுதந்திரத்திற்குப் பாடுபட்டு உயிர் துறந்தவர்கள் என்றால் மிகையாகாது. சர்தார் படேலுக்கு மட்டும் ரூ. 3 ஆயிரம் கோடி செலவில் அவசியமா? அவ சியம் இல்லை. வீண் செலவு. சுமார் 75 ஆண்டுகள் இப்பூமியில் வாழ்ந்தவர், மறைந்து 70 ஆண்டுகளுக்குப் பின் இப்போது சிலை உயரமாக எழுப்பப்பட வேண்டிய அவசியமே இல்லை.

– லிங்கம் சின்னசாமி, தாராபுரம்.

**ந**ம் நாட்டின் நலனுக்காகவே உழைத்த சான்றோர் பெருமக்கள் பலரில், ‘சர்தார் படேல்’ அவர்கள் மிக முக்கியமானவர். அவரது குறுகிய கால – இரண்டே ஆண்டுக்கால அரசியல் வாழ் வில், இந்திய சமஸ்தானங்கள் அனைத்தையும் ஒருங்கிணைத்த சாதனைக்குரியவர். அவருக்கு மிகப் பிரம்மாண்ட அளவில் சிலை அமைத்தது மிக மிக நியாயமே. அவர் மறைந்து 70 ஆண்டு களுக்குப் பிறகாவது அவருக்குச் சிலை அமைத்த நமது பிரதமர் மோடி அவர்களைப் பாராட்டியே ஆக வேண்டும். எனவே, படேல் சிலை நமது நாட் டின் பெருமையைக் காலகாலத்திற்கும் உலகம் முழுதும் நிலைநாட்டும் என்பதில் ஐயமே இல்லை.

– இரா. சோமு, திருப்பூர்.

**ந**வ இந்தியாவின் சிற்பியை இதைவிட எப்படி உலகிற்கு அறிமுகப்படுத்த முடியும்? அச் சிலையைக் காண வருபவர்களின் மூலம், கிடைக் கும் வருவாய் மூலம் அத்தொகை காலப்போக்கில் ஈடுகட்டப்படும். எனவே, எதையும் விரையம், வீண் என்பது ஏளனம் செய்பவர்களுக்கும், தேவை யில்லாத செலவு என்று சொல்பவர்கள் மத்தியில் படேலின் உயர்ந்த உள்ளத்தையும், அவர் செய்த

உன்னதப் பணிகளையும் நினைக்கும்போது அம்மாபெரும் மனிதனான இரும்பு மனிதனுக்கு இரும்பால் சிலை அமைத்தது சரியே!

– என். ஆர். ஜெயசந்திரன்,

காவேரிப்பட்டணம்.

**இ**ரும்பு மனிதர் சர்தார் வல்லபபாய் படேலின் 143–ஆவது பிறந்த தினத்தில் அவருக்குக் கிடைத்துள்ள இந்த மரியாதையால் இந்தியா என்றால் காந்தி, நேரு என்று மட்டுமே இருந்த எண்ணம் உலக அளவில் மாற 3 ஆயிரம் கோடி செலவு செய்து அவருக்குச் சிலை வைத்தது விரய மல்ல, நியாயமானதே. இந்த இரும்பு மனிதரை இளைய தலைமுறை மறவாமல் இருக்க இந்தச் சிலை நிச்சயம் உதவும்.

– ராம பழனியப்பன், கோவை.

படேல் சிலைக்கு 1700 டன் பித்தளை சீனாவிலிருந்து வாங்கப்பட்டுள்ளது. 'மேக் இன் இந்தியா' என்பதெல்லாம் வெறும் பேச்சுத்தான். இப்பொழுது சீனா செல்வோம். அறிவியல் வல்லு நர் ஒருவர் இப்போதைய இந்தியப் பிரதமராக இருப்பதாக வைத்துக் கொள்வோம். மகாலிங்கம் என்பது அவரது பெயர் என்றும் வைத்துக் கொள் வோம். மகாலிங்கம் சீனாவைச் சுற்றிப்பார்த்து விட்டு வரும்போது, ஸியான் (XIAN) நகரில் ஒரு கோபுரத்தைப் பார்க்கிறார்.

அந்தக் கோபுரம் 100 மீட்டர் உயரம். இந்தக் கோபுரத்தின் அடியிலிருந்து காற்று உறிஞ்சப்பட்டு, சூரிய ஒளியால் உருவான மின்சக்தி மூலம் மேலே செலுத்தப்படுகிறது. அந்தக் கோபுரத்தில் பல காற்று வடிகட்டிகள் உள்ளன. கீழே புகும் மாசுக் காற்று, மேலே வெளியே வரும்போது சுத்தமான காற்றாக வருகிறது. கூகுளில் "WORLD'S LARGEST AIR PURIFIER AT XIAN" என்று தேடிப் பார்ப்பவர்களுக்கு விஷயம் புரியும். இந்தியப் பிரதமர், அறிவியல் வல்லுநர் மகாலிங்கம் யோசிக் கிறார். இந்தப் படேல் சிலையின் உள்ளே ஒரு காற்று வடிகட்டிக் கோபுரத்தை வைத்து உருவாக் கினால், சிலையும் ஆச்சு, காற்றும் சுத்தமாகி விடும். இந்த ஸியான் காற்று வடிகட்டி ஒரு நாளைக்கு 10 மில்லியன் கன மீட்டர் மாசுக் காற்றை இழுத்துச் சுத்தப்படுத்தி விடுகிறது. அதி லுள்ள கரிமத் துகள்களைக் கொண்டு வைர மணிகளை உருவாக்கி விற்பனை செய்கின்றனர்.

பிரதமர் மகாலிங்கம், டெல்லியில் காந்தி சிலை, பெங்களூரில் விஸ்வேஸ்வரய்யா சிலை, பரோடாவில் படேல் சிலை, கல்கத்தாவில் நேதாஜி சிலை, தூத்துக்குடியில் வ.உ.சி. சிலை என மாசுக் காற்று எங்கெல்லாம் அதிகம் உள்ளதோ, அங் கெல்லாம் காற்றுச் சுத்திகரிக்கும் சிலைகளை உருவாக்கத் திட்டம் போடுகிறார். எப்படி இருக் கும், யோசித்துப் பாருங்கள்!

ஆனால், இப்போதுள்ள பரமார்த்த குரு பிரத மரிடம் இதையெல்லாம் எதிர்பார்த்தால், நாமெல் லாம் அவருக்கு ஏற்ற சீடர்கள் ஆவோம் என்பதில் ஐயமில்லை.

– ம.பெ. சுதந்திரகுமார், சென்னை.

**ப**டேல் அவர்களுக்கு, உலகின் உயரமான சிலை அமைத்தது காலம் கடந்தது என்று கூறி, நம் முன்னோர்களைக் கொச்சைப்படுத்த மாட் டேன். காலத்தின் கட்டாயம் என்று கூறிச் சிலை யமைப்புப் பணியைச் செய்தவர்களைக் குறைத்து மதிப்பிட மாட்டேன். அதற்கு இப்போதுதான் காலம் கனிந்தது என்று நினைத்து அமைதி கொள்வேன். படேல் அவர்களின் உலகின் உயர மான இந்தச் சிலை நியாயமானதே என்று எண் ணும் பலகோடி இந்தியர்களில் அடியேனும் ஒரு வன் என்பதில் பெருமிதமே கொள்வேன்.

– கோ. கலியமூர்த்தி, உறையூர்.

**ப**டேல் சிலை நியாயமான ஒன்றுதான். நம் இந்தியா இன்று சுதந்திரக் காற்றைச் சுவாசிப்ப தற்குக் காரணம், பல தியாகிகளின் அமைதியான போராட்டமே. அப்படிப்பட்டவருள் ஒருவர்தான் நம் படேல். நம் இந்திய மண்ணில் பெரிய சாதனை புரிந்து இவ்வளவு பெரிய இந்தியாவை நமக்கு உருவாக்கிக் கொடுத்து, 'குடத்தில் இட்ட விளக் காக' இருந்தவரை மிகப்பெரிய சிலை அமைத்து நம் இந்தியா மட்டுமல்ல, உலக நாடுகள் அனைத் தையும் திரும்பிப் பார்க்க வைத்த இந்தச் சிலை மிக மிக நியாயமானதே.

– உஷா முத்துராமன், மதுரை.

**நா**டு விடுதலை பெறுவதற்கு முன்பு, இந்தியாவுடன் இணைவதற்காக 562 சமஸ்தான மன்னர்களின் கையெழுத்தை வாங்கித் தந்தவர் மவுண்ட்பேட்டன். காஷ்மீரைப் பாகிஸ்தானுடன் இணைக்க அம்மன்னர் விரும்பினால், தமக்கு ஆட்சேபணை இல்லை என்றவர் படேல். காஷ்மீர்ப் பிரச்சனை பூதாகரம் ஆனதற்கு, மன்னர் ஹரிசிங் முழுமுதற் காரணம். சமஸ்தானங்களின் இணைப் பில் படேலின் முயற்சி மகத்தானது. சென்னையில் நேதாஜி, படேல் பெயரால் சாலைகள் வந்த பிறகு, நேரு சாலை வந்தது. இப்போது நர்மதையில் படேல் சிலை உள்ள இடத்திற்குச் 'சர்தார் சரோவர்' என்று பெயரிட்டதை நாம் ஏன் மறக்க வேண்டும்?

– மு. அங்கமுத்து, இடைப்பாடி. ●

# ‘பசும்பொன் தெய்வம்’ திரைப்படம்

## சில அனுபவங்கள்

**சூலூர் கலைப்பித்தன்**



பசும்பொன் தேவர் வேடத்தில் ராஜா முகமது

எனக்கு அப்போது சிறிய வயது! எட்டாவது, ஒன்பதாவது படிக்கும் பள்ளிப் பருவத்தில் தினத்தந்தி, தினமணி முதலிய நாளிதழ்களில் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் பற்றிய செய்திகள் அவ்வப்போது வந்து கொண்டிருக்கும். அந்த மாணவப் பருவம் அறிந்தும் அறியாத பருவம். நான் அவற்றைப் படிப்பேன்; அவ்வளவு தான்.

‘‘நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் உயிரோடு இருக்கிறார். ‘‘தேவர் பேச்சு’’, ‘‘தேவர் கைது செய்யப்பட்டார்’’, ‘‘முதுகுளத்தூர் கலவரம்’’ இப்படித் தொடர்ந்து அவரைப்பற்றிய செய்திகள் வந்து கொண்டேயிருக்கும்.

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் ஆசிரியராயிருந்து நடத்தி வந்த ‘கண்ணகி’ இதழுக்கு, சக்தி மோகன் என்பவர் ஆசிரியர் பொறுப்பேற்று நடத்தி வந்தார். அந்த இதழைப் படிக்க நேர்ந்தது. அதில், தேவர் அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கத்தையும், பிறகு முழுமையாகவும் படித்தேன்.

தென் மாவட்டங்களில் அக்டோபர் மாதம் 28, 29, 30 தேதிகளில் முப்பெரும் விழாவாகத் தேவர் பிறந்த நாளைக் கொண்டாடி வருகிறார்கள். பெண்கள் முளைப்பாரி எடுத்துக்கொண்டும் இளைஞர்கள் பலவித வீர விளையாட்டுகள் நடத்திச் சாரை சாரையாக வருதல், மொட்டையடித்துத் தேவர் ஆலயத்தில் பூசை செய்தல், இவை பார்க்கக் கண்கொள்ளாக் காட்சிகளாகும்.



குறிப்பாக, அனைத்து அரசியல் கட்சிகளும் மரியாதை செலுத்தும் விதமாக திண்டுக்கல், மதுரை, இராமநாதபுரம், தூத்துக்குடி, திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்ட ஆட்சியர்கள், மாவட்ட காவல்துறை ஆணையர்கள் ஒன்றுகூடி முடிவெடுத்து, அவர்களுக்கு நேரம் ஒதுக்கி மரியாதை செலுத்துவதற்காகக் கூடுகிற நிகழ்வு உலகத்தில் எந்தத் தலைவருக்கும் கிடையாது.

தேவர் வரலாற்றைத் திரைப்படமாக எடுக்க வேண்டும் என்ற எண்ணம் 2007–ஆம் ஆண்டு எனக்குத் தோன்றியது. தேவர் சமுதாயத்தைச் சேர்ந்த எத்தனையோ கோடீஸ்வரர்கள், லட்சாதிபதிகள், தேவர் பெயரில் இயங்கும் அமைப்பினர் அவர் வரலாற்றைத் திரைப்படமாக எடுப்பார்கள் என எதிர்பார்த்தேன். ஆனால், அவர்கள் தேவர் பெயரில் விளம்பரத்திற்காகவும், வியாபாரத்திற்காகவும் இயங்குவதை அறிந்து நானே எடுக்க முடிவு செய்தேன்.

நான் ஏற்கனவே ‘துளசி மாலை’ என்ற திரைப்படத்தை முடித்து, அதை வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும்போது, ஒருநாள் அதி காலை தூக்கத்திலிருந்து விழிப்பு ஏற்படும்போது, புத்தருக்கு போதி மரத்தடியில் ஞானோதயம் ஏற் பட்டாற்போல, எனக்கு ஓர் உதயம் தோன்றியது.

அப்போது காந்தி, பாரதியார், பெரியார், அம்பேத்கார், கப்பலோட்டிய தமிழன் வ.உ.சி., காமராஜர் இவர்களின் வாழ்க்கை திரைப்படங் களாக வந்து பதிவாகிப் புகழ்பெற்றன.

பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் வாழ்க்கை வரலாற்றுத் திரைப்படம் இல்லை. படத் தைத் தொடங்கத் தேவர் ஆத்மா என்னைத் தூண் டியது. 2014 அக்டோபர் மாதம் 30–ஆம் தேதி பசும்பொன் கிராமத்தில் தேவர் பெருமான் ஆலயத் தில் தேவர் இயக்கத்தைச் சேர்ந்த பல



*இளமைப் பருவ தேவர் வேடத்தில் அண்ணாதுரை*

பாண்டியர்களை அழைப்பிதழில் போட்டுப் படப் பிடிப்பைத் தொடங்கினேன்.

அவர்களைப் படத்தில் நடிக்க வைக்க ஒப் பனைத் தேர்வும் நடத்தினேன். அத்தனை பேரும் போலிகள் என அறிந்தேன். இருந்தாலும் முயற்சி யைத் தொடர்ந்தேன்.

கோவையில் உள்ள ராதா ஸ்டுடியோஸ் உரிமையாளர் ஓவிய ஆசிரியர் ஒரு நடிகரும்கூட. நாங்கள் பால்ய நண்பர்கள். அவர் கேமரா உதவி செய்வதாக உறுதி அளித்தார். முத்து வெங்க டேஷ் என்பவர் பழம்பெரும் ஒளிப்பதிவாளர் முத்து சாமியின் மகன். முத்துசாமி ஏவி.எம். ஸ்டுடி யோவின் ஒளிப்பதிவாளராகப் புகழ் பெற்றவர்.

அவர் வழியில் வந்து ஆயிரம் படங்களுக்குப் பணிபுரிந்த வெங்கடேஷ் ஒளிப்பதிவு செய்ய ஒப்புக்கொண்டார். படப்பிடிப்பின்போது படப்பிடிப்பு இடங்கள், போக்குவரத்து, தங்குமிடம், உணவுவகை எல்லாவற்றிற்கும் நண்பர்களைத் தயார் செய்தேன்.

பி.கே. மூர்த்தி என்பவர் கோவை இராமநாதபுரத்தைச் சேர்ந்தவர். இவர் கோவை சென்ட்ரல் ஸ்டுடியோ, பட்சிராஜா ஸ்டுடியோக்களில் ஒப்பனையாளராகப் பணிபுரிந்தவர். திலீப்குமார், எம்.ஜி.ஆர்., சிவாஜி, லலிதா, பத்மினி எனப் பழம் பெரும் நடிகர்களுக்கு ஒப்பனை செய்தவர். அவருடைய உதவியாளர் சின்னையன் ஒப்பனை செய்து தர ஒப்புக்கொண்டார். சிவம் என்பவர் மூத்த கலை இயக்குநர். இவர் ஓவியங்கள் லண்டன் வரை சென்று புகழ் பெற்றவை. இவர் கலை இயக்குநராகப் பணிபுரிய ஒப்புக்கொண்டார்.

எடிட்டர் அருணாசலம் சேலத்தைச் சேர்ந்தவர். மாடர்ன் தியேட்டர் சுந்தரம் அவர்களிடம் அலுவலகப் பையனாகச் சேர்ந்து, எடிட்டராக 300 படங்களில் பணிபுரிந்து தயாரிப்பாளராக உயர்ந்தவர். எம்.ஜி.ஆர்., சிவாஜி, கலைஞர், கண்ணதாசன், பாரதிதாசன் எனப் பலபேரிடமும் பணிபுரிந்தவர். அவர் எனது நெருங்கிய நண்பர். எடிட்டராகப் பணிபுரிந்து உதவி செய்தார்.

இவ்வாறு, எல்லாத் தொழில்நுட்பக் கலைஞர்களும் எனது ‘பசும்பொன் தெய்வம்’ படத்திற்கு உதவினார்கள். படத்திற்கு நடிகர், நடிகையர் தேர்வு தொடங்கியது. வரலாற்றுப் படங்களுக்குத் திரைப்பட நடிகர்களைப் போட்டுவிட முடியாது. படத்தின் வரலாற்று நாயகர், அவரோடு தொடர்பு கொண்டு வாழ்ந்தவர்கள் என அதே உடல்வாகு, முகத்தோற்றம் உள்ளவர்களையே தேர்வு செய்து நடிக்க வைக்க வேண்டும்.

காந்தி, பாரதியார், பெரியார், அம்பேத்கர் படங்களுக்கு அப்படிச் சாயல் உள்ளவர்களைத் தேடிக் கண்டுபிடித்தே நடிக்க வைத்தார்கள்.

முத்துராமலிங்கத் தேவர் படத்திற்கும் அவர் தோற்றம் உடையவரைத் தேடத் தொடங்கினேன். அதேபோல் மூக்கையத்தேவர், நேதாஜி, காந்தி, விவேகானந்தர் எனச் சாயல் உடையவர்களைத் தேடத் தொடங்கினேன்.

தேவர் வேடத்திற்கு இளவயதுப் பையன், இளைஞர், பெரியவர் என மூன்றுவித நடிகர்கள் தேவை. தேடுதல் வேட்டையில் இறங்கினேன்.

2010–ஆம் ஆண்டு ஜூன் மாதம் 23–ஆம் தேதி தொடங்கி, 27–ஆம் தேதி வரை உலகச் செம்மொழித் தமிழ் மாநாடு கோவையில் நடைபெற்றது. அதில் நோக்க ராகக் கலந்து கொள்ளத் தமிழக அரசு சார்பில் எனக்கு அழைப்பு வந்தது. அதில் அந்த ஐந்து நாட்களும் நான் கலந்து கொண் டேன். அந்த மாநாட்டுக்கு மதுரையிலிருந்து ராஜா முகம்மது என்ற இஸ்லாமியச் சகோதரர், அவர் சார்ந்த சொற்பொழிவு ஒன்றைத் தயாரித்து வந்திருந்தார். அவர் உருவத்தில் தேவர் மாதிரியே முடியெல்லாம் வளர்த்து, அவர் போலவே ஒத்திருந் தார்.

அவரிடம் நான், ''நான் பசும்பொன் முத்து ராமலிங்கத் தேவர் வரலாற்றைத் திரைப்படமாக எடுக்க உள்ளேன். நீங்கள் தேவர் வேடத்தில் நடிக்க வருகிறீர்களா?'' என்று கேட்டேன். அதற்கு அவர், ''அது நான் செய்த புண்ணியம்'' என்று அறிமுக அட்டையைக் கொடுத்திருந்தார்.

பிறகு அவரை நான் மறந்துவிட்டேன். இப் போது அந்த வேடத்திற்குப் பல பேரைப் பார்த்துப் பார்த்துத் தேடிக்கொண்டிருந்தேன். ஒரு நாள் திடீரென ராஜா முகம்மது ஞாபகம் வரவே, அவர் கொடுத்த அறிமுக அட்டையைத் தேடினேன். தேடித் தேடி ஒரு வழியாக அது கிடைத்தது. அவ ரைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டேன்.

அவர் என்னைத் தெரிந்து கொண்டார். ஆனால், அவர் ஒரு கேள்வி கேட்டு என்னை மடக்கினார். ''ஐயா, கோபித்துக் கொள்ளாதீர்கள். தேவர் ஐயா பெரிய சகாப்தம். அவர் வரலாற்றை எப்படிப் படமாக்கப் போகிறீர்கள்? சாத்தியப் படுமா?'' என்று கேட்டார். நான் ஒரு இருபது நிமி டங்கள் தேவரின் திரைக்கதையைச் சுருக்கமாகக் கூறினேன். அவர் நடிக்க ஒப்புக்கொண்டார்.

இவ்வாறு ஓராண்டுக்கு மேலாகத் தேடித்தேடி நேதாஜி, காந்தி, விவேகானந்தர் வேடங்களுக்கு நடிகர்களைத் தேர்வு செய்தேன். ஆனால், இளை ஞர் தேவர் வேடத்திற்கு ஆள் கிடைக்கவில்லை. இருந்தாலும், படத்தைத் தொடங்க முடிவு செய் தேன். அதன்படி 30.10.2014 அன்று பசும்பொன் தேவர் ஆலயத்தில் குருபூசை நிகழ்வுகள் பட மாகத் தொடங்கின.

'பசும்பொன் தெய்வம்' படத்தில் காந்தி



மதுரை ஆதீனத்தில்
தேவர் தீட்சை பெறும் காட்சி

வேடத்தில் நடிக்க, அவர் உருவத்தை ஒத்த காந்தி கனகராஜ் என்பவரைச் சென்னையில் தேடிப் பிடித்தேன். அவருக்குப் படத் தொடக்க அழைப் பிதழைக் கொடுத்திருந்தேன். அவர் டாக்டர் ந. சேதுராமன் அவர்களோடு தொடர்பு கொண்டவர். சேதுராமன் தேவர்பால் பெருமதிப்புக் கொண் டவர். அவரிடம் கனகராஜ் அழைப்பிதழைக் காட்டி யிருக்கிறார். அதைப்பார்த்த சேதுராமன், என் னைச் செல்லிடப்பேசியில் தொடர்பு கொண்டு 'உங்களைச் சந்திக்க வேண்டும்' என்றார்.

அவரைச் சந்தித்தேன். அப்போது அவர் என்னை வாழ்த்தி, ஒரு பத்தாயிரம் ரூபாய் எடுத்துக் கொடுத்தார். அதைக் கொண்டு நான் அடுத்தகட்டப் படப்பிடிப்பிற்குத் தயாரானேன்.

கோவை மாவட்டத் தேவர் பேரவையினர் சிலர் ஒப்புக்காக உதவி செய்வதாக ஒப்புக் கொண்டார்கள். ஆனால், ஆசிரியர் சரவண முத்து, மணிராசா இருவரும் உணர்வுப்பூர்வமாக, உறுதியாக உதவி செய்வதாகக் கூறி, அவர்கள் கொடுத்த பணம் அந்தப் படப்பிடிப்பிற்கு உதவி கரமாக இருந்தது.

முத்துராமலிங்கத் தேவர் பற்றிய இந்த 'பசும் பொன் தெய்வம்' திரைப்படம், அவர் எழுதியிருந்த பழைய 'கண்ணகி' இதழ்கள், வரலாற்று நூல்கள், வார, மாத இதழ்கள், நாளிதழ்கள், அவரது சொற்பொழிவுகள் அடங்கிய நூல்கள், செவிவழிச் செய்திகள் எனப் பலவற்றையும் ஆய்வு செய்து திரைக்கதை எழுதப்பட்டது.

அப்படி நான் ஆய்வு செய்தபோது, யாருக்கும் தெரியாத, யாரும் அறிந்திராத ஒரு செய்தி எனக்குக் கிடைத்தது. பாலக்காட்டை அடுத்த



*மதுரை ஆதீனத்துடன்*
*சூலூர் கலைப்பித்தன் (வலது)*

கொடுவாயூர் பக்கம் நொச்சியூர் என்ற ஒரு சிறிய கிராமம். அங்கே பசும்பொன் தேவர் அடிக்கடி வந்து தங்கியிருந்ததாக ஒரு செய்தி. அந்தக் கிராமத்தை ஒரு வருட காலம் நான் தேடினேன். கண்டுபிடிக்க முடியவில்லை.

டாக்டர் ராஜேந்திரபிரசாத் என்பவர் எனக்குக் குடும்ப நண்பர். அவரது தந்தையார் அந்தக் காலத்தில் காவல்துறைக் கண்காணிப்பாளராகப் பதவி வகித்தவர். அந்த டாக்டர் பாலக்காடு மருத்துவமனை ஒன்றில் பணியாற்றி வந்தார். அவர் மூலம் அந்தக் கிராமத்தைக் கண்டு பிடித்து உதவினார். என்னைப் பாலக்காடு வருமாறு கூறினார். நான் அங்கு சென்றேன்.

நாங்கள் அந்த நொச்சியூர் கிராமம் சென்றோம். அது இயற்கை வளத்தோடு அருகே ஆறோட, அழகாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தது! அந்த வாயிலிலேயே ‘ஸ்ரீ அகத்தியர் ஆஸ்ரமம்’ என்ற பெயர்ப்பலகை எங்களை வரவேற்றது.

நாங்கள் உள்ளே சென்றோம். எங்களை வரவேற்று உபசரித்தவர் சிவஸ்ரீ கே. வைத்தியநாதன் என்பவர். அவருடைய அறையில் ஒரு சுவாமிகளின் படம் மாட்டப்பட்டிருந்தது. அவரைப் பற்றிக் கேட்டோம். அகத்தியர் ஆசிரமத்தைத் தோற்றுவித்த வைத்தியநாத சுவாமிகளின் குருநாதர். பெயர் ஸ்ரீமத் சிவயோகி சித்தானந்தா சுவாமிகள். பாடல் இயற்றவும், பாடவும் வல்லவர்.

பசும்பொன் முத்துராமலிங்கத்தேவருக்கும் இவருக்கும் நட்பு ஏற்பட்டு அந்த அடிப்படையில் தேவர் பெருமான் இங்கு வந்து தங்கியும், தவமிருந்தும் சித்தானந்தா சுவாமிகளோடு கேரளாவெங்கும் ஆன்மீகப் பயணம் செய்து சொற்பொழிவும் ஆற்றியுள்ளார்.

இந்த சித்தானந்த சுவாமிகளோடு தேவரவர்கள் மேலாடையில்லாமல் உத்திராட்ச மாலையோடு காட்சி தரும் நிழற்படத்தின் ஆல்பத்தை அவரது சீடர் எங்களுக்குக் காட்டினார்.

இந்த ஆஸ்ரமத்திற்குத் தேவரது சீடர் மூக்கையாத் தேவர், கே.பி. சுந்தராம்பாள், சிவாஜி கணேசன் எனப் பல பிரமுகர்கள் வந்து சென்றுள்ளனர்.

நான் அந்த சித்தானந்தா சுவாமிகளின் உருவமொத்த ஒரு சித்த வைத்தியரைக் கண்டு பிடித்து, அவர் வேடத்தில் நடிக்க வைத்தேன். அங்கே இரண்டு நாட்கள் படப்பிடிப்பு நடத்தினேன்.

பெரிய தேவர் வேடத்திற்கு எனக்கு நடிகர் கிடைத்தார். ஆனால், இளம் வயது தேவர் வேடத்திற்கு ஆளே கிடைக்கவில்லை. தேடினேன், தேடிக் கொண்டே இருந்தேன்.

‘பசும்பொன் தெய்வம்’ தொடக்கக் காட்சியில், தேவருடைய தந்தையார் உக்கிரபாண்டியத் தேவரின் பணியாள் ஒருவர், சோதிடரிடம் வந்து, ‘உக்கிரபாண்டியத் தேவருக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறது. சோதிடம் கணிக்கச் சொல்லி என்னை அனுப்பி வைத்தார்’ என்று கூறுவது போல ஒரு காட்சியைப் படமாக்கியிருந்தேன்.

அந்தப் பணியாள் வேடத்தில் நடித்த இளைஞர் சூலூர் அண்ணாதுரை. நான் அந்தக் காட்சியைப் படமாக்கிய பிறகு, சென்னை சென்று எடிட்டிங் செய்தபோது, அந்த இளைஞர் தேவருடைய இளம் வயதுத் தோற்றத்தை ஒத்திருப்பதாகச் சாயல் தெரிந்தது. ஊருக்கு வந்து அவரை அழைத்து, ஒப்பனை செய்து பார்த்தபோது, அவர் 90 விழுக்காடு அப்படியே ஒத்துப் போயிருந்தார்.

இவ்வாறு, இந்தப் படத்திற்குத் தேவையான காந்தி, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ், தியாகராஜ பாகவதர், குன்றக்குடி அடிகளார், பெரியார், ராஜாஜி, முஸ்லீம் பெண் சாந்த்பீவி முதலிய வேடங்களுக்கு அவர்களையொத்த உருவத் தோற்றமுடையவர்களையே தேடிக் கண்டுபிடித்து நடிக்க வைத்திருக்கிறேன்.

இந்தப் படத்திற்குத் தேவர் பேரவையைச் சேர்ந்தவர் பணம் திரட்டிக் கொடுத்தார். அதை நான் முறைகேடு செய்யாமல் சரியாகப் பயன் படுத்திப் படப்பிடிப்புச் செய்திருக்கிறேன் என்ப தைக் காட்டும் விதமாக, அந்தப் படத்தை எடுத்த வரையிலான பகுதியை ஒரு சி.டி.யில் பதிவு செய்து, அவர்களுக்குப் போட்டுக் காட்டினேன். அதை 'ரஷ்' என்று கூறுவோம்.

அது என்னவென்றே தெரியாத அந்தத் தலைவர், படம் ஓடத் தொடங்கிய ஓரிரு நிமிடங் களிலேயே நிறுத்தச் சொல்லி என்னை அவமானப் படுத்தினார். பிறகு எனக்கு உதவி செய்யவிருந் தவர்களை உதவி செய்ய வேண்டாம் என்றும் கூறிவிட்டார். ஆனால், அவர் தேவர் பெயரில் அமைப்பு வைத்து நாடகமாடிக் கொண்டிருந்தார்.

ஆனால், தேவர் ஆத்மா ஏதோ ஒரு ரூபத்தில் வந்து அந்தப் படத்தை முடித்துக் கொடுத் திருக்கிறது.

இதில் அம்மன் அடிமை அரிமா சண்முக சுந்தரம் என்பவர் எனக்கு அறிமுகம் இல்லாதவர். ஆனால், ஆன்மீகப் பணிகளுக்கு அதிக உதவி செய்வதாகக் கூறினார்கள். நான் அவரைத் தொடர்பு கொண்டேன். தொலைபேசியில் விபரம் கூறினேன். 'அன்னபூர்ணா ஹோட்டலில் எனக்கு ஒரு கட்டுப் பணத்தை எடுத்துக் கொடுத்தார். ஐம்பதாயிரம் ரூபாய் அதில் இருந்தது.

மதுரை ஆதீனத்தைத் தோற்றுவித்தவர் திருஞானசம்பந்தர் பெருமான். மதுரை மண் ணையே ஆட்சி செய்த ஆதீனம் இது. 63 நாயன் மார்களில் நான்கு பேர் இதில் அடங்குவர். அதே போல இந்த மதுரை ஆதீனச் சீடர்களில் சிலர் அடங்குவர். அவர்களில் பசும்பொன் முத்து ராமலிங்கத் தேவரும் ஒருவர். தேவர் இங்கே வரமாக தீட்சை பெற்றவர்.

மதுரை ஆதீனத்தில் தீட்சை பெற்று, திருத்தொண்டாற்றிய தேவர் பற்றிய செய்திகள் இத்திரைப்படத்தில் வராவிட்டால், அது வரலாற்றுப் பிழையாகிவிடும் என்று எனக்குத் தோன்றியது.

இப்போதிருக்கும் மதுரை ஆதீனம் 292–வது குரு மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகளைச் சந்தித்து, தேவர் பற்றிய செய்திகளை அவர் வாய்மொழி மூலம் படமாக்கத் திட்டமிட்டேன். மதுரை ஆதீனம் எனக்குப் பழக்கமில்லை. பேரூரா தீனம் தவத்திரு மருதாசல அடிகளாரின் கடிதம் மூலம் மதுரை ஆதீனத்தைச் சந்திக்க அனுமதி பெற்றேன்.

படப்பிடிப்புக் குழுவோடு சென்று மதுரை ஆதீனத்தைப் பேட்டி கண்டு படமாக்கினேன். ஒரு மணி நேரம் மதுரை ஆதீனம் மடை திறந்த வெள்ளம் போலப் பசும்பொன் தேவர் பற்றித் தொடர்ந்து புகழ்ந்து சொல்லிக் கொண்டே வந்தார்.

அதில் குறிப்பிட்டு அவர் கூறியது, மதுரை ஆதீனம் சிறு வயதாக இருக்கும் போது இவரது தந்தையார் பிள்ளையார்பட்டியில் தேவர் தங்கி யிருந்த போது அழைத்துப்போய் தேவருக்கு அறி முகம் செய்திருக்கிறார். அப்போது மதுரை ஆதீனத்தைப் பார்த்து, 'உங்கள் பையன் வருங் காலத்தில் பெரிய தலைவனாக வருவான்' என்று கூறியதைக் கூறி, தேவர் ஒரு தீர்க்கதரிசி என்று கூறினார்.

இந்தப் படத்திற்கு 50–க்கும் மேற்பட்டவர்கள் ரூபாய் ஐந்நூறு முதல் லட்சம் ரூபாய் வரை உதவி செய்திருக்கிறார்கள். இந்தப் படம் முடிந்த கால கட்டத்தில் அவர்களுக்கு நான் நன்றி கூறும் முகமாக, கோவை இராமநாதபுரம் நடராசர் சரஸ்வதி திருமண மண்டபத்தில் அம்மன் அடிமை அரிமா சண்முகசுந்தரம் தலைமையில் ஒரு நன்றி அறிவிப்புக் கூட்டம் நடத்தினேன். அது முடியும் தருவாயில், கோவை மாவட்ட தேவர் பேரவை மணிராசா மூலமாக வெளிநாட்டில் வாழும் ஒருவர் பத்தாயிரத்திற்குண்டான ஒரு காசோலை தந்தார். அதேபோல, மணிராசு மூலம் ஹரிதாஸ் என்ப வரும் பத்தாயிரம் கொடுத்தார்.

இந்தப் படத்தை மேலும் தொழில்நுட்பப் பணிகள் செய்து முடிக்கப் பணம் தேவைப்பட்டது. அதற்காக அம்மன் அடிமை முயற்சி மேற்கொண் டார். அதற்குப் பிறகு சிவலிங்கத்தை அணுகி னேன். அதனால் எனக்கு எந்த வரவும் கிடைக்கவில்லை; வரமும் கிடைக்கவில்லை. சுமார் 60 ஆயிரம் வரை செலவு செய்து அவருக் கும் அவரோடு வந்த ஓய்வு பெற்ற ஓர் ஆட்சித் தலைவருக்கும் படம் போட்டுக் காட்டினேன்.

இந்தப் படத்தை முடிக்க இறுதிக்கட்டத்தில் உதவி செய்தவர் அம்மன் அடிமை அரிமா கொடைவள்ளல் சண்முகசுந்தரம் அவர்கள். அவ ருக்கு எனது பணிவான தாள் தொட்ட நன்றி உரித்தாகுக.

திரைப்படம் விரைவில் திரைக்கு வர உள்ள தற்குத் தேவர் மகானின் ஆசிதான் காரணம் என்றால் அது மிகையில்லை.

●

கட்டுரை

# முதுமையும் பாரம்பரியக் குடும்பமும்



இன்னும் முப்பது ஆண்டுகளில் அதாவது 2050–இல் இந்தியாவில் 65 வயதிற்கு மேலான முதியவர்களின் எண்ணிக்கை 30 கோடியாகிவிடும் என்று கணக்கிடப்படுகிறது. இந்த முதியோரின் பெருக்கத்தைச் சமாளிப்பது கடினமான சுமையாகும்.

அண்மையில் உலகில் கணினி மற்றும் கணித சிந்தனையால் ஏற்படும் முன்னேற்றங்களால் மனிதனின் வாழ்வு முடிவே இல்லாமல் நீடிப்பதை நினைக்குங்கால் பதற்றமும் பயமும் தோன்றுகிறது.

எங்கள் குடும்பத்திலும் தொண்ணூறைத் தொடும் ஏன் தொண்ணூறைத் தாண்டியவர்கள் பலர் உள்ளனர். இந்த முதுமையிலும் அவர்களின் உடலிலோ, வாழ்விலோ குறைபாடுகள் இல்லை. இந்த ஆளுமையால் அவர்கள் வாழ்வின் முடிவைப் பற்றி ஐயுறுவதில்லை. இவர்கள், வாழ்வின் முடிவில் கவலைப்படாமல் இறந்தார்கள். எஞ்சியிருந்த உறவினர்கள்தான் வருத்தம் அடைந்தார்கள்.

எனது மைத்துனர் 94 வயது. தனியே பொழுது போகவில்லையென மருத்துவப் பணிக்கு இன்னமும் தொடர்ந்து போகிறார். அவரது மைத்துனர் தொண்ணூறு வயது தாண்டியும் எவருடைய தயவுமில்லாமல் ரயில், பஸ் பிரயாணம் செய்கிறார். 94 வயதில் எனது உறவினர் அரசியல் தலைவராக முழு ஈடுபாடு கொண்டவராக இருக்கிறார். நம்நாடு 30 கோடிக்கும் மேலாக நல்ல உடல்நலமும் மனநலமும் உள்ள முதியோர்களைத் தாங்கி நிற்கிறது.

பாரம்பரியக் கூட்டுக் குடும்பத்தில் எப்போதும் முதியோர்களுக்குத் துணை



நான் தற்போது எண்பதுகளில் இருந்தாலும் சிறு இறுக்கமும் பிரயாசையும் ஏற்படும்போது அதைப் பெரிதுபடுத்தாமல், வாழ்வில் இயற்கையில் தோன்றும் சிறிய சரிவுகளைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும் என்ற மனோபாவம் கொள்கிறேன்.

சிறிது சிறிதாகத் தளர்வடையும் வயதிலும் பலர் அதைச் சிறிதும் சிந்தியாமல் சீர்பட வாழ்கிறார்கள். எனது தகப்பனார் ரயில் பிரயாணம் முடித்து ரயில் நிலையத்தில் இறங்கி நிற்கும்போது திடீரெனச் சரிந்து விழுந்து இறந்தார். எனது தாத்தா வேலையிலிருந்து ஓய்வுபெற்ற நிலையில் வீட்டுச் செலவு கணக்கிடும்போது கைகள் நின்று போன நிலையில் உயிர் பிரிந்தது. முகத்தில் சிலிர்ப்போ, உடலில் மாற்றமோ இல்லை.

இருக்கிறது. எப்போதும் குறைந்தது இரண்டு மூன்று பேர் கூடவே இருப்பார்கள். அவர்கள் சமூகத்தில் நடைபெறும் திருமணங்கள், மற்ற வைபவங்களில் பங்குகொள்வார்கள். பேரக் குழந்தைகள் பிறந்தால் மகிழ்ச்சியில் திளைப்பார்கள். வீட்டில் மாடு கன்று ஈன்றாலும் அதே இன்பநிலைதான். அவசரநிலை ஏற்பட்டாலும் நிதானமாக இருப்பார்கள். இதுதான் துணையின் வலிய நிலைமை.

இன்றைய நிலையில் தனித்துவிட்ட குடும்பங்களில் முதியவர்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுக்க வாய்ப்பில்லை. குடும்பத் தலைவனும் தலைவியும் பொருளீட்ட வெளியே செல்வதாலும், அவர்களது வாழ்க்கையில் சுகம் தேடு

முனைவர் டாக்டர் ஜே.ஜி. சண்முகநாதன்
கங்கா மருத்துவமனை, கோவை



வதிலும் காலம் கழிகிறது. தனிப்பட்ட செவிலியர் அல்லது பாதுகாவலர் நியமிக்காவிடில் முதியோர்களை முழுதாகக் கவனிப்பாரில்லை. இதனால் முதுமையோருக்கும், குடும்பத் தலைவர்களுக்கும் தனிமையின் தாக்கம் மனதில் படுகிறது. முதியவர்களுக்குப் போதிய பாதுகாப்பும் கவனமும் கொடுக்கவில்லையோ என மனவருத்தம் உண்டாகிறது.

அடுத்ததாக உணர வேண்டிய விஷயம் அறுபது வயதுகளில் ஒய்வுபெறும் முதியோர்களுக்கு 80 – 90 வயதுகளில் பெற்றோர்களைப் பாதுகாக்கும் பொறுப்பு இருக்கிறது. இவர்களே வாழ்க்கையை அனுபவிக்க நினைக்கும்போது, 80 – 90–களில் உள்ள அவர்களின் பெற்றோர்களைக் கவனிப்பது சற்று சலிப்பாகத் தோன்றலாம்.



முதியோர்கள் இன்பமாக இருக்கும் குடும்பத்திற்கு ஓர் உதாரணம். இங்கு தங்களது மகன், அவனது மனைவி முறையே அவர்களது பெற்றோர்களை வேற்றுமை பாராட்டாமல் நன்றாகக் கவனித்துக் கொள்வார்கள். பரஸ்பர அன்பும் கவனிப்பும் அவ்விடம் பொங்கி வழியும். இதில் மகனும் மகளும் அமெரிக்காவில் இருக்கும் குழந்தைகளைப் பார்க்கச் செல்லலாம். இந்த அந்நியோன்யத்தில் நால்வர் மூன்றாகவும், மூவரில் இரண்டாகவும், இருவரில் ஒன்றாகவும் குறைந்தாலும் அந்நியோன்யம் குறைவதில்லை.

இரண்டாம் வகை ஓய்வுபெறும் தம்பதியர்கள் தங்கள் பெற்றோர்களைப் பாதுகாப்பாகக் கவனிப்பதற்குச் செவிலியர் அல்லது பாதுகாவலரை நியமித்து அவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து தருகிறார்கள்.

மூன்றாம் வகையினர் மூத்தவர்களுக்கு மிக்க மரியாதையும் கௌரவமும் கொடுக்கிறார்கள். இதில் முதியவர்கள் தங்கள் இல்லங்களில் நடைபெறும் ஆசாரங்கள், பண விஷயத்தில் சிக்கனங்கள், சமையல் மற்றும் எல்லா விஷயங்களிலும் கூறும் அறிவுரைகளை, ஆலோசனைகளை மகன்கள், அவர்களது மனைவிகள், குழந்தைகள் கேட்டு நடப்பது நிகழ்கிறது.

சமூகத்தில் இளவயதில் பெரும் பாலானோர் நூல்கள் படிப்பது, சங்கீதம் கேட்பது, நல்ல சொற்பொழிவுகளைக் கேட்பது முதலிய கலாச்சாரப் பணிகளில் ஈடுபடுவது இல்லை.

வளரும் வயதில் இவற்றில் ஈடுபடாமல் இருந்தால், பிற்கால வாழ்க்கையில் அவர்களுக்கு விரக்தி ஏற்படும். மூளைக்கும் சிந்தனைக்கும் உயிர்ப்புக் கொடுக்கும் குறுக்கெழுத்துப் போட்டி, டி.வி.–யில் விளையாட்டுப் போட்டி, வினா விடைப் போட்டி, அறிவுக்குக் கிளர்ச்சியூட்டும் நிகழ்ச்சிகளைப் பார்ப்பது நல்லது. இதனால் மனதிற்குத் தெம்பு ஏற்பட்டுப் பிறரைச் சாராமல் இருக்கும் நல்ல வாழ்க்கை ஏற்படும்.

பொதுவாக, முதியோர்களை எல்லா வசதிகளும் நிறைந்த பிறிதோரிடத்தில் வைத்தால் பூரணத் திருப்தியுடன் இருப்பார்கள். அது உண்மையே. ஆனாலும் தான்பெற்று வளர்த்த குழந்தைகளுடன் வாழ முடியாமல், தனித்த நிலையை எண்ணிப் பூரண மகிழ்ச்சியற்ற மனதில் ஏக்கத்தோடு வாழ்வார்கள். தான்பிறந்து வளர்ந்த வீட்டில் தன் வம்சாவளிகளுடன் வாழ்வதே அவர்களது சொர்க்கமாகும். •

கட்டுரை

முனைவர் ப. சுப்பிரமணியன்



# சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

"நிதியறியோம் இவ்வுலகத் தொருகோடி
யின்பவகை நித்தம் துய்க்கும்
கதியறியோம் என்றுமனம் வருந்தற்க
குடந்தை நகர்க் கலைஞர் கோவே!
பொதிய மலைப் பிறந்த மொழி வாழ்வறியும்
காலமெலாம் புலவோர் வாயிற்
றுதியறிவாய் அவர் நெஞ்சின் வாழ்த்தறிவாய்
இறப்பின்றித் துலங்குவாயே!"

இப்பாடல், மகாகவி பாரதியார் மகாமகோபாத்யாய உ.வே. சாமிநாதையரை வாழ்த்திப் பாடிய ஒரு பாடலாகும். ஓலைச் சுவடிகளிலிருந்த பழந் தமிழ் நூல்களைத் தேடித் தொகுத்துப் பதிப்பித்துப் பெரும் புகழ் பெற்ற சாமிநாதையருக்குத் தமிழ் நூல்களைக் கற்பித்துக் கற்றோரவையில் முந்தி யிருக்கச் செய்த பெருமைக்குரியவர், திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை ஆவார்.


சேக்கிழார் பெருமான்

ஆசிரியர் தம் மாணாக்கர் சாமிநாதை யருக்குத் தமிழ் நூற் கடலை நிலை கண்டுணர்த் தினார். மாணாக்கர் தம் ஆசானின் அளக்க லாகாப் புலமைத் திறத்தையும், பண்பு நலன் களையும் தம் நூல்களாகிய என் சரித்திரம், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை சரித்திரம் ஆகியவற்றில் பதிவு செய்து, அவரின் பெரு மையை உலகறியச் செய் தார்.

19 – ஆம் நூற் றாண்டுக் கம்பன், இணை யிலாப் புலவன், மெய்ஞ்ஞானக்கடல், நாற்கவிக் கிறை, சிரமலைவாழ் சைவ சிகாமணி முதலான பல விருதுகளைப் பெற்றுள்ள மகாவித்துவான் எழுதியுள்ள எண்பதுக்கும் மேற்பட்ட நூல்களுள், 'சேக்கிழார் பிள்ளைத்தமிழ்' ஒன்றாகும்.

இந்நூல், சொற்சுவை, பொருட்சுவை, கற்பனை வளம், சந்த நயம் முதலிய சிறப்புக்கள் நிறைந்தது. சேக்கிழாரைக் குழந்தையாகப் பாவித்து, குழந்தையின் செயல்களைப் பத்துப் பருவங்களாக அமைத்துப் பாடப்பெற்ற நூலே சேக்கிழார் பிள்ளைத்தமிழ் ஆகும்.

**மகாவித்துவான் – பண்பு நலன்களும் புலமைத் திறமும் :** காட்சிக்கு எளிமையும், பணி வும், சாந்தமும் இவர் (மகாவித்துவான்) பாலுள என்பதை, இவரைக் கண்டவுடன் அறியலாம். ஆழ்ந்த அறிவும், இணையற்ற கவித்துவமும் வாய்க்கப் பெற்றிருந்தும், அலைகளெல்லாம் அடங்கி ஒலியற்றிருக்கும் ஆழ்ந்த கடலைப்போல அறிவின் விசித்திர சக்தியெல்லாம் கண்டவுடன் அறிய முடியா வண்ணம் அடங்கியிருக்கும் தோற் றம் உடையவராய் இவர் இருந்தார்.

இவருடைய அரிய குணங்களுள், பொறுமை, திருப்தி, தம்மை வியவாமை, பிறருடைய குற்றத் தைக் கூறாமை, பிறரைப் பாராட்டல், இரக்கம், நன்றியறிவு, சிவபக்தி, மாணாக்கர்பால் அன்பு முதலியவற்றைச் சிறப்பாகச் சொல்லலாம் என்பார் உ.வே.சா.




கற்றல், கற்பித்தல், கவி புனைதல் ஆகியவற்றைத் தம் வாழ்நாள் பணியாகக் கொண்டிருந்த மகாவித்துவான், பல தலபுராணங்களையும், சரித்திரம், மான்மியம், காப்பியம் முதலானவற்றையும், பதிற்றுப் பத்தந்தாதி, யமக அந்தாதி, மாலை, பிள்ளைத் தமிழ், கலம்பகம், கோவை, உலா, தூது முதலிய சிற்றிலக்கிய வகைகளில் பல நூல்களையும் இயற்றியுள்ளார்.

**சேக்கிழார் பிள்ளைத் தமிழ் :** சேக்கிழார் புராணம் பாடியவர் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் ஆவார். 'சிவஞான சித்தியார்' என்னும் நூலில் சேக்கிழாரைப் போற்றி வணங்குகிறார்.

மகாவித்துவான் இயற்றியுள்ள பிள்ளைத்தமிழ் நூல்களுள் சேக்கிழார் பிள்ளைத்தமிழ் இறுதியாகச் செய்யப்பட்டது என்பர். இந்நூல் உருவாகக் காரணமாக இருந்தவர் வன்றொண்டச்செட்டியார் என்பவராவார். இவ்வன்றொண்டச்செட்டியார், மகாவித்துவான் ஆற்றிவந்த புராணச் சொற்பொழிவுகளைக் கேட்டு இன்புற்று வந்தவர்.

அவர் ஒருநாள் பிள்ளை அவர்களிடம், திருத்தொண்டர்களுடைய பெருமைகளை நன்றாக யாவரும் அறியும்படிப் பெரியபுராணத்தின் வாயிலாகப் புலப்படுத்தி அருளிய சேக்கிழார் திறத்தில் பிள்ளைத்தமிழொன்று ஐயா அவர்கள் செய்தருள வேண்டும் என்று மிகவும் பணிவுடன் கேட்டுக் கொண்டார்.


மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை

அப்போது, 'பெரிய புராணத்திற்கு வன்றொண்டர் வாய்மொழியாகிய திருத்தொண்டத்தொகை காரணமாக இருந்தது. அப்புராணத்தை இயற்றிய சேக்கிழார் பிள்ளைத் தமிழுக்கு வன்றொண்டச் செட்டியாரது வாய்மொழியே காரணமாயிற்று. இது நல்ல அறிகுறி' என்று கூறி மகிழ்ந்த மகாவித்துவான், அவர் கேட்டுக் கொண்டவாறே 'சேக்கிழார் பிள்ளைத் தமிழைப்' பாடித் தமிழுலகிற்கு ஈந்து பெருமை பெற்றார்.

**நூலமைப்பு :** பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவராம் சேக்கிழார் பற்றிய பிள்ளைத்தமிழ் நூலினை, பக்தி மணம் கமழப் பாடியுள்ள மகாவித்துவானின் இப்பிள்ளைத்தமிழ் நூல் 103 விருத்தப் பாக்களாலானது. நூலின் பாயிரத்தில் விநாயகக் கடவுள் வணக்கமாக ஒரு பாடலும், குரு வணக்கமும், அவை அடக்கமுமாக ஒரு பாடலும் உள்ளன. நூலின் காப்புப் பருவத்தில் 11 பாடல்களும், செங்கீரைப் பருவம், தாலப்பருவம், சப்பாணிப் பருவம், முத்தப் பருவம், வாரானைப் பருவம், அம்புலிப் பருவம், சிற்றில் பருவம், சிறுபறைப் பருவம், சிறுதேர்ப் பருவம் ஆகிய ஒன்பது பருவங்கள் ஒவ்வொன்றிலும் பத்துப் பாடல்கள் உள்ளன.


உ.வே. சாமிநாதையர்

**விநாயகர் வணக்கம் :** விநாயகர் வணக்கமாக அமைந்துள்ள பாயிரப் பாடலில், விநாயகப் பெருமான் எடுத்த பேருருவம் (விசுவரூபம்) காட்டப்படுகிறது. சேக்கிழார் பெரிய புராணம் 'எடுக்கும் மாக்கதை' என்னும் திருவிருத்தத்தில் 'தடக்கை ஐந்துடை தாழ்செவி நீள்முடிக் கடக் களிற்றினைக் கருத்துள் இருத்துவாம்' என்னும் பகுதியிலுள்ள 'நீள் முடி' என்பது விநாயகர் விசுவரூபத் திருக்கோலமாகும்.

இத்திருக்கோலத்தையே சேக்கிழார் தியானித்தார் என்று மகாவித்துவான் கருதியதால், தாமும் தம் பிள்ளைத் தமிழ்க் காப்புச் செய்யுளில் விநாயகப் பெருமானின் பேருருவத் திருக்கோலத்தையே வருணிக்கிறார். மேலும், 'உலகெலாம்'



என்று இறைவனால் அடியெடுத்துக் கொடுக்கப்பட்ட முதல் செய்யுளின் கடைசி அடியிலுள்ள 'மலர் சிலம்படி' என்பதை, வினைத்தொகையாகக் கொண்டு உலகெலாம் மலர்ந்த சிலம் படி, மலர்கின்ற சிலம்படி, மலரும் சிலம் படி எனக் கொள்ள வேண்டும் என்ப தையும் இப்பாடலில் கூறுகிறார்.

மேலும், 'உலகெலாம்' எனத் தொடங்கும் முதல் பாடலிலுள்ள நான்கு அடி களும் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நெறிகளை உணர்த்துவதாகத் தெரிவிக் கிறார்.

**காப்புப் பருவம் :** இப்பிள்ளைத் தமிழ் நூலின் காப்புப் பருவத்தில் ஏனைய பிள்ளைத் தமிழ் நூல்களில் உள்ளதுபோல் திருமால், முருகன், கலைமகள் முதலான தெய்வங்கள் குழந்தையைக் காக்க வேண்டுமென்று கூறவில்லை. திருத் தொண்டத்தொகை சுந்தரரால் இயற்றப்பட்ட தொகைநூல். பெரிய புராணம் வழிநூல். திருத் தொண்டத்தொகையிலுள்ள பதினொரு திருப் பாடல்கள் ஒவ்வொன்றிலும், கூறப்பட்டுள்ள நாயன்மார்களை ஒவ்வொரு செய்யுளால் துதித்து, இவ்வடியார்கள் சேக்கிழாராகிய குழந்தையைக் காக்க வேண்டுகிறார்.

காப்புப் பருவம் மூன்றாம் பாடலில் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரை யும் சேக்கிழார் ஒத்தவர் என்று கூறுகிறார். சிவ பெருமானின் திருவடிகளைத் தம் இதயத்தில் கொண்ட தந்தையார் சிவபாத இருதயருக்குத் திருஞானசம்பந்தர் மெய்ப்பொருளாக விளங்கு பவர். சேக்கிழாரும் சிவ அன்பர்களின் மனதில் மெய்ப்பொருளாக விளங்குபவர். ஆதலின், சேக் கிழார் திருஞானசம்பந்தரை ஒத்தவர். உழவாரத் திருப்பணி செய்த நாவுக்கரசரைப் போல, சேக் கிழார் உழவை ஆரச் செய்ததால், திருநாவுக் கரசரை ஒத்தவர்.

சுந்தரர் திருநாவலூரில் தோன்றியவர். அதனால் நாவலர் பிரான் என்னும் பெயரைப் பெற்றவர். சேக்கிழாரும் நாவலராகிய புலவருக்குத் தலைவராக விளங்கியதால், 'நாவலர்கோன்' என்று அழைக்கப்பெற்றவர். அதனால், சேக்கிழார் சுந்தரரை ஒத்தவர். மூவராலும் அருளப்பெற்ற தமிழ்மறையாம் தேவாரத்திலுள்ள உண்மைப் பொருளை விரித்து அனைவரும் தெரிந்து வாழ்வ தற்கு அருள் செய்தவர் குன்றத்தூர் அரசர் சேக் கிழார் ஆவார். இதனை,

"நம்மையருள் சிவபாத இருதயர் உளத்துஉவகை
நண்ண ஒண்பொருளாதலால்
நாடும் உழவார வலம் இயைதலால் யாவோரும்
நாவலர் பிரான் என்னலால்
வெம்மைதவிர் புகலியார் முதல் மூவரும் புகலும்
வேதத் தமிழ்க்கண் உள்ள
மெய்ம்மையை விரித்துத் தெரிந்தருள்
செய் குன்றையூர்
வேந்தைப் புரக்க என்றே"
(காப்பு – 3)

எனப் பாடுகிறார்.

மேலும், மூவரும் அருளிச் செய்த தேவாரத் தின் பொருள் தெரியுமாறு, முற்காலத்தில் சிவ பெருமானால் அருளப்பெற்ற வேதங்களுக்குப் பொருள் விளக்கம் தந்த அன்பு மாறாத வித்தியா ரணிய முனிவரின் உள்ளம் மகிழுமாறு பெரிய புராணச் செய்யுட்களால் விரித்துரைத்தவர் நாவலர் பிரான். இதனை,

"அருள் மூவர் அருள்மறைப் பொருள்
தெரிய முன்னொருவர்
அருள்மறைப் பொருள் விளக்கும்
நம்பறா வித்தியாரணிய முனிவரதுளம்
நயப்ப யாப்புற விரித்த நாவலர் பிரான்"

என்பார் மகாவித்துவான்.

**அமங்கலச் சொல் இடம்பெறா நூல் :** தம் திருத்தொண்டர் புராணத்தில் அமங்கலச் சொற் கள் விரவி வராமல் கவிபாடிய பெருமை பெற்றவர் சேக்கிழார் என்பதை,

"சொல்லும் பொருளும் நனி சிறப்பச்
சுருங்கச் சொல்லல் முதலாய
தோட்டி அமைய அமங்கலமாம்
சொற்கள் புணரா தறக்களைந்து
வெல்லும் தகைய முரண் காட்டி
விலக்கு விலக விதிதழுவி" (முத்தப் – 3)

என்பார். மெய்ப்பொருள் நாயனார் புராணத்தில் சேக்கிழார், முத்தநாதன் மெய்ப்பொருள் நாய னாரை வாளால் வீழ்த்தினான் என்பதை வெளிப் படையாகக் கூறாமல்,

"பத்திரம் வாங்கித்தான் முன் நினைந்த அப்

பரிசே செய்ய'' என்றும், ஏனாதி நாயனார் புராணத்தில் அதிசூரன் என்பவன் ஏனாதிநாயனாரை வாளால் எறிந்ததை, ''முன்னின்ற பாதகனும் தன் கருத்தே முற்றுவித்தான்'' என்றும் பாடியுள்ளார். இவற்றை மனதிற் கொண்டே மகாவித்துவான், ''அமங்கலமாம் சொற்கள் புணராது அறக் களைந்து'' என்று பாடியுள்ளார் எனலாம்.

**சோழமன்னனும் சிந்தாமணியும் :** சமணர்களின் சீவக சிந்தாமணி நூலினை இரவு பகலாகப் படித்து ஆராய்ந்து வந்த சோழ மன்னனின் மனதை மாற்றி, அவன் உள்ளம் கொள்ளுமாறு சிவனடியார்களின் வரலாறாகிய பெரியபுராணத்தைக் கூறி, அரசரின் உள்ளத்தில் பதியுமாறு செய்தவர் சேக்கிழார் என்பதை,

"கார் கொண்ட அமண சிந்தாமணியை
வளவர்கோன்
கங்குல் பகல் ஆராய்தாக்
கண்டொழித்து ஆவது இதுவேயென்று தொண்டர்தம்
மகத்துவம் கருத உய்த்து"

எனப் பிள்ளையவர்கள் பாடியுள்ளார்.

**குன்றத்தூரின் வளம் – கற்பனை :** சேக்கிழார் அவதரித்த குன்றத்தூர் பல்வேறு சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டது. நீர்வளம், நிலவளம் மிக்கது. குன்றத்தூர் பரந்தாமன் பள்ளிகொண்ட பாற்கடலை ஒத்து விளங்குவதாக மகாவித்துவான் பாடி மகிழ்கிறார். இப்பாடலில் கற்பனை நயம் மிகுந்துள்ளது.

திருப்பாற்கடல் வெண்மை நிறம் உடையது. குன்றத்தூர் வெண்மையான திருநீற்றின் ஒளியைக் கொண்டுள்ளது. திருப்பாற்கடலில் எப்போதும் பேரொலி ஒலித்துக் கொண்டிருக்கும். குன்றத்தூரில் அடியவர் கூறும் 'அரகர' முழக்கம் ஒலித்துக் கொண்டிருக்கும். திருப்பாற்கடலில் அமுதம் உண்ணத் தேவர்கள் நெருங்கியிருப்பார்கள். அதுபோலக் குன்றத்தூரில் உணவு உண்ணப் புலவர்கள் நெருங்கியிருப்பார்கள்.

திருப்பாற்கடலில் தெய்வப் பெண்களான அரம்பையர்கள் இருப்பார்கள். குன்றத்தூரில் அரம்பை என்னும் வாழை மரங்கள் வரிசையாக நிற்கும். பாற்கடலில் 'ஆதிசேடன்' என்னும் பாம்பு உள்ளது. குன்றத்தூரில் நாகேசுவரப் பெருமான் எழுந்தருளியுள்ளார். பாற்கடலில் திருமகள் வீற்றிருப்பாள். குன்றத்தூரில் எல்லாச் செல்வ வளங்களும் நிறைந்திருக்கும். பாற்கடலில் கரிய நிறமுடைய திருமால் உறங்குவது போலக் குன்றத்தூர் மாளிகைகளில் கரிய மேகங்கள் படிந்திருக்கின்றன. இதனை மகாவித்துவான் ஓசை நயமும், சிலேடை அழகும் தோன்றப் பாடியுள்ளார்.

"நண்பால் எவரும் உறத் தரிக்கும்
நலம்சூர் நீற்றின் வெள்ளொளியால்
நாவால் எவரும் அரமுழக்கம்
நாளும் செயஆம் பேரொலியால்
எண்பால் புலவர் அமுது கொளற்
கெந்த இடத்தும் நெருங்குதலால்
ஏர்சால் அரம்பை எழுத லினால்
இயல் நாகேசன் வைகுதலால்
கண்பால் கரிதோய் திருமடந்தை
காமுற்றி டலால் மாளிகைமேல்
கடுமால் கிடந்து கண் துயிலும்
காட்சித் திறனால் பொங்கிஎழும்
தண்பால் கடல்நேர் குன்றத்தூர்" (தாலப் – 2)

என்பது பாடல்.

குன்றத்தூரின் வளத்தை அழகுற வருணிக்கும் மற்றொரு பாடல் கற்பனை வளம் மிக்கது. வானத்தில் ஞாயிறு தோன்றியது. தாமரை மலர்கள் நிறைந்த பொய்கைக் கரைகளில் மரங்கள் நிறைந்து நிற்கின்றன. அம்மரங்களின் கிளைகளிலுள்ள மலர்களிலிருந்து ஒழுகுகின்ற தேன் அப்பொய்கையில் விழுந்து பொய்கை நிரம்பி விடுகிறது. அப்பொய்கையில் நீராட வந்த மகளிர், அதிலுள்ளது நீரல்ல, தேனென்றுணர்ந்து அதில் நீராடாது கரையில் ஒதுங்கி நிற்கின்றனர். குளத்து நீரின் அலைகளில் படிந்து மேலெழுகின்ற அன்னப் பறவைகளின் உடம்பிலிருந்த தேன்துளிகள் மேலேயிருந்து சிந்திக் கரையிலிருந்த பெண்களை நனைக்க, அப்பெண்கள் மேகத்திலிருந்து தேன்மழை பொழிந்தது என்று எண்ணி வானத்தை நோக்கி நிற்கின்றனர். அத்தகைய வளம் நிறைந்த குன்றத்தூர் என்பதை மகாவித்துவான் விதந்தோதுகிறார்.

"புழுங்கும் கதிர்ப்பருதி எழுமுறுக்குடைமுகப்
புண்டரீகத் தடத்தும்
பொலிதரச் சூழ்ந்து நிற்கின்ற தரு விடயமலர்
பொழிமது முழுக்க வீழ்ந்தே
எழுங் குங்குமத்தோள் இணைந்த முலையர்கள் கன
இரதம் அன்றென்று நீங்க
எறிதிரைக் கொளும் காலை அளவில்
ஓதிமம் ஆங்கண்
எய்திப் படிந்து துளையா
வழங்கும் தரத்தவாய் மேல் எழுமுன் நீங்கஓர்
ஆகம் முழுவதும் நனைந்தே
அருமை வெண்முகில் செய்ய தேன் பொழிதல்
எனவியந் தாகாயம் நோக்கி நிற்கும்
செங்குன்றை அம்பதி" (சிறுதேர் – 7)

என்பது பாடல்.

**(அடுத்த இதழில் முடியும்)**

# ஓம் சக்தி

ஆருயிர்களுக்கு எல்லாம் – நான்
அன்புசெயல் வேண்டும்.
– வள்ளலார்

மலர் : 36 ஜனவரி 2019 இதழ் : 12

நிறுவனர் : **நா. மகாலிங்கம்**

ஆசிரியர் & வெளியிடுபவர்: **ம. மாணிக்கம்**

*Editor & Publisher* : **M. MANICKAM**

அச்சிடுபவர் : **து. ராஜ்குமார்**

*Printer* : **T. RAJKUMAR,**

**Rukmani Offset Press**

ருக்மணி ஆப்செட் பிரஸ்,
E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
கோவை – 641 021.

இணையாசிரியர் : **பெ. சிதம்பரநாதன்**

கதை, கவிதைகளில் வரும் பெயர்களும்,
சம்பவங்களும் கற்பனையே.

படைப்புகளைச் சுருக்கவோ, திருத்தி அமைக்கவோ
ஆசிரியருக்கு உரிமை உண்டு.

'ஓம் சக்தி'யில் பிரசுரமாகும் படைப்புகளின் கருத்துகள்
அவற்றின் எழுத்தாளர்களுக்கு உரியவையே தவிர,
பத்திரிகை அவற்றிற்குப் பொறுப்பேற்காது.

**தனிப் பிரதி ரூ.15/–**
**ஆண்டு சந்தா ரூ. 265/–**
**(தீபாவளி மலர் உட்பட)**
**ஆயுள் சந்தா ரூ. 2000/–**
(10 ஆண்டுகள்)

சந்தா தொகையை "SAKTHI SUGARS LTD. A/c OMSAKTHI" என்ற பெயரில் D.D.–யாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், ஓம் சக்தி**
**69–ஏ, ஆரோக்கியசாமி சாலை (மேற்கு),**
**ஆர்.எஸ்.புரம், கோவை – 641 002**
**போன் : 0422–4322471, 0422–4322423**
வெளியிட்டோர் : **சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

E-mail : omsakthieditorial@gmail.com


சமையல்



# சடகுப்பை ரசம்

**தே**வையானவை : சடகுப்பை (உடைத்த தனியாவைப் போல இருக்கும் இது, நாட்டு மருந்துக் கடைகளில் கிடைக்கும்) 2 டீஸ்பூன், துவரம்பருப்பு 1 டீஸ்பூன், மிளகு 2 டீஸ்பூன், சீரகம் 1 டீஸ்பூன், காய்ந்த மிளகாய் 1, புளி ஒரு நெல்லிக்காய் அளவு, உப்பு 1 டீஸ்பூன், மஞ்சள்தூள் 1/2 டீஸ்பூன், கடுகு 1/2 டீஸ்பூன்.

**செய்முறை :**

1. சடகுப்பை, துவரம்பருப்பு, மிளகு, சீரகம், காய்ந்த மிளகாய் ஆகியவற்றைத் தனித்தனியே லேசாக வறுத்து அனைத்தையும் சேர்த்துப் பொடிக்கவும்.
2. புளியை நீர்க்கக் கரைத்து, உப்பு, மஞ்சள் பொடி சேர்த்து அடுப்பில் வைக்கவும்.
3. புளிக்கரைசல் கொதித்ததும் பொடித்து வைத்துள்ள பொடியைப் போட்டு நுரைத்து வந்ததும் அடுப்பை அணைத்துவிட்டு, கடுகு தாளித்துக் கொட்டவும்.

சுவையான 'சடகுப்பை ரசம்' தயார். இது மிக ஆரோக்கியமான ரசம். கோடையில் ஏற்படும் நீர்க்கடுப்புக்கு நல்ல மருந்தாக விளங்கும். உடம்பில் இருக்கும் கெட்ட நீரை வெளியேற்றிவிடும் தன்மை கொண்டது சடகுப்பை.

– *மு. உமாமகேஸ்வரி,* செங்கோட்டை.



# புலவர் குழந்தை

‘இராவண காவியம்’ என்னும் காவியத்தைக் கொடுத்த புலவர் குழந்தை அவர்கள் ஈரோடு மாவட்டம், ஓலவலசு என்னும் ஊரில் 1.7.1906 ஆம் ஆண்டு முத்துச்சாமிக் கவுண்டர் – சின்னம்மையார் ஆகியோருக்குத் தவப் புதல்வனாய் உதித்தார்.

பெரியாரின் பாராட்டையும், அண்ணாவின் நல்வாழ்த்தையும் பெற்றவரான இவர் ஆடு, மாடுகளை மேய்த்துக் கொண்டே நாட்டுப்புறப் பாடல்களைக் கேட்டுத் தமிழ் கற்றார்.

இளமையிலேயே சந்தப் பாடல்கள் புனைவார். கன்னியம்மன் சிந்து, வீர குமாரசாமி வழிநடைச் சிந்து, காவடிச் சிந்து, ரதோற்சவச் சிந்து, ஆடி வேட்டை முதலியவற்றை இசையுடன் பாடினார். மேலும் ஒப்பாரிப் பாட்டு, தாலாட்டுப் பாட்டு என இசைப் பாடல்களைப் படைப்புகளாகப் படைத்தார்.

திண்ணைப் பள்ளியில் சில மாதங்கள் மட்டுமே கல்வி பயின்றார். பின்னர் 1934–ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகத்தில் புலவர் பட்டம் பெற்றார். ஈரோட்டில் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் படித்துக் கொண்டிருக்கும் போதே கரந்தை சென்று கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் வித்துவான் தேர்வெழுதிப் பட்டம் பெற்றார்.

இவர் பெரியாருடன் மிக நெருக்கமாக நட்புக் கொண்டிருந்தார். இவரது கட்டுரைகள் ‘குடி அரசு’ இதழில் தொடர்ச்சியாக வெளிவந்தன. 1924–ஆம் ஆண்டு முதல் 1962 ஆம் ஆண்டு முடிய 39 ஆண்டுக் காலம் தமிழாசிரியராகப் பணியாற்றினார். 1941 ஆம் ஆண்டு முதல் 1961 ஆம் ஆண்டு முடிய பவானி கழக உயர்நிலைப் பள்ளியின் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றினார்.

இவர் இளமை முதலே இசையில் ஈடுபாடு கொண்டவர். பள்ளியில் இசையுடன் பாடியே பாடங்கள் நடத்துவார்.

“பாடுங்கள் ஆயிரம் பாட்டு – அவை

பாட்டுக்களா வென்று பன்முறை மீட்டு”

என்று யாவர்க்கும் இசைப் புலமை வேண்டும் என்பார். தனித் தமிழ்ப் பற்று, சமுதாயச் சீர்திருத்தச் சிந்தனை, பல்துறைப் பண்புமிக்க பார்வை இவர்தம் படைப்புகளில் ஒளிர்ந்தன.

‘தமிழ் வாழ்க !’ என்னும் இவர் தம் உரைநடை மேடை நாடகம், பல்வேறு இடங்களில் நடிக்கப் பெற்றது. இவர் தம் புகழ்மிக்க கவிதை நாடகம் ‘காமஞ்சரி’, ‘சோரபின் கதை’ என்னும் ஆங்கில நூலைத் தழுவிய தழுவல் என்று அறியாவண்ணம் கொங்குநாட்டுச் சிறப்புக்கூறும் வரலாற்று நாடகமாகப் புகழ்மிக விளங்கும் பெருமையுடையது.

இந்நாடகத்தில் வரும் பரிசிலக்கணம் கொங்குநாட்டுச் செல்வம் ஆசிரியப்பாவில் அடிதோறும் “பொழிப் பெதுகைத் தொடையுடன்” பாச்சுவை மிக்கது இந்நாடகம். 1935 முதல் பள்ளிப் பாடநூல்களை எழுதி வந்தார். இவர் எழுதிய பள்ளிப் பாட இலக்கண நூல்கள், தனிச் சிறப்புடையனவாகும். புலவர் குழந்தை எழுதிய நூல்கள் பின்வருமாறு :

# தங்க. சங்கரபாண்டியன்

செய்யுள் நூல்கள் : இராவண காவியம், அரசியல் அரங்கம், நெருஞ்சிப் பழம், காமஞ் சரி, உலகப் பெரியோன் கென்னடி, திருநணாச் சிலேடை வெண்பா, புலவர் குழந்தை பாடல்.

**உரை நூல்கள்** : திருக்குறள் – குழந்தை உரை, தொல்காப்பியப் பொருளதிகாரம் – குழந்தை உரை, நீதிக் களஞ்சியம் உரை.

**இலக்கண நூல்கள் :** யாப்பதிகாரம், தொடை யதிகாரம், நன்னூல் (சூத்திரம்).

**உரைநடை நூல்கள் :** தொல்காப்பியர் காலத் தமிழர், திருக்குறளும் பரிமேலழகரும், பூவா முல்லை, கொங்குநாடு, தமிழக வரலாறு, தமிழ் வாழ்க (நாடகம்), தீரன் சின்னமலை, கொங்கு நாடும் தமிழும், கொங்குக் குலமணிகள், அருந் தமிழ் விருந்து, அருந்தமிழ் அமுது, சங்கத் தமிழ்ச் செல்வம், ஒன்றே குலம், அண்ணல் காந்தி, தமிழெழுத்துச் சீர்திருத்தம், தீரன் சின்னமலை நாடகம் ஆகியனவாகும். 1970–ஆம் ஆண்டு 'திராவிட காவியம்' என்னும் புகழ்மிக்கக் காவி யத்தை எழுதினார்.

1925–இல் பெரியார் சுயமரியாதை இயக்கத் தைத் தொடங்கினார். புலவர் குழந்தை அவர்கள் தம்மை அந்த இயக்கத்தில் இணைத்துக் கொண்டு தமிழர்களின் விழிப்புணர்வுக்காகத் தொடர்ச்சியாகப் பாடுபட்டார்.

கலைஞர் மு. கருணாநிதியின் ''முத்தாரம்'' இதழில் ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தொடர்ச்சி யாக எழுதி வந்தார்.

1938, 1948–இல் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டங்களில் மிகத் தீவிரமாகப் பங்கு கொண் டார். இந்தப் போராட்டத்தை யொட்டி 'இந்தி ஆட்சி மொழியானால்?' என்னும் ஆராய்ச்சி நூலை எழுதி வெளியிட்டார். 1946 முதல் 1950 வரை 'வேளாளன்' என்னும் இதழை நடத்தினார். இந்த ஏட்டில் சமூகச் சீர் திருத்தக் கருத்துக்களை எழுதினார்.

1948–இல் சென்னையில் நடைபெற்ற திருக் குறள் மாநாட்டில் தமிழ் மரபு பிறழாமல் திருக் குறளுக்கு உரை எழுத பெரியார் அவர்கள் ஐவர் குழு அமைத்தார். அந்தக் குழுவில் புலவர் குழந் தையும் ஒருவர்.

அருட்பிரகாச வள்ளலார் நூற்றாண்டு விழா வினை முன்னிட்டு திருவருட்பா நூலினைப் புதிய பதிப்பாக வெளியிடுவதற்கு வடலூர் வள்ளலார் மடத்தைச் சார்ந்தவர்கள் விரும்பினர். ஒழுங்காகச் சீர் பிரிக்காமலும், தவறாக அச்சிடப்பட்டிருந்த பிரதியைப் பிழைநீக்கம் செய்து சரி செய்து கொடுத்தார்.

தொடக்கப் பள்ளி ஆசிரியராக இருந்த போதே 'இராவண காவியம்' எழுதிப் புகழ் பெற் றார். காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் தடை செய் யப்பட்ட இவரின் இராவண காவியத்தை 17.5.1971 அன்று கலைஞர் கருணாநிதி தடை நீக்கம் செய்தார்.










இவரது துணைவியார் பெயர் முத்தம்மையார். இவர்களுக்கு சமத்துவம், சமரசம் என்னும் இரு பிள்ளைகள் உண்டு.

புலவருக்குப் புலவர், காப்பிய வேந்தன், இலக்கணச் செல்வர், பகுத்தறிவுச் செம்மல், நல்ல தமிழ் ஆசான், இசை வல்லுநர், நாடகப் படைப் பாளி எனத் தமிழ்கூறும் நல்லுலகத்தினரால் அழைக்கப்பட்டார்.

கொங்கு மாவீரன் தீரன் சின்னமலையின் வரலாற்றை முதன் முதலாக உலகிற்கு உணர்த் திய புலவர் குழந்தை 25.9.1972–இல் காலமானார். ●

# இம்மாத ராசி பலன்

**“என்ன நடக்கலாம் என்பதை அனுமானிப்பவன் சோதிடன்
என்ன நடக்கும் என்பதைத் தீர்மானிப்பவன் இறைவன்!”**


'ஜோதிடத் திலகம்'
**க. தில்லையம்பலம்**


**1.1.2019 அன்று கோள்கள் நிலை**

| | | | |
|---|---|---|---|
| செவ்வாய் | | | |
| | 01.1.2019 சுக்.–விருச்சிகம்<br>01.1.2019 புதன் – தனுசு<br>14.1.2019 சூரியன்– மகரம்<br>20.1.2019 புதன் – மகரம் | | ராகு |
| கேது | | | |
| சனி சூரியன் | புதன் குரு | சுக்கிரன் | சந்திரன் |

## மேஷம்



**மேஷ** ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதி வரை பற்பல தடைகள் ஏற்பட்டாலும், மாதத்தின் பிற்பாதியில் நீண்டகால எண்ணங்கள் ஈடேற வாய்ப்புண்டு. தொழில், உத்தியோகத் துறைகளில் அனுகூலம் ஏற்படும். பொருள் வரவும் ஏற்படும். செவ்வாய் 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், ஞாபக மறதிக்கு இடம் கொடுக்காதீர்கள். செவ்வாய் – ராகு – கேது – சனி முதலிய கிரகங்களின் திசா புத்திகள் தற்சமயம் உங்களுக்கு நடைமுறையில் இருப்பின் தீயவர்களால் உங்கள் பொருள்கள் திருடப்படலாம் அல்லது உங்கள் உடமைகளை நீங்களே தவற விட்டுவிடுவீர்கள்.

குரு – சுக்கிரன் இம்மாதம் 8–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், ஆடம்பரப் பொருள்கள் பின்னமாகும். மூத்திர கிரீச்ச நோய் ஏற்படும் வாய்ப்புண்டு. சிறுநீர்த் தாரையில் பிரச்சனைகள் ஏற்படலாம். வயதானவர்களுக்கு இப்பலன் ஏற்படும். சனி 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், ஏதோ ஒரு கவலை அல்லது மன பயம் உங்களிடம் காணப்படும். ராகு 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், ஓயாத அலைச்சல், பயணம் சிலருக்குத் தவிர்க்க இயலாது. 10–இல் கேது சஞ்சரிப்பதால் தொழில் துறையில் பிரகாசம் ஏற்பட சிற்சில மாதங்கள் ஆகும். இம்மாதம் சுப காரியங்களில் இறங்கலாம்.

## ரிஷபம்



**ரி**ஷப ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் காரியத் தடைகளையும் செலவினங்களையும் ஏற்படுத்தக்கூடும். எதிர்பாரத சம்பவங்களால் மனம் அல்லல்படும். மாதத்தின் பிற்பாதியில் சன்மார்க்க நெறிமுறைகளாலும், ஒன்றுக்கு மேற்பட்ட முயற்சிகளாலும் உங்கள் காரியங்களை நிறைவேற்றிக் கொள்ளலாம். செவ்வாய் லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால், வாழ்க்கைத் துணைவரால் ஒரு சிலருக்கு நன்மை ஏற்படும். ஒரு சிலருக்கு உத்தியோகஸ்தர்கள் மூலமோ, சகோதர வர்க்கத்தார் மூலமோ நன்மை ஏற்படலாம்.

7–ஆம் வீட்டில் குரு – சுக்கிரன் சஞ்சரிப்பதால், சுப காரிய முயற்சிகளில் இறங்கலாம். 8–இல் சனி சஞ்சரிப்பதால், சோதனை மிக்க காலம் என்பதால் கவனம் தேவை. தொழில், உத்தியோகத் துறைகளில் இருப்போர் பலவித இன்னல்களை அடையக்கூடும். அதுபோல் எதிர்பாராத மாற்றங்களும் ஏற்படக்கூடும். ராகு 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், துணிவே உங்களுக்கு

எக்காரியத்திலும் தேவை. தயக்கத்துடன் செய்யப் படும் காரியங்கள் தோல்வியில் முடியும். ஒரு சிலர் இல்வாழ்க்கையில் கோபதாபங்களையும் எதிர்ப்பு களையும் சந்திப்பர்.




**மி**துன ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் சிறப்பான பலன்களைக் கூற இயலாது. சூரியன் 7, 8–ஆம் இடங்களில் சஞ்சரிப்பதால், வீண் பிரச்சனைகளும், எதிர்பாராத செலவுகளும் தொழில், உத்தியோகத் துறைகளில் கஷ்டமான சூழ்நிலையும் ஏற்படக்கூடும். செவ்வாய் 10–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், தொழில் முகாந்திரமாகக் கடனோ, விவகாரமோ ஏற்பட வாய்ப்புண்டு. நண்பர் ஒரு சிலர் பகையாகக் கூடும். அதுபோல் பகைமை பாராட்டுபவர்கள் ஒரு சிலர் நண்பராகவும் கூடும். சுக்கிரன் – குரு 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், சந்ததிகளால் விவகாரம், பகைமை ஏற்படக்கூடும்.

இரண்டில் ராகு சஞ்சரிப்பதால், உங்களது தகுதிக்கு மீறிய எக்காரியத்திலும் இறங்க வேண்டாம். குறிப்பாக, முதலீடுகள் செய்வதில் கவனம் வேண்டும். தொழில் ஸ்தலத்தில் உங்களது அதிகார எல்லைக்குட்பட்டுச் செயல்பட வேண்டும். இப்பலன் செவ்வாய் 10–ஆமிடத்தில் சஞ்சரிப்பதால் ஏற்படக்கூடும். சனி 7–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், அவ்வப்போது உடல் உபத்திரவங்கள் ஏற்படும். ஆரோக்கியம் பாதுகாக்கப்பட வேண்டும். சுப காரியங்கள் ஈடேறுவது கடினம். கேது 8–இல் சஞ்சரிப்பதால் சில நேரங்களில் மன விரக்திக்கு ஆளாக நேரிடலாம்.




**க**டக ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் சனி – புதன் சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால், தொழில் துறையில் அனுகூலம் உண்டு. பிறர் சந்திப்புகளால் நன்மை ஏற்படும். உங்கள் ராசி அதிபதி சந்திரன் என்பதால், பிரச்சனைகளை அன்றாடம் தீர்த்து வைக்கும் நிலையிலேயே உங்கள் வாழ்க்கை கடந்தோடிவிடும் என்பது மரபு. தற்சமயம் பெரும்பான்மையான கிரகங்கள் உங்களுக்குச் சாதகமாக உள்ளதால், உங்களது எண்ணங்கள், இலட்சியங்கள் இந்த ஆண்டில் நிறைவடையும் வாய்ப்புண்டு. 6–இல் சனியின் சஞ்சாரம் உங்கள் வசதி வாய்ப்புகளை நிச்சயம் அதிகரிக்கச் செய்யும்.

5–இல் சஞ்சரிக்கும் குரு சுப காரியங்கள் ஈடேறும் வாய்ப்பை உண்டாக்கும். 9–ஆம் வீட்டில் செவ்வாய் சஞ்சரிப்பதால், உங்கள் ராசிக்கு நன்மையான பலன்களையே ஏற்படுத்தக்கூடும். புதன் 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், உடன் பிறந்த சகோதர வர்க்கத்தார் அல்லது இதர சொந்த பந்தங்கள் விரோதம் பாராட்டக்கூடும். உங்கள் ராசி மீது ராகு சஞ்சரிப்பதால், வயிற்று உபாதைகள், அஜீரணக் கோளாறுகள் முதலியவை ஏற்படக்கூடும். ஒரு சிலர் சரும நோயால் பீடிக்கப்படலாம். 7–இல் கேது சஞ்சரிப்பதால், மூளைச் சலவை செய்து சிலர் உங்களை வேறு பாதைக்கு மாற்றக்கூடும்.




**சி**ம்ம ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் சூரியனின் சஞ்சாரம் திருப்திகரமாகக் காணப்படவில்லை. காரியத் தடைகளும், புத்தித் தடுமாற்றமும் ஏற்படலாம். மாதத்தின் பிற்பாதியில் சூரியன் 6–இல் சஞ்சரிப்பதால் தொழில் துறையிலும் பொருளாதார விஷயங்களிலும் திருப்திகரமான பலன்கள் ஏற்படும். செவ்வாய் 8–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், வீண் வம்பு தேடி வரலாம். பிறர்மீது கோபப்பட வேண்டாம். குரு சுக்கிரன் 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் தொழில், உத்தியோகம் தொடர்பாக மாற்றங்கள் நிகழக்கூடும். உங்கள் தொழிலை அபிவிருத்தி செய்து கொள்ளலாம். வீட்டைப் புதுப்பிக்கலாம்.

புதன் 20–ஆம் தேதி வரை முடிவெடுக்க இயலாத சூழ்நிலையை உருவாக்கலாம். 21–ஆம் தேதி முதல் 6–ஆம் வீட்டில் புதன் – கேது சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால், பொருள் லாபம் உண்டு. இருப்பினும் ஒரு சிலருக்குக் காலில் பாதிப்புகள், நரம்பு சம்பந்தப்பட்ட கோளாறுகள் ஏற்படலாம். சனி 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் அடுத்த 2 வருடங்களுக்குக் குழந்தைகளைப் பற்றிய கவலையே இருந்து வரும். 12–இல் ராகு சஞ்சரிப்பதால் மறைமுக எதிர்ப்புகள் ஒரு சிலருக்கு இருந்து வரும். புதிய முயற்சிகளில் மாதத்தின் பிற்பாதியில் இறங்கலாம்.

## கன்னி



கன்னி ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் கிரக சஞ்சாரங்கள் சாதகமாக இல்லை. மாதத்தின் முற்பாதியில் 4–ஆம் வீட்டில் சூரியன் சஞ்சரிப்பதால் அலைச்சல், சுப விரயம், உடல் நலிவு முதலியவை ஏற்படலாம். மாதத்தின் பிற்பாதியில் 5–ஆம் வீட்டில் சூரியன் சஞ்சரிப்பதால் ஸ்திரமான நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியாது. காரியத் தடைகள், அரசாங்கக் காரியமாகச் செலவு, பீடை ஏற்படக்கூடும். செவ்வாய் 7–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் கணவன் – மனைவியிடையே வீண்சச்சரவு, வாக்குவாதம், கைகலப்பு ஏற்படக்கூடும்.

குரு 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் போட்டி, பந்தயங்களில் வெற்றி காண்பது அரிது. ஹேஷ்ய பேர நடவடிக்கைகளில் ஆர்வம் காட்ட வேண்டாம். சுக்கிரன் 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் உங்களின் உடல் சார்ந்த இச்சைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டாம். சனி 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் குடும்பத்தில் குறிப்பாக கூட்டுக்கூடும்பமாக இருப்பின் பிரச்சனைகள் எழ வாய்ப்புண்டு. ராகு 11–இல் சஞ்சரிப்பதால் மூன்றாவது மனிதர்களின் உதவியால் காலத்தைக் கடத்த வேண்டும். திருமணம் முதலிய சுப காரியங்களுக்கு ஏற்ற காலமல்ல.

## துலாம்



துலாம் ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் பற்பல நன்மைகளை வழங்கக்கூடும். தனம், பொருள் வரவு ஏற்படும். தொழில், உத்தியோகத் துறைகளில் ஆதாயம் ஏற்படும். முயற்சிகள் பலிதமாகும். பெரியோர் தொடர்புகள் நன்மை பயக்கும். மாதத்தின் பிற்பாதியில் சற்று உடல் நலம் குன்றும். செலவினம் உண்டு. பெரியோர்களுக்கு ஆகாது. சனி 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதாலும் குரு 2–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதாலும் வசதிகள் கூடும். தன லாபம் உண்டாகும், குடும்பத்தில் மகிழ்ச்சி ஏற்படும்.

சுக்கிரன் 2–இல் சஞ்சரிப்பதால் இனிமையாகப் பேசிக் காரியம் சாதித்துக் கொள்வீர்கள். ராகு 10–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் இடமாற்றம், தொழில் மாற்றம் சிந்தனையளவிலேயே முற்றுப் பெற்றுவிடும். 4–இல் கேது சஞ்சரிப்பதால் குடும்பத்தில் ஏதேனும் அதிருப்திகள் வந்தகலும். திருமணம் முதலிய சுப காரியங்களில் தாராளமாக இறங்கலாம். செவ்வாய் 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் யார் மீதேனும் வழக்குத் தொடர எண்ணமிருந்தால் தொடரலாம், வெற்றி நிச்சயம். புதன் 20–ஆம் தேதி வரை 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் ஏற்கனவே செய்த தவறுக்கு வருந்துவீர்கள்.

## விருச்சிகம்



விருச்சிக ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் தொழில்வழியில் தனலாபம் உண்டாகும். ஒரு சிலருக்கு வயது முதிர்ந்தவர்கள் சந்திப்பால் எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகள் ஏற்படலாம். மாதத்தின் பிற்பாதியில் தொழில் உத்தியோக வழிகளில் நன்மையும், ஞானியர் உறவும், முயற்சிகள் பலிதமும் ஏற்பட வாய்ப்புள்ளது. செவ்வாய் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் ஒரு சில விஷயங்களில் உங்களது முடிவுகளை மாற்றிக்கொள்வீர்கள். குழந்தைகள் கோப தாபங்களை ஏற்படுத்தக்கூடும். ராசி மீது குரு அமர்ந்து சஞ்சரிப்பது உங்கள் ராசிக்கு நன்மையானதே. கௌரவம் உயரும்.

சுக்கிரன் இம்மாதம் குரு சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால் மனமகிழ்ச்சி கூடும். சனி 2–இல் சஞ்சரிப்பதால் வரவும், செலவும் சமமாக இருக்கும். காசு, பணம் கையில் தங்குவது கடினம். ராகு, கேதுக்கள் அனுகூலமாகச் சஞ்சரிப்பதால் அலட்டிக்கொள்ள ஏதுமில்லை. வாக்கில் சனி இருப்பதால், அறியாமல் உங்கள் வாயிலிருந்து வெளிப்படும் வார்த்தைகள் உங்களுக்கு எதிர்மறையான பலன்களை ஏற்படுத்தும். ரிஷப ராசியில் ஜனன ஜாதகத்தில் குரு இருந்தால் கல்யாணம் நடக்கும்.

## தனுசு



தனுசு ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதி வரை சூரியன் – சனி சேர்க்கை பெற்று ராசி மீது சஞ்சரிப்பதால், உடல் உபாதைகள், உஷ்ணம் சம்பந்தப்பட்ட, நரம்பு சம்பந்தப்பட்ட பாதிப்புகள் ஒரு சிலருக்கு ஏற்படலாம். காரியத் தடைகளையும் சூரியன் – சனி ஏற்படுத்தக்கூடும். புதன் 20–ஆம் தேதி வரை ராசி மீது சஞ்சரிப்பதால் தொழில், உத்தியோகத் துறைகளில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் சூரியன் – கேதுவுடன்

சேர்க்கை பெற்று இரண்டாம் வீட்டில் சஞ்சரிப்பதால் தகப்பன் வர்க்கத்தார் மூலம் சிலர் பலன் பெறக்கூடும். ஒரு சிலருக்குக் கண்களில் பாதிப்பு ஏற்படக்கூடும். சிறு குழந்தைகளுக்கு அம்மை, காய்ச்சல் முதலியவை ஏற்படக்கூடும்.

4–ஆம் வீட்டில் செவ்வாய் சஞ்சரிப்பதால், பெரியோர் பேச்சை மீறி நடக்கக்கூடிய சூழ்நிலை சிலருக்கு ஏற்படும். சுக்கிரன் – குரு 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் பெண்கள் முகாந்திரமாக நன்மைகள் ஏற்படும். 8–இல் ராகு சஞ்சரிப்பதால், போக்குவரத்துகளில் இன்னும் சில மாதங்கள் கவனம் செலுத்தி வரவேண்டும். புதன் 20–ஆம் தேதிக்குப் பின்னர் வாழ்க்கைத் துணைவரால் அனுகூலத்தை ஏற்படுத்தும். புது முயற்சிகள் இம்மாதம் வேண்டாம்.

## மகரம்



**ம**கர ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் சுபச்செலவு, அத்தியாவசியச் செலவு, அலைச்சல், அரசாங்க நிந்தனை ஏற்படலாம். மாதத்தின் பிற்பாதியில் உடல்நலிவு, உஷ்ண பீடிதம், சிரசு ரோகம் முதலியவை ஏற்படலாம். மற்றபடி சூரியன் இம்மாதம் நற்பலன் களைக் கொடுக்க வாய்ப்பில்லை. செவ்வாய் 3–ஆம் வீட்டில் சாதகமாகச் சஞ்சரிப்பதால் உத்தி யோகஸ்தர்கள் மேன்மை அடைவர். சுப கிரக திசாபுத்தி நடைபெறுபவர்களுக்கு பூமி இலாபம், சகோதர வர்க்கத்தாரால் நன்மை உண்டாகக் கூடும். பதவி உயர்வுக்கும் வாய்ப்புண்டு.

சனி 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் தொழில் துறையிலோ, வீடு, வாசல் கட்டுவதிலோ முதலீடுகள் செய்யலாம். உடனடிப் பலன்கள் ஏற்படாவிட்டாலும் பிற்காலத்தில் நன்மை ஏற்படும். குரு 11–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் பிறரது வசீகரமான பேச்சால் ஏமாந்து விடாதீர்கள். தாய்வழி உறவினர்களுக்கும் நல்லதல்ல. சுக்கிரன் 11–இல் சஞ்சரிப்பதால், பெண்களால் லாபம் உண்டு. ஆடம்பரப் பொருள் ஒன்று வாங்கலாம். புதன் 20–ஆம் தேதி வரை 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் உங்கள் கட்டுப்பாட்டில் உள்ள பணியாளர்களைக் கண்காணிப்பது நல்லது. 20–ஆம் தேதிக்குப் பின்னர் சுறுசுறுப்பாகச் செயல்படுவீர்கள்.

## கும்பம்



**கு**ம்ப ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் சூரியன் லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால் பொருள் வரவு, தொழில்வழி நன்மை ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் விரயம், சுபச் செலவு ஏற்படும். சாதுக்கள், சந்நியாசிகளிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அரசாங்கக் காரியங்களிலும் கவனம் வேண்டும். குழந்தைகளைப் பற்றிய கூடுதல் அக்கறை காட்ட வேண்டும். குரு 10–இல் சஞ்சரிப்பதால் தொழில் வழியில் நாணயக் குறைவு ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். உணர்ச்சிவசப்பட்டு வேலையை விட்டுவிட வேண்டாம். தொழில்வழிப் பிரயாணங்களை மேற்கொள்ளலாம்.

சுக்கிரன் 10–இல் சஞ்சரிப்பதால் பெண்களால் தொழில் துறையில் சிக்கல் வரலாம், கவனம் தேவை. ராகு 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் உணவு விஷயங்களில் கவனம் வேண்டும். வயிற்று உபாதைகளுக்கு இடம்கொடுக்க வேண்டாம். சூரியன் – சனி – புதன் 11–ஆம் வீட்டில் 20–ஆம் தேதி வரை ஒப்பந்தக்கால அடிப்படையில் பணி செய்பவர்களுக்கும், கலை, இலக்கிய ஆர்வலர்களுக்கும் நன்மையை ஏற்படுத்தும். செவ்வாய் 2–இல் சஞ்சரிப்பதால் சில தண்டச் செலவுகள் உண்டு.

## மீனம்



**மீ**ன ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் சாதகமாகச் சஞ்சரிப்பதால் தொழில், உத்தியோகத் துறைகளில் ஆதாயம் உண்டு. பெரியோர் நட்பால் நன்மை ஏற்படும். வாழ்க்கைத் துணைவர், தொழில் வழி நண்பர்கள், ரத்த சம்பந்தம் உடைய உறவினர்களால் ஆதாயம் ஏற்படும் வாய்ப்பும் சிலருக்கு உண்டு. வழக்கு விவகார ஜெயம் சிலருக்கு உண்டாக வாய்ப்புண்டு. செவ்வாய் உங்கள் ராசி மீது சஞ்சரிப்பதால், கோபம் தலைக்கேறும். பொறுமை தேவை. ரண காயம் ஏற்பட்டு ஒரு சொட்டு ரத்தமாவது வெளியாகும், எச்சரிக்கை தேவை.

குரு 9–இல் இருப்பதால் சுப காரியங்களில் இறங்கலாம். கடந்த ஆண்டு பட்ட இடர்ப்பாடுகளிலிருந்து மீண்டு விடுவீர்கள். முடக்கம் பெற்ற காரியங்களில் இனி உத்வேகம் பிறக்கும். சனி 10–இல் சஞ்சரிப்பதால் பணியாளர்கள் விஷயங்களில் இலகுவாக நடந்து கொள்ளுங்கள். மேலும், புதன் 10, 11–ஆம் இடங்களில் சஞ்சரிப்பதால் இம்மாதம் எல்லா வகையிலும் அனுகூலமான பலன்களே நடைபெறும். ராகு 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் புதுமையாகச் சிந்தித்துச் செயல்படுவீர்கள். காலப்போக்கில் பெரிய அளவில் நன்மைகள் அடைவீர்கள். ●

ஆன்மிகம்

புலவர் க. சுகுமாரன்

# தைப்பூசத் திருவிழா

**தை**ப்பூசம் என்றால் அனைவரது நினைவில் வருவன இரண்டு இடங்கள். ஒன்று வடலூர். மற்றது பழநி. வடலூரில் தைப்பூச சோதி தரிசனக் காட்சியும் பழநியில் தைப்பூசக் காவடிச் சிறப்பும் பெருமைக்குரியன.



மாதந்தோறும் வரும் பூச நட்சத்திர நாளன்று வடலூரில் தரிசனம் உண்டெனில், அது தைப்பூசத்திற்கே உரிய பெருமை பெற்றது. இந்த வகையில், இவ்விரு ஊர்களிலும் கொண்டாடும் தைப்பூசக் காரணங்கள் மிகச் சிறப்புக்குரியன.

*1873*–ஆம் ஆண்டுக்கு நிகரான ஸ்ரீமுக ஆண்டு ஐப்பசித் திங்கள் 7–ஆம் நாள் புதன்கிழமை காலையில் வடலூர் மேட்டுக்குப்பம் சித்தி வளாகத்தில் இருந்த அன்பர்களுக்கு வள்ளலார் பேருபதேசம் செய்தார்.

தொடர்ந்து கார்த்திகைத் திங்களில் தம் அறைக்குள் இருந்த விளக்கை அறைக்கு வெளியே வைத்து அன்பர்களிடம், “உங்களுடைய காலத்தை வீணாகக் கழிக்காமல், ‘நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து’ என்ற பாசுரத்தில் கண்டபடி இச்சோதியில் இறைபாவனையைச் செய்யுங்கள்” என்று கூறி அறைக் கதவை மூடிக் கொண்டு இறைவனோடு இரண்டறக் கலப்பதற்கான சாதனையில் ஈடுபட்டார்.


வள்ளற்பெருமான்

இந்நிலையிலேயே மார்கழி மாதமும் கழிய, தைத் திங்கள் வந்ததும் 19–ஆம் நாள் வெள்ளிக்கிழமை பூச நட்சத்திரத்து நிறைநாள் காயும் பௌர்ணமியன்று அறையை விட்டு வெளியில் வந்து அன்பர்களிடம் “இன்று உடம்பை மறைத்துக் கொள்ளப் போகிறேன். அருட்பெருஞ் சோதி ஆண்டவரை வழி

பட்டு உய்யுங்கள்" எனக் கூறியபடி, கதவைத் திருக்காப்பிட்டவாறு சோதியில் இரண்டறக் கலந்தார்.

இதை உறுதிப்படுத்துமாறு அவரது அருட்பாவின் இறுதிப் பாடல் உள்ளதாக ஊரன் அடிகள் எழுதியுள்ள 'அடிகள் வரலாறு' எனும் நூலில் (3–ஆம் பதிப்பு பக். 119–120) காணப்படுகிறது.

சோதியை வழிபட்டவர் சோதிமய மானார். ஆண்டவனைச் சோதி வடிவாகக் கண்டு வழிபடுவது இந்தியக் கோட்பாடு. வடநாட்டு வேள்விச் சடங்கில் நெருப்பு வடிவமாகக் கடவுளைப் போற்றுவது வழக்கம். சிவனுக்குச் சூரியனும் சந்திரனும் இரு கண்களாயினும், அக்கினியை நெற்றிக் கண்ணாகக் கூறுவது வழக்கமாகும்.

ஒளிமயமான இம்மூன்றும் இருளை நீக்கி வெளிச்சத்தைத் தரத்தக்க புற இருளைப் போக்கும். இவ்வெளிச்சத்தைப் போல அறியாமையாகிய அக இருளிலிருந்து ஆன்மா, இறைவனாகிய வெளிச்சத்தில் ஐக்கியமாகும்போது, உய்திப் பெறும் என்பது தத்துவமாகும். இந்த அடிப்படையில் தான் வள்ளலார், 'அருட்பா அருள் விளக்க மாலை'யில் ஆண்டவனை "அருள் விளக்கே, அருட் சுடரே, அருட்சோதிச் சிவமே" என்று கூறி வழிபடுகிறார். "அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி" என்பதே வள்ளலாரின் தாரக மந்திரம்.

மாணிக்கவாசகர் ''சோதியே, சுடரே, சூழ்ஒளி விளக்கே" எனப் பாடி இறைவனைக் கண்டார். வள்ளலார் விளக்கு, சுடர், சோதி என்றார். இருவரும் ஒரே பரம்பொருளைச் சுட்டுவதாயினும் கூறும் முறையில் வேறுபாடன்றிக் கருத்தில் மாறுபாடில்லை. விளக்கு – சிறு வெளிச்சம். சுடர் – பெருவிளக்கு. சோதி – அகண்ட பெருவிளக்கு. அகண்ட பெருவிளக்கைப் பேரொளி எனலாம். இப்பேரொளியாய் ஐக்கியமானவர் வள்ளலார்.

அவரது வாழ்க்கையின் தொடக்க நிலையில் விளக்குதான் அவரைப் படிப்படியே பேரொளி வாழ்க்கைக்கு அடையாளம் காட்டி அழைத்துச் சென்றது. அவர் கருங்குழி என்ற ஊரில் வாழ்ந்தபோது, தண்ணீரில் விளக்கெரித்துக் காட்டினார். இதனைச் "சென்னை நண்பர்களே செப்பக் கேளீர். தண்ணீர் விளக்கும் எரிந்தது சந்நிதியின் முன்னே" என்று "அருள்நிலை விளக்கம்" என்ற பகுதியில் பாடியுள்ளார்.

மேலும் அவர் திருமணம் கொண்ட முதல் இரவில் விளக்கொளியில் திருவாசகம் படித்து உள்ளொளியைப் பெருக்கிக் கொண்டார் என்பது அவரது வரலாற்றின் முக்கியச் செய்தியாகும். இப்படியாக விளக்கிலிருந்து அறிவுச்சுடரை விசாலப்படுத்திய அளவில் வள்ளலார் இறுதியில் சோதிப் பிழம்பானார். இந்த அனுபவத்தைத் தான் அவர் குறிப்பாக ஆண்டவனை "விளக்கே சுடரே! சோதியே!" என்றார்.

மணிவாசகர் தில்லையம்பலச் சோதியில் ஐக்கியமானாலும் முதன் முதலில் அவர் இறைவனைத் திருப்பெருந்துறையில் சோதிமயமாகப் பார்த்தார். 'செந்தழல் புரை திருமேனியும் காட்டி' என்பது அவரது வாக்கு. மேலும் குதிரை வாங்க வந்த வாதவூரரைச் சோதி தரிசனம் காட்டி ஆட்கொண்ட அற்புதத்தோடே ஆண்டவன் அவரைத் தன்னுள் ஐக்கியப் படுத்திக் கொண்டாலும் "கோலமார் தரு பொதுவினில் வருகெனக்கூறி என்னை இருப்பதாக்கினன்" என முறையே கீர்த்தித் திருஅகவலிலும் (128) திருவண்டப் பகுதியிலும் (179) மணிவாசகர் கூறுவதிலிருந்து அவர் சோதியிலிருந்து தம் வாழ்வைத் தொடங்கினார் எனத் தெரிகிறது.

இப்படியாக அவரவர் வாழ்வின் அனுபவத்திற் கேற்ப இறைவனை அனுபவிக்கும்போது மணிவாசகர் சோதி, சுடர் விளக்கு என்றது ஒரு வகையான இறங்கு முறைக் குறிப்பு.

வள்ளலார் விளக்கு, சுடர், சோதி என்றது ஒரு வகையான ஏறுமுறைக் குறிப்பு. வர்ணனையின் போது பாதாதி கேசம், கேசாதி பாதம் என்பார் களே அதைப் போல இவற்றைக் கொள்ளலாம்.

மேற்படியான இரு வேறு வகைப்பட்ட கருத் தின் பொருத்தத்தைக் கார்த்திகை தீபக் காட்சி யோடும், கந்தப்பெருமான் அவதாரத்தோடும் இணைத்து உணரலாம்.




கார்த்திகை தீபத் திருநாளில் வீடு கள்தோறும் பெண்கள் விளக்கேற்று வர். அன்று மாலையில் கீழ்வானத்தில் முழு நிலவான சுடர் தோன்றும். அதே நேரத்தில் திருவண்ணாமலை யில் சுடர் சோதி என்ற படிப்படியான நிலையில்தான் வடலூர் வள்ளற்பெரு மான் தைப்பூசத்தின் முழு நிலவான வான்சுடர் தோன்றும் நாளில் விளக் கொளியில் கண்டு தரிசிக்கிறோம்.

இவ்வுண்மையைக் கந்தபுராணம் முருகனின் அவதாரமாகக் காட்டு கிறது.

"அருவமும் உருவம் ஆகி
அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப்
பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும்
கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு
உதித்தனன் உலகம் உய்ய"

சிவபெருமானாகிய சோதிப் பிழம்பு தன் நெற்றியின் அக்கினிச் சுடரிலிருந்து முருகனாகிய தீப்பொறியை உண்டாக் கியது. இதில் சோதியும் சுடரும் தீப்பொறியும் ஒன்றே. இந்த முரு கனாகிய பொறிதான் அடியார் உள்ளத்தில் "மரு வாய், மலராய், மணியாய், ஒளியாய்" உள்ளான். இங்கே கூறிய ஒளியை மணியின் ஒளியாகவும் விளக்கின் ஒளியாகவும் கொள்ளலாம்.

இப்படி, சோதிக் கும் முருகனுக்கும் தொடர்பிருப்பதால்தான் "தை பிறந்தால் வழி பிறக்கும்" என்ற நம்பிக்கையில் உத்தராயணத் தொடக்கமாகிய தைத் திங்கள் முழுநிலா நாளை முருக னோடு சேர்த்துக் கொண்டாடும் வழக்கம் ஏற்பட்டது எனலாம்!

மேலும் இத் தைப் பூசத்தன்றுதான் அன்னை உமாதேவி முருகனுக்கு வேல் தந்து தாரகனைக் கொன்று வர அனுப்பியதாகவும், தேவலோக ஞானாசிரியனாகிய வியாழ பகவா னிடம் (பிரகஸ்பதி) முருகன் ஞான உபதேசம் பெற்றுப் பண்டிதனாக ஆனான் என்றும் பழநித் தலபுராணம் கூறுகிறது. இதனையே "ஞானபண்டித சாமீ நமோ நம" என்றார் அருண கிரியார். அறிவுத் தெளிவே (பிர காசம்) ஞானம். அதன் விளக்கமே நிறைமதி நன்னாள். அதைப் பெற முயலும் கொண்டாட்டமே தைப்பூசப் பெருவிழாவாகும்.



கவிஞர் இணங்கனூர் தமிழரசு வள்ளல்

# செதுக்கிடுவோம்!

பெண்ணுக்குக் கற்புநெறி சக்தியாகும்
பேணுகின்ற மொழிப்பற்றே பக்தியாகும்
மண்புழுதான் உழவனுக்கு நண்பனாகும்
மரியாதை மனிதனுக்கு அன்பனாகும்
கண்ணுக்கு வெளிச்சந்தான் பார்வையாகும்
காதினுக்குத் தெளிவொலியே கோர்வையாகும்
பண்ணைக்கு நீர்வளமே உயிர்மூச்சு
பைந்தமிழே பாரினிலே உயர்பேச்சு!

தெங்கிளநீர் தாகநீக்கி, குளிர்ச்சியன்றோ
தெளிவுரையும் குழந்தைக்கு வளர்ச்சியன்றோ
பொங்கல்தான் தைத்திங்கள் பொருளாகும்
புதுக்குதலே புத்துணர்வின் அருளாகும்
பங்கென்றும் உடன்பிறப்பின் சொத்துத்தானே
பாங்கென்றும் தமிழினத்தின் வித்துத்தானே
சங்குதனைச் சுட்டாலும் வெண்மையன்றோ
சந்தனம்போல் தமிழ்மணக்கும் உண்மையன்றோ!

கழிவுநீரில் கழுவினாலே பிணிபற்றும்
கடமையினைச் செய்தால்தான் பணிமுற்றும்
சலிக்காத மணலினிலே கட்டினாலே
சரியாதோ கட்டடமும் தட்டினாலே
விழிக்காமல் பகலெல்லாம் தூங்கலாமோ
வெற்றிதான் இல்லையென்று ஏங்கலாமோ
மொழியார்வம் தமிழனுக்குத் தன்மையன்றோ
முழுமூச்சாய்ப் பாடுபட்டால் நன்மையன்றோ!

குமுகாயம் செழித்திடவே உழைக்கலாமே
குலவுகின்ற கலப்பினையே கலைக்கலாமே
அமுதம்தான் யாருக்கும் ஊட்டமன்றோ
அகந்தன்னில் புண்பட்டால் வாட்டமன்றோ
இமையன்றோ கண்ணுக்குப் பாதுகாப்பு
இனிமையன்றோ திருமதிக்கு வளைகாப்பு
கமகமக்கும் நம்தமிழைப் புதுக்கிடுவோம்
கலையெனவே தமிழினத்தைச்
செதுக்கிடுவோம்!

# புத்தக மதிப்பீடு








## சட்டப்பேரையில் அருட்செல்வர்

தொகுப்பாசிரியர் : கே. ஜீவபாரதி, வெளியீடு: அன்னம் பதிப்பகம், எண் 1, நிர்மலா நகர், தஞ் சாவூர் – 613 007, பக். : 248, விலை ரூ. 200/–, செல் : 94431 59371.

**ச**மூகத்திற்குத் தொண்டு செய்ய எத்தனையோ வழிமுறைகள் இருந்தாலும், அரசாங்கத்தின் ஓர் அங்கமாக இருந்து மக்கள் சேவை ஆற்றும்போது முழு அளவில் சுதந்திரமாகப் பணியாற்ற முடியும். அவ்வாறு தொடர்ந்து 15 ஆண்டுகள் (1952 – 67) பொள்ளாச்சி சட்டமன்ற உறுப்பினராக இருந்து பல்வேறு நலத் திட்டப் பணிகள் செய்தவர் அருட்செல்வர் நா. மகாலிங்கம் அவர்கள். அரசுத் திட்ட செயல்பாடுகளை நடைமுறைப் படுத்தும் பொருட்டு தமிழக சட்டமன்றத்தில் மான்யக் கோரிக்கைகள் மீது நடந்த விவாதங்களின் போது அவர் ஆற்றிய உரைகள் ஏராளம்.

கல்வி, நதிநீர் இணைப்பு, தொழில் வளர்ச்சி, நீர்ப்பாசனம், வேளாண் அபிவிருத்தி, பஞ்சாயத்துகளுக்கான அதிகாரம், வேலைவாய்ப்பு – இப்படி இன்னும் பல வளர்ச்சித் திட்டங்கள் குறித்துச் சட்டமன்றத்தில் அவர் ஆற்றிய உரைகளின் தொகுப்பே ‘சட்டப்பேரவையில் அருட்செல்வர்’ எனும் இந்நூல். இது இரண்டாவது பதிப்பு. எழுத்தாளர் கே. ஜீவபாரதி கால வரிசைப்படி இந்நூலை அழகாகத் தொகுத்துள்ளார். அரசியலாளர்கள், பொருளாதார நிபுணர்கள், அரசுத் திட்ட நிபுணர்கள் ஒவ்வொருவரிடமும் இருக்க வேண்டிய நூல் இது.

## நூலகத்தால் உயர்ந்தேன்

ஆசிரியர் : கவிஞர் ஆலந்தூர் கோ. மோகனரங்கன், வெளியீடு : வசந்தா பதிப்பகம், 26, குறுக்குத் தெரு, சோசப் குடியிருப்பு, ஆதம்பாக்கம், சென்னை – 88, பக். 1096, விலை ரூ. 1200/–, செல் : 9380417307.

**பொ**துவாகத் தன் வரலாறு நூலில், தம்மைப் பற்றியும், தம் குடும்பத்தைப் பற்றியுமான செய்திகளே அதிகம் இடம்பெறும். ஆனால், நூலாசிரியர் ஆலந்தூர் கோ. மோகனரங்கன் சற்று வித்தியாசமாக, 1096 பக்கங்களில் குடும்ப உறவுகள் பற்றிய செய்திகளைக் குறைந்த பக்கங்களிலும், ஆன்றோர்கள், சான்றோர்கள், தமிழறிஞர்கள், அரசியலாளர்கள், கலை வல்லுநர்கள் எனப் பல்துறை வல்லுநர்களுடனான சந்திப்புகள், தொடர்புகள் பற்றிய செய்திகளை அதிகப் பக்கங்களிலும் பதிவு செய்திருப்பது, தமிழ், தமிழ்ச் சமூகத்தின் மீது அவர் கொண்டுள்ள அக்கறையைக் காட்டுகிறது. நூலகப் பணியிலிருந்து கொண்டு அவர் ஆற்றிய – ஆற்றிவரும் இலக்கியப் பணிகள் குறிப்பிட்டுச் சொல்லக் கூடியனவாகும். மொத்தம் 581 பதிவுகள்.

நாமக்கல் கவிஞர், மறைமலை அடிகள், கி.ஆ.பெ., ராஜாஜி, அண்ணா, பாரதிதாசன், சாண்டில்யன், சுரதா, எம்.ஜி.ஆர்., சிவாஜி, கா.ஸ்ரீ.ஸ்ரீ., அழ.வள்ளியப்பா, சுத்தானந்த பாரதியார், எம்.ஆர். ராதா என இன்னும் பல்துறை வல்லுநர்களுடனான இந்நூலாசிரியரின் சந்திப்புகள், தொடர்புகள், நினைவலைகள் யாவும் படிப்பவர் மனதைக் கவரும். தன் வரலாறு நூல் எழுதுபவர்களுக்கு ஆலந்தூர் கோ. மோகனரங்கன் நூல் ஒரு சிறந்த வழிகாட்டி நூலாக விளங்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## சித்திரக்குள்ளன் செய்த வேலை

ஆசிரியர் : கவிஞர் சென்னிமலை தண்டபாணி, வெளியீடு : விஜயா பதிப்பகம், 20, ராஜ வீதி, கோவை – 641 001, பக். 88, விலை ரூ. 75/–, போன் : 0422–2382614.

**எ**ழுத்தும் பேச்சும் மற்றவர்களுக்குப் பயன் மிக்கதாக இருக்க வேண்டும். அதிலும் குழந்தைகள் மனதில் ஆழ விதைக்கப்படும் பயன்மிகு கருத்துகள் அவர்களுக்கு நீண்ட பலனைத் தரும். குறிப்பாகக் கதைகள் மூலம் சொல்லப்படும் கருத்துகள் அவர்கள் மனதில் என்றென்றும் நிலைத்திருக்கும். அவ்வகையில், நூலாசிரியர் கவிஞர் சென்னிமலை தண்டபாணி, சிறு சிறு கதைகள்

மூலம் நல்ல நல்ல கருத்துகளைக் குழந்தைகள் மனதில் ஆழப் பதியுமாறு சொல்லியுள்ளார். கற்பனையும் உண்மையும் கலந்த இக்கதைகள் விளையாட்டுக் கதைகளாக இல்லாமல், விசய ஞானமுள்ள கதைகளாக உள்ளன.

இயற்கையை நேசித்தல், மரம் வளர்த்தல், தண்ணீர்ச் சிக்கனம், சுற்றுச்சூழல் பாதுகாப்பு, சிறுதானிய உணவு, சேமிப்பின் அவசியம், பெரியோர் நட்பு, பாலிதீன் பை சீர்கேடு என்று விழிப்புணர்வூட்டும்படியான இக்கதைகள் குழந்தைகளுக்கு மட்டுமல்லாமல், சிறியவர், பெரியவர் அனைவருக்குமான பயன்மிகு கதைகள், இந்நூலில் உள்ள 14 கதைகளும் பிரபலமான "பொம்மி" சிறுவர் இதழில் வெளிவந்து அனைவரின் வரவேற்பைப் பெற்ற கதைகளாகும்.

## அவன்தாள் அடைந்த அறுபத்துமூவர்

ஆசிரியர் : எஸ்.கே. பழனிசாமி, வெளியீடு : நந்தினி பதிப்பகம், 169, 6–வது வீதி தொடர்ச்சி, காந்திபுரம், கோவை – 12. பக். : 272, விலை ரூ. 200/–, செல் : 9361149000.

**"தொ**ண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே" என்னும் அவ்வைப் பிராட்டியாரின் திருவாக்கிற்கேற்ப, தெய்வச் சேக்கிழார் அருளிய பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்தில் போற்றப்படும் அறுபத்துமூன்று நாயன்மார்களைப் பற்றிய விவரங்களின் அடிப்படையில் இந்நூல் ஆசிரியர் அவ்வடியார் பெருமக்கள் அவதரித்து, தொண்டு புரிந்து, முக்திபெற்ற தமிழ்நாடு, ஆந்திரா, கர்நாடகா, கேரளா ஆகிய மாநிலங்களில் உள்ள அனைத்துத் திருத்தலங்களுக்கும் சென்று வந்து ஒரு சிறு வரலாற்றுக் குறிப்பு மற்றும் திருத்தல வழிகாட்டி நூலாக 'அவன்தாள் அடைந்த அறுபத்துமூவர்' எனும் தலைப்பில் உருவாக்கியுள்ளார்.




ஒருசில நாயன்மார்களின் அவதாரத் தலங்களும் வரலாறுகளும் ஆய்வுக்கும் ஆராய்ச்சிக்கும் உட்பட்டதெனத் தெரிவிக்கும் விவரங்கள் தவிர, அடியார் பெருமக்கள் அனைத்து நாயன்மார்களின் திருத்தலங்களுக்கும் சென்று தரிசிக்க வசதியாக இது ஒரு திருத்தல வழிகாட்டி நூலாகும்.

– எம்.எஸ்.

# ஐராவதம் மகாதேவன் மறைவு !



**1953**–இல் இந்திய ஆட்சிப் பணியில் சேர்ந்து, அதன்பின் மத்திய அரசு மற்றும் தமிழக அரசுத் துறைகளில் பல்வேறு பதவிகளை வகித்து, 1987–இல் 'தினமணி' நாளேட்டின் ஆசிரியராகப் பொறுப்பேற்று, பின்பு அதிலிருந்து விருப்பஓய்வு பெற்று, கல்வெட்டு, எழுத்தியல் ஆய்வில் ஆர்வம் கொண்டு பணியாற்றியவர் ஐராவதம் மகாதேவன்.

சிந்துசமவெளி நாகரிக எழுத்துப் படிவங்கள் பற்றிய அவருடைய ஆய்வு குறிப்பிடத் தகுந்ததாகும். இதற்காகவே ஐம்பது ஆண்டுகளைச் செலவிட்டிருக்கிறார். சிந்து சமவெளி, தமிழ் பிராமி எழுத்துகளுக்கிடையே நெருங்கிய தொடர்புள்ளது என்பதைத் தமது ஆய்வில் நிறுவினார்.

அதாவது சிந்துவெளிக் குறியீடுகள், தமிழ் பிராமிக்கும் வேத காலத்திற்கும் முற்பட்ட திராவிட மொழிக் குடும்பத்தின் முன்னோடி எழுத்து வடிவங்கள் என்பதை அந்த ஆய்வில் வெளிப்படுத்தியவர் ஐராவதம் மகாதேவன். தமிழ் எழுத்து, தமிழ்ப் பண்பாடு ஆகியவற்றின் தொன்மையை நிறுவிடும் சான்றுகளாக அவை உள்ளன.

ஹார்வர்டு பல்கலைக்கழகத்துடன் இணைந்து பண்டைய தமிழ் எழுத்தியல் பற்றிய ஆராய்ச்சியை மேற்கொண்ட அவர், இந்திய வரலாற்றாய்வாளர் ரோமிலா தாப்பருடன் நெருங்கிய தொடர்பு கொண்டு ஆராய்ச்சிகளை மேற்கொண்டார்.

தமிழ் பிராமிக் கல்வெட்டு ஆய்வு பற்றித் தமிழகம் மட்டுமல்லாமல், பிற மாநிலங்களுக்கும் சென்று கள ஆய்வு நடத்தியவர். தமிழகத்திலுள்ள அனைத்து மலைகள், குகைக் கல்வெட்டுகளையும் தொகுத்து நூலாக அவர் வெளியிட்டது, தொல்லியல் ஆய்வாளர்களுக்குப் பெருந்துணையாக அமைந்துள்ளது.

அப்படிப்பட்ட தலைசிறந்த கல்வெட்டு, எழுத்தியல், தொல்லியல், மொழியியல் ஆய்வாளரான ஐராவதம் மகாதேவன் சென்ற நவம்பர் 26–ஆம் தேதி மறைந்தது தமிழ்ச் சமூகத்திற்கும், தமிழ் மொழி ஆய்வுலகத்திற்கும் ஒரு பெரிய இழப்பு என்றே சொல்லலாம். அவருடைய ஆன்ம சாந்திக்கு எல்லாம்வல்ல அருட் பெருஞ்சோதி ஆண்டவரை 'ஓம் சக்தி' பிரார்த்திக்கிறது.

– (ஆ–ர்)

எஸ். கோகுலாச்சாரி

சிறுகதை

# அப்பா



வீட்டில் நுழைந்தவுடன் கீதா சொன்னாள்.

''ஏங்க... உங்க தம்பி போன் பண்ணார். மாமாவுக்குச் சீரியஸா இருக்காம். கடலூர் ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்காங்களாம்.''

எனக்குப் பகீரென்றது.

உட்காரக்கூட இல்லை. உடனே தம்பிக்குப் போன் செய்தேன். இரண்டு மூன்று தரம் ரிங் சென்றது. எடுக்கவில்லை. எனக்கு இருப்பு கொள்ளவில்லை.

''இந்தாங்க காபி. சாப்பிடுங்க...'' என்றாள் கீதா.



''மாமாவுக்கு ஒண்ணும் ஆகாது. கவலைப் படாதீங்க'' என்றாள்.

மணி அடித்தது. தம்பிதான் என்று பார்த்தேன். ஆபிஸிலிருந்து சிவராமன்.

''சார்... நாளைக்குக் கேம்ப் போகணுமாம். மேனேஜர் சொல்லச் சொன்னார். வீட்ல இருங்க. ஏழு மணிக்கு பிக்–அப் பண்ணிக்கிறாராம்.''

''சார்... அநேகமா நாளைக்கு ஊருக்குப் போக வேண்டியிருக்கும். போனை எதிர்பார்த்திட்டிருக்கேன். நான் பிறகு மேனேஜர்கிட்ட பேசறேன்.''

அவர் ''சரி சார்...'' என்று சொல்லிப் போனை வைத்துவிட்டார்.

மறுபடி தம்பிக்குப் போட்டேன். எடுத்தான்.

''என்ன ஆயிற்று...? எப்படி இருக்கிறார்...?''

''மத்தியானம் சாப்பிட்டுவிட்டு படுக்கப் போனார். பத்து நிமிஷம் இருக்கும். என்னைக் கூப்பிட்டார். என்னப்பா என்றேன். ஒரு மாதிரி இருக்குப்பா... சொல்லத் தெரியல... படபடங்குது என்றார். தொட்டுப் பார்த்தேன். உடம்பு முழுக்க வேர்த்துத் தெப்பலாக நனைந்திருந்தது. டக்கென்று எதிர்வீட்டு சுரேஷை அழைத்து ஆம்புலன்சுக்கு ஏற்பாடு செய்து இங்கே கொண்டு வந்து விட்டோம். டாக்டர் ஐ.சி.யு.–லே அட்மிஷன் போட்டிருக்கார்.''

''சரி... நான் உடனே வரேன். கீதாவையும் அழைச்சிட்டு வரவா?''

''இப்ப வேண்டாம். நீ மட்டும் வா. தேவைப்பட்டால் அண்ணி அப்பறம் வரட்டும்.''

கோவையிலிருந்து கடலூருக்குப் பத்து மணி நேரத்தில் போய்விடலாம். நேர் பஸ் கிடைக்கவில்லை. சேலம் வரை போய் மாறிக் கொள்ளலாம் என்று சேலம் வண்டியில் ஏறினேன்.

பஸ்ஸில் ஏறி உட்கார்ந்து கொண்டேன். மனதெல்லாம் அப்பாவிடமே லயித்திருந்தது. பஸ் வேகமாகச் சென்றாலும் ஊர்ந்து செல்வதாகவே தோன்றியது.

அப்பாவுக்கு எண்பது வயதாகிறது. பன்னிரண்டு வருடத்திற்கு முன் அம்மா இறந்த பின் ஒரே ஒருநாள் கோவை வந்தார். அன்றிரவே ஊருக்குப் போக வேண்டுமென்று அடம்பிடித்தார்.

''அப்படி என்னதான் ஊரிலே இருக்கோ?'' என்று அலுத்துக் கொண்டபோது சிரித்தார்.

''உனக்குப் புரியாது'' என்றார்.

அம்மா அடிக்கடிச் சொல்வாள்.

''உங்கப்பாவுக்கு எங்கயும் தங்கப் பிடிக்காது. எங்க போனாலும் ஒடனே ஓடியாந்திடணும். காலையிலே எழுந்து காலார ஆற்றோரமா கிழக்கே போய்ட்டு வீட்டுக்கு வந்தாதான் நாள் விடிஞ்ச மாதிரி...''

உண்மைதான். அப்பா ஊர்ப் பைத்தியம். அதைவிட ஆற்றுப்பைத்தியம். அதைவிட ஊரில் ஓடும் வெள்ளாற்றுப்பைத்தியம்.

ஆற்றைப்பத்திப்பேசாமல் – ஆற்றை நினைக்காமல் – ஆற்றோரமாக நடக்காமல் அவரால் இருக்கவே முடியாது.

**நா**ற்பது வருடங்களுக்கு முன் ஒருமுறை காலையில் என்னையும் தம்பியையும் ஆற்றங்கரைக்கு அழைத்துச் சென்றது நன்றாக ஞாபகம் இருக்கிறது.

அன்று கரிநாள். காலையிலிருந்தே ஆற்றில் சுற்று வட்டார ஜனங்கள் குழும ஆரம்பித்து விட்டார்கள். வடக்குப் பகுதி புவனகிரி. அதுதான் எங்களூர். தெற்கே கீரப்பாளையம். இரண்டு ஊரையும் வெள்ளாறுதான் பிரிக்கிறது.

தெற்குப் பகுதியில் மணல் பரப்பு வெள்ளையாகக் கண்ணுக்கெட்டிய தூரம் பரந்து இருக்கும். ஆற்றைக் கடந்துதான் அக்கரைக்குப் போக வேண்டும்.

அப்பா தம்பியைத் தூக்கித் தோள்மீது வைத்துக்கொண்டு என் கையைப் பலமாகப் பிடித்துக்கொண்டு ஆற்றில் இறங்கினார்.

நேராகச் செல்லாமல் வளைந்து வளைந்து போனார்.

அவருக்குத் தெரியும் எங்கே மேடு எங்கே பள்ளமென்று...

அப்பா டக்கென்று என்னையும் இழுத்துக் கொண்டு தாவி ஏறினார்.

ஆற்று மணல் முழுதும் மணலே தெரியாத அளவுக்கு அன்று மக்கள் கூட்டம். நாங்கள் மணலில் காலைப் புதைத்துப் புதைத்து விழுந்தும் எழுந்தும் நடந்தோம்.

எத்தனை விளையாட்டு! ஒரு பக்கம் கலர் கலராக உடை உடுத்திய பெண்கள் பாட்டுப்பாடிக் கும்மியடித்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு பக்கத்தில் மேல்சட்டை போடாமல், வேட்டியைத் தார்பாய்ச்சி கட்டிக்கொண்டு, தம்பிக்கு நல்லான் பட்டினம், ஆதிவராக நத்தம் முதலிய சுத்து வட்டார கிராமங்களில் இருந்து வந்த ஆண்கள், கபடி ஆடிக் கொண்டிருந்தார்கள்.

சிலர் குடும்பத்தோடு வீட்டிலிருந்து கொண்டு வந்திருந்த புளியோதரை, தயிர் சாதங்களைக் குழுவாக உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

அன்று இருட்டி ரொம்ப நேரம் கழித்து ஆற்றைச் சுற்றி வீட்டுக்கு வந்தபோது, அம்மா வீட்டு வாசலிலே உட்கார்ந்திருந்தாள்.

''ஏங்க! ஆற்றுக்குப் போனவங்க அலையலையா திரும்பிட்டாங்க. நீங்க பசங்களை அழைச்சிட்டுப் போய் இத்தினி நாழியா?''

''அதுக்குக் கவலைப்பட்டு வாசத் திண்ணையிலேயே உட்கார்ந்திருந்தியாக்கும்...''

அம்மா அதற்கு மேல் பேசவில்லை...

**வ**ண்டி சேலம் வந்தபோது இரவு பதினொன்று. அதற்குள் தம்பி இரண்டு முறை பேசி விட்டான்.

''அண்ணா! டாக்டர் எதுவும் நம்பிக்கையா சொல்லல. இருதயத் துடிப்பு நிலையா இல்லை. டக்டக்கென்னு மாறுது... ஒண்ணும் சொல்ல முடியல... பார்க்கலாம்னு சொல்றார்.''

''சரி... பார்த்துக்கோ... நான் விடியறதுகுள்ளே வந்திடறேன்.''

''இப்ப எங்க இருக்கீங்க...?''

''சேலத்தில கடலூர் பஸ்ஸுக்காகக் காத்திட்டிருக்கேன்.''

''சரி, வாங்க...''

''அங்க நீ மட்டும் இருக்கியா... துணைக்கு...?''

''எதிர்வீட்டு சுரேஷ் இருக்கான். நீங்க வந்த பிறகு போறேன்னான்...''

''சரி''

**இ**ருபது நிமிடம் கழித்துக் கடலூர் பேருந்து வந்தது. நல்ல கூட்டம். முட்டி மோதி கடைசி சீட்டுக்கு முதல் சீட்டில் இடம்பிடித்தேன்.

அப்பா காலை வரை இருப்பாரா... வேற ஏதாவது செய்தி வருமா... எனக்குக் கவலையாக இருந்தது. வரும்போது கீதாவையும் அழைத்து வந்திருக்கலாம் என்று தோன்றியது.

கோவையிலிருந்து சேலம் வந்த பஸ்போல இந்தப் பஸ் இல்லை. மிகமிக நிதானமாக ஓட்டுவது போல் தோன்றியது. ஒரு வேளை எனக்குத் தான் இப்படித் தோன்றுகிறதோ என்று நினைத்த போது, பக்கத்து சீட்காரர் அலுப்போடு சொன்னார்.

''வாழப்பாடி வர்றதுக்கே இவ்வளவு நேரமாச்சு... கடலூர் போறதுகுள்ளே விடிஞ்சிடும்.''

**அ**ப்பா நிலையாமையைப் பற்றி அடிக்கடிச் சொல்வார்.

''எல்லாரும் ஒருநாள் காசிப்பாக்கம் போய்ச் சேர வேண்டியதுதான்'' என்பார்.

நான் ஒருநாள் கேட்டேன். ''அப்பா காசிப்பாக்கம் எங்க இருக்கு...?''

அம்மா சொன்னாள். ''டேய்... அவருக்குக் காசிப்பாக்கம், இராமேஸ்வரம் எல்லாம் வெள்ளாறுதான்.''

அப்பா அன்று மாலையே ''காசிப்பாக்கம் போகலாம் வா...'' என்றார்.

வீட்டிலிருந்து வெள்ளாற்றங்கரையிலேயே கிழக்கே கொஞ்ச தூரம் போனார்.

சுடுகாடு. பிணம் ஒன்று எரிந்து கொண்டிருந்தது.

''இதுதான் காசிப்பாக்கம்'' என்றார்.

''என்ன இந்தச் சுடுகாட்டுப் பகுதியா?''

''ஆனந்தா... காசி புனிதமான இடம். கங்கை ஓடுகிறது. கங்கை புனிதமான ஆறு. எல்லாப் பாவமும் கங்கையில் குளித்தால் போகும். எல்லோரும் கங்கைக்குப் போக முடியுமா... அதனால் பெரியவர்கள் தமிழ்நாட்டில் உள்ள ஆறுகளில் கிழக்கே போகும் ஆறு வடக்கே திரும்பினால், அந்த இடம் கங்கைக்குச் சமமாகவும் காசிக்குச் சமானமாகவும் சொல்கிறார்கள். இதோ இங்கே பார்... வெள்ளாறு கிழக்கேயிருந்து வடக்குத் திரும்புது பார். அதனால் இந்த இடத்தில் நீராடினால் புண்ணியம். அதற்காகத்தான் இதற்குக் காசிப்பாக்கம் என்று பெயர்.''

அப்பா நிதானமாக விளக்கம் சொல்லிக் கொண்டே வந்தார்.

அப்பா தினசரி இங்கு வந்துதான் நீராடுவார்.

ஒரு நாள்கூட அவர் வீட்டில் சுடு தண்ணீர் வைக்கச் சொல்லியோ, குழாய்த் தண்ணீரை நிரப்பச் சொல்லியோ நீராடியது கிடையாது.

விடுமுறைக் காலங்களில் அவரோடு குளிக்க எங்களையும் அழைத்துச் செல்வார். நீச்சல் சொல்லித்தருவார். குழாய்த் தண்ணீரில் சமைப்பதோ, குடிப்பதோ அவருக்குப் பிடிக்காது.

எங்கள் தோட்டத்தின் கொல்லைப்புறம் வழியாக ஐந்து நிமிட நடையில் ஆற்றுத்துறைக்குப் போய்விடலாம். பெண்கள் துறை, ஆண்கள் துறை என்று தனித்தனித் துறைகள் உண்டு.

எங்களைப் பள்ளிக்கு அனுப்பிவிட்டு அம்மா சாமான்களையும் குடத்தையும், துவைக்க வேண்டிய துணிமணிகளையும் எடுத்துக் கொண்டு கொல்லைப்புரம் வழியாக ஆற்றுத்துறைக்குச் சென்றால் வருவதற்கு மணி ஒன்றாயிடும்.

ஈரத்துணியோடு வீட்டுக்கு வந்து சேலையை மாற்றிக்கொண்டு அடுப்புப் பற்ற வைப்பாள். அப்பாவுக்கு ஆற்றங்கரை ஓரமாக ஒன்றரை ஏக்கர் நஞ்சை உண்டு. நெல்தான் போடுவார்.

தினசரி வேலை இருந்தாலும் இல்லாவிட்டாலும் கொல்லைக்குப் போய்விட்டு இரண்டு மணிக்குத்தான் வருவார்.

அதற்குள் அம்மா மதியம் சாப்பாடு தயார் செய்துவிடுவாள்.

சொம்பில் முதலில் தண்ணீர்தான் கேட்பார். வெள்ளாற்றுத் தண்ணீர் அவருக்குத் தெரியும். வேறு தண்ணீர் தந்தால் அவ்வளவுதான்.

''என்ன ஒரு மாதிரி இருக்கு... குழாய்த் தண்ணியா...?'' என்பார்.

''ஆமா ஒடம்புக்கு முடியல... ஆற்றுக்குப் போகல... அவசரத்துக்கு ஒரு நா குடிச்சா என்ன?''

அப்பா பதில் பேசமாட்டார்.

தானே குடத்தை எடுத்துக்கொண்டு கொல்லை வழியாக ஆற்றுக்குப் போய் தண்ணீர் குடத்தைத் தோள்மீது வைத்து எடுத்து வருவார்.

கொண்டு வந்து, வீட்டு மண் பானையில், அம்மாவின் கிழிந்த புடவையையோ, வேட்டியையோ வடிகட்டியாகக் கட்டி, பானையில் சேர்த்து விட்டுக் காத்திருப்பார்.

அரை மணி நேரமாவது ஆக வேண்டும். அதற்கு பிறகுதான் சாப்பிட உட்காருவார். அன்றைக்கு அப்பாவின் சாப்பாடு முடிய நான்கு நான்கரை ஆகிவிடும்.

அதற்குள் நானும் தம்பியும் பள்ளியிலிருந்து வீட்டிற்கு வந்து விடுவோம். அன்று அப்பாவோடு நாங்களும் உட்கார்ந்து சாப்பிடுவோம்.

**வ**ண்டி ஆத்தூர் அருகே வரும்போது தம்பி அழைத்தான். பதட்டத்தோடு பேசினான்.

''அண்ணா... டாக்டர் இப்ப வந்தார்... தாங்காது... வீட்டுக்கு அழைச்சிட்டுப் போயிடலாம்னு சொல்றார்... நான் என்ன செய்யட்டும்...?'' என்றான்.

என் பதிலை எதிர்பார்க்காது அவனே சொன்னான்.

''அண்ணா! அப்ப நான் ஒண்ணு செய்றேன்... ஆம்புலன்ஸ் ஏற்பாடு பண்ணி ஊருக்குப் போயிடறேன். நீ கடலூருக்கு வர வேண்டாம். நேராக ஊருக்கே வந்துவிடு'' என்றான்.

நான் யோசிக்கும் நிலையில் இல்லை. சரி என்றேன்.

கீதாவுக்குப் போன் போட்டேன். நல்ல வேளை அவள் தூங்காமல் விழித்திருந்தாள்.

''காலை 4 மணிக்குப் புறப்படு. இரண்டு மணிக்குள் வந்து சேர்ந்து விடலாம்'' என்றேன்.

அரை மணி நேரத்தில் பேருந்து ஆத்தூர் வந்தது. டிரைவர் இறங்கி தேநீர் குடிக்கப் போனார். பக்கத்தில் சிதம்பரம் பேருந்து நின்று கொண்டிருந்தது.

அதில் ஏறி அமர்ந்தேன். இங்கேயும் பின் சீட்டுத்தான். சிதம்பரம் வண்டி கொஞ்சம் வேகமாகப் போவது போலத் தோன்றியது. எல்லாம்

மனசுதான். அப்பாவின் முடிவு ஓரளவு தெரிந்து விட்டது.

நான் போய் ஒரு வார்த்தையாவது பேச முடியுமா...

எல்லோரும் ஒரு நாள் காசிப்பாக்கம் போய்ச் சேர வேண்டியதுதான் என்பாரே...

ஊரில் யார் இறந்து போனாலும் அப்பா முன்னால் போய் நிற்பார். பந்தல் போட ஆளனுப்புவார். டெலிபோன் நெம்பரை வாங்கி சொந்தக்காரர்களுக்குச் சேதி அனுப்பச் சொல்வார். வெட்டியானிடம் பேரம் பேசி காசிப்பாக்கத்துக்கு அனுப்பி வைப்பார். அவரே ஒருமுறை நடந்து எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்ப்பார்.

தகனம் முடிந்தாலும் உடனே வரமாட்டார். கடைசியாக வடக்கே போய் உத்தர வெற்றாற்றுத் துறையில் நீராடிவிட்டு வருவார்.

இதெல்லாம் இருபது வருஷங்களுக்கு முன்னால் வரை... இப்போதெல்லாம் ஆற்றுப் பக்கம் போக முடிவதில்லை. ஆறு அப்படிக் கெட்டு விட்டது.

என்ன காரணம்... எத்தனையோ காரணங்கள்...

தண்ணீர் வராதது, சாயப்பட்டறை, சாக்கடை முதலிய கழிவுகள் கலந்தது, கடல் தண்ணீர் ஓதம், மேற்கே ஆலைக் கழிவுகள்... எத்தனையோ காரணங்கள்... சொல்லிக் கொண்டே போகலாம்.

அப்பா, ''வெள்ளாறு கெட்டுவிட்டது'' என்று சொல்லிச் சொல்லி மாய்வார்.

அவரிடம், ''காரணம் யாருப்பா...'' என்று கேட்டால் சற்றும் தயங்காமல் சொல்வார்.

''நாமதான் காரணம்... நான்... நீ... எல்லாம் தான்...'' என்பார்.

''என்ன காரணம் கண்டுபிடிச்சு என்ன செய்யறது... ஆறு கெட்டது கெட்டதுதானே...'' என்பார்.

''ஆறு... நம்பளைக் காப்பாத்தின ஆறு... நாம காப்பாத்தலியே... காப்பாத்துணும்னு நெனைக்கக் கூட இல்லியேடா...''

அம்மா இறந்த பிறகு ஆற்றுக்குப்போய்த் தண்ணீர் கொண்டு வர ஆளில்லை. வீட்டில் போர் போட்டு குழாய் தண்ணீர்தான்... அதுவும் கெட்டுப் போய்... இப்போ ஆர்.ஓ.மெஷின் வைத்து வடிகட்டின தண்ணீர்...

''டேய்... இது தண்ணியாடா... ஏதாவது சுவையிருக்கா.. குடிக்க முடியுமா.. டேய், ஆத்துத் தண்ணி அப்படியே கல்கண்டாட்டம் இனிக்குமேடா...''

வேறு வழியில்லை... ஆர்.ஓ. தண்ணீரை வேண்டா வெறுப்பாகக் குடிக்கப் பழகிக் கொண்டார். ஆனால் குழாய்த் தண்ணீரில் குளிக்க மாட்டார். சென்ற வருடம் வரை காசிப் பாக்கம்தான்....

அந்தத் தண்ணீரில் குளித்துவிட்டு வந்து உடம்பெல்லாம் அரிக்குது... என்பார்.

''வீட்ல குளிக்க வேண்டியதுதானே... ஆத்துல குளிச்சாத்தான் ஆச்சா... பிடிவாதம்... எங்காவது விழுந்து தொலைத்தால் என்னாவது...'' தம்பி மனைவி கத்துவதைப் பொருட்படுத்த மாட்டார்.

சமீப காலமாக அவர் அடிக்கடி சொல்வது... ''டேய்... வெள்ளாறு செத்துகிட்டேயிருக்குது... பாத்தியா... ஒண்ணும் செய்ய முடியல... நம்மால ஒண்ணும் செய்ய முடியல... யாரும் கவலைப் படல...''.

''அப்பா! பேசாம இருக்கீங்களா... ஒங்களுக்கு மட்டுமா ஆறு... எல்லாருக்கும்தானே... நீங்க மட்டும் ஏன் அனாவசிமா இப்படிப் புலம்பணும் விசனப்படணும்...?''

அப்பா அப்படியே முறைத்துப் பார்ப்பார்... ''உனக்குப் புரியாது...'' என்பார்.

''டேய்... தெற்கெ புதையப் புதைய மண் இருக்குமே... இப்ப இருக்கா... தண்ணி கோடையிலயும் ஓடுமே... இப்ப ஓடுதா... அப்படியே தேங்கிப் போய்... கிழக்கே போக வேண்டிய தண்ணி மேற்கால வந்து ஏறுதே...''

என்ன சொன்னாலும் அப்பா மனசு திருப்தியடையாது.

''புவனகிரி இறங்குங்க...'' என்றார் நடத்துனர்.

நானும் இன்னும் ஓரிருவரும் விடிந்தும் விடியாத அந்த வேளையிலே இறங்கினோம்.

தம்பி பையன் வண்டி வைத்துக்கொண்டு தயாராக நின்றான்.

வீட்டுக்கு வந்தேன். அப்பாவைக் கூடத்தில் கிடத்தியிருந்தார்கள். தம்பியும் என் ஒன்றுவிட்ட அத்தை ஒருத்தியும் தலைமாட்டில் அமர்ந்து ஒரு தம்ளரில் தண்ணீரை வைத்துக்கொண்டு துளசியால் நனைத்து ஊற்றிக் கொண்டிருந்தார்கள்.

மார்புக்கூடு ஏறி ஏறி இறங்கிக் கொண்டிருந்தது.

''அப்பா... அப்பா... ஆனந்தன் வந்திருக்கேன்...'' என்று காதோரம் குனிந்து சொன்னேன்.

பலமுறை சொன்ன பிறகு மிகவும் சிரமப்பட்டுக் கண்ணை இலேசாகத் திறந்தார்.

தம்பி தம்ளரை என்னிடம் கொடுத்தான். தண்ணீரை மெல்ல வாயை விலக்கி ஊற்றும்போது ஞாபகம் வந்தது.

''டேய் தண்ணியாடா... இது... ஏதாவது ருசி இருக்கா... வெள்ளாற்றுத் தண்ணி குடிச்சிட்டு இதக் குடிப்பாங்களா...?''

''உத்தர வாகினி... காசிப்பாக்கம்... காசிக்



குச் சமானம்... அங்க ஆறு... கங்கைக்குச் சமானம்...''

நான் தம்பியிடம் கேட்டேன்.

''ஒரு பாட்டில் குடு...''

''இப்ப எதற்கு?'' என்றான்..

''இல்லை... குடு'' என்றேன்.

தம்பி பையனை அழைத்துச் சொன்னேன்.

''டேய்! காசிப்பாக்கத்துக்குப் போ...''

அவன் ''காசிப்பாக்கமா... அது எங்க பெரியப்பா இருக்கு...?'' என்றான்.

''நான் சொல்றேன்... போ... பத்து நிமிஷத்துல வந்திடலாம்.''

தம்பி ''இப்ப எதற்கு அங்கே போற? என்ன செய்யப்போற..?'' என்றான்.

அவனுக்குப் புரியாது... அவனிடம் நான் பதில் சொல்லவில்லை.

காசிப்பாக்கத்தில் ஆற்றில் இறங்கி பாட்டிலில் தண்ணீர் பிடிக்கும்போது, ''இது எதற்கு பெரியப்பா? உப்புக் கரிக்கும்.. நாறும்...'' என்றான். நான் அவனுக்குப் பதில் சொல்லவில்லை.

கரையேறிய போது என்னை அறியாமல் கண்ணீர் வந்தது... இது அப்பாவுக்காக மட்டுமல்ல... என்பது என் உள் மனதிற்குப் புரிந்தது... •

# உழவர் உவக்கும் நாள்



த. ஞானசேகரன்



உழைக்கின்ற உழவர்களின்
உள்ளமெலாம் உவக்கும் நாள்
தழைக்கின்ற தைத்திருநாள்
தமிழர்களின் தனிப்பெருநாள்
செங்கரும்பின் சுவையுண்டு
சிரித்திருக்கும் இந்நாளில்
எந்நாளும் நந்நாளாய்
ஏற்றமிகு பொன்னாளாய்
மண்போற்றும் புகழுடனே
மாட்சிமையும் பெற்றிடவே - இவர்
வளமான தமிழரென
வாழ்கவென்று வாழ்த்துகிறேன்!



# ஏனிந்த மயக்கம்!?

தமிழினமே தமிழினமே ஏனிந்த மயக்கம்?
தாய்மொழியில் கற்பதற்கா உமக்கிந்தத் தயக்கம்?
தாய்மொழியல்லாமல் எப்படி நாம் வளர்ந்தோம்? - அத்
தமிழுக்குப் பரிசாக நாமென்ன தந்தோம்?

தாய்மொழி என்பதன் அர்த்தம் தெரியுமா? - பெற்ற
தாயே பேதலித்தால் தம் மொழி வளருமா?
பண்பாளர் பலர்சேர்ந்து வளர்த்த நற்பெருமை
பற்றற்ற உன்செயலால் வந்ததுபார் சிறுமை!

ஐந்து வகுப்புவரை அன்னை மொழி கற்றால்
அழிந்து படுவோம் என எப்படி நீ அறிந்தாய்?
ஆல்போல் வளர்ந்ததாம் அவனியில் நம்மொழி
அடியோடதனை அழிப்பதா உம்வழி!?

அறிவுசால் ஆன்றோரால் வளர்ந்த நற்பெருமை
அறிவற்று நீ அழிக்க யார் கொடுத்தார் உரிமை?
ஆயிரமாம் ஆண்டுகளாய் ஏந்திவந்த ஒளி - அதனை
அணுவேனும் குறையாமல் உன்சந்ததிக்கு நீ அளி!



# கொல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கத்தின் 'சாதனைத் தமிழர்' விருது!

கொல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கம் சார்பில் டாக்டர் பி.கே. பாஸ்கர் அவர்களுக்கு, 'சாதனைத் தமிழர்' விருதை, திரு. த. ஞானசேகரன் வழங்கும் காட்சி. அருகில் திரு. ஹரிராஜன் ஐ.பி.எஸ்., திரு. எஸ். பாலாஜி அருண்குமார், திரு. ஜி.வி. சுப்பிரமணியன், திரு. அனிதா கு. கிருஷ்ணமூர்த்தி ஆகியோர்.

தமிழகத்திற்கு அப்பால் பாரதியின் பெயரால் அமைந்த முதல் தமிழ்ச்சங்கம் என்ற பெருமைக்குரியது, கொல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம். 2005–ஆம் ஆண்டு தொடங்கி, ஆண்டுதோறும் பாரதி பிறந்தநாள் விழாவில் தமிழ்ச் சமுதாயத்தில் சாதனை புரிந்த பெருமக்களை அடையாளம் கண்டு போற்றிடும் வகையில், ஆண்டுக்கு ஒரு பெருமகனாருக்குச் 'சாதனைத் தமிழர் விருது' வழங்கிக் கௌரவித்து வருகிறது.

பல அறிஞர் பெருமக்களைக் கௌரவப்படுத்தியுள்ள இச்சங்கம், இந்த ஆண்டு பல் மருத்துவ வல்லுநர் டாக்டர் பி.கே. பாஸ்கர் அவர்களுக்கு, 2018 டிசம்பர் 16–ஆம் தேதி கொல்கத்தாவில் 'சாதனைத் தமிழர்' விருதினை வழங்கிக் கௌரவித்தது. டாக்டர் பி.கே. பாஸ்கரன், அருட்செல்வருக்குச் சென்னையில் மிக நெருங்கிய அளவில் தெரிந்த பல் மருத்துவராவார்.

விழாவிற்குத் தமிழ்ச்சங்கத்தின் முன்னாள் தலைவரும், இந்நாள் ஆலோசகருமான திரு. த. ஞானசேகரன் தலைமை தாங்கினார். சங்கத்தின் செயலாளர் திரு. எல்.எம். அனந்தபத்மநாபன் 'சாதனைத் தமிழர்' விருது மடலை வாசிக்க, தமிழ்ச்சங்கத் தலைவர் திரு. ஜி.வி. சுப்பிரமணியன் இவ்விருதினை டாக்டர் பி.கே. பாஸ்கர் அவர்களுக்கு வழங்கினார்.

கொல்கத்தா போர்ட் டிரஸ்ட் டெபுடி சேர்மன் திரு. எஸ். பாலாஜி அருண்குமார், என். ஆர். ஐயர் நினைவு கல்விக் கழகத்தின் துணைத் தலைவர் திரு. எஸ்.என். பாஸ்கரன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள்.

விழாவில், கொல்கத்தாவில் நீண்ட நாள்கள் பணிபுரிந்து, இப்போது கொல்கத்தாவின் காவல்துறை ஆள்சேர்ப்பு வாரியத்தின் தலைவராகப் பணிபுரியும் திரு. கே. ஹரிராஜன் ஐ.பி.எஸ். அவர்கள் தமிழ்ச் சங்கத்திற்கு அளித்துவரும் ஆதரவினைப் பாராட்டி, அவருக்குச் "சேவைச் செம்மல்" என்ற விருது அளிக்கப்பட்டது.

எழுத்தாளர் திருப்பூர் திரு. அனிதா கு. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் எழுதிய "சுக்கா, மிளகா சுதந்திரம்?" என்ற நூலை திரு. த. ஞானசேகரன் வெளியிட, திரு. கே. ஹரிராஜன் பெற்றுக் கொண்டார். நிறைவாக திருக்குறள், பாரதியார் கவிதைகள் முதலிய பல்வேறு போட்டிகளில் பங்கு பெற்று வெற்றி பெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன.

– ந.நி.




## மகாலிங்கம் மாரியம்மாள் மணிவிழா அறக்கட்டளை சார்பில்

# காந்தி ஜெயந்தி விழா!

**கோ**வை மகாலிங்கம் மாரியம்மாள் மணிவிழா அறக்கட்டளையின் சார்பில், 30.11.2018 அன்று நடைபெற்ற காந்தி ஜெயந்தி விழாவில், (வலமிருந்து) ஏ.பி.டி. செயல் இயக்குநர் திரு. மா. ஹரிஹரசுதன், 'நமது நம்பிக்கை' ஆசிரியர் 'கலைமாமணி' மரபின் மைந்தன் முத்தையா, என்.எம். அன்ட் கோ. செயல் இயக்குநர் திரு. சந்திரசேகரன், திருமதி மனோ மன்றாடியார், திருமதி. விஜய வல்லி மாரிமுத்து ஆகியோர்.




## கஸ்தூர்பா காந்தி காது கேளாதோர் வாய்மொழிப் பயிற்சிப் பள்ளியின் ஆண்டு விழா!

**கோ**வை வரதராஜபுரம் கஸ்தூர்பா காந்தி காது கேளாதோர் வாய்மொழிப் பயிற்சிப் பள்ளியின் ஆண்டு விழாவில், ஒரு மாணவனுக்குப் பரிசுச் சான்றிதழ் வழங்குகிறார், சக்தி சுகர்ஸ் சேர்மன் டாக்டர் ம. மாணிக்கம். அருகில் திருமதி. கௌரி மாணிக்கம், திருமதி விஜயவல்லி மாரிமுத்து, பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி சி.கே. அமிர்தவல்லி ஆகியோர்.

– ந.நி.

கட்டுரை

# பழனியில் பாரம்பரியமிக்க சித்த வைத்தியசாலைகள்





**பழனிகோபு**

முந்தைய மதுரை மாவட்டத்தில் இருந்த, இன்றைய திண்டுக்கல் மாவட்டத்திலுள்ள பழனியம்பதி முருக பக்திக்கு உதாரணமாக விளங்குகிற நகரமாகும்.

பழனி முருகனுக்கு 'ஞான பண்டிதன்' என்ற ஒரு பெயருண்டு. பண்டிதன் என்றால், மருத்துவன் என்ற பொருளுண்டு. முருகன் ஞானபண்டிதன். அதாவது, அந்தக் காலத்தில் நமது ஞானக் கோணல்களைச் சரிசெய்து கொடுத்த ஞானி.

அதுமட்டுமல்ல, முருகனின் சிலை ஓர் அபூர்வமான சிலை. போகர் என்ற சித்தரால் உருவாக்கப்பட்ட சிலை. நவபாஷாணங்கள் என்று கூறப்படுகிற ஒன்பது மூலிகைகளிலிருந்து அவர் அந்தச் சிலையை வடித்துள்ளார். அது கற்சிலை அல்ல, மூலிகைச் சிலை.

பல்லாண்டுகளுக்கு முன்னால் உருவாக்கப்பட்ட அந்தச் சிலை இன்றைக்கும் அதே மாதிரி உள்ளது. இந்தச் சிலையின்மேல் ஊற்றிச் செய்யப்படுகிற பால், தேன், திருமஞ்சனம், பஞ்சாமிர்தம் முதலிய அபிசேகங்களை எடுத்து, பக்தர்கள் பிரசாதமாகச் சாப்பிடுகிறார்கள். அது பிரசாதம் மட்டுமல்ல, ஏதேனும் நோய்கள் இருந்தால் அவற்றைப் போக்கும் மருத்துவக் குணங்கள் அதில் உண்டு என்று பக்தர்கள் நம்புகிறார்கள். நாடிச் சென்று அருந்துகிறார்கள்.

பழனி முருகன் மலைக்கோயில் இல்லையென்றால், பழனி நகரத்திற்கான சிறப்பே இல்லை. பழனி மலைக்குப் பக்கத்திலுள்ள வையாபுரிக் குளம் 'வையாபுரி' என்ற ஓர் அரசனால் அன்றைக்கு ஆளப்பட்ட பகுதியின் குளமாகும்.

இந்த மலைச்சாரல் பிரதேசத்தில்தான் பேகன் என்ற ஒரு குறுநில மன்னன் ஆட்சி செய்து வந்தான். அவன்தான் கடையேழு வள்ளல்களில் ஒரு வள்ளலாகப் போற்றப்படுகின்ற மயிலுக்குப் போர்வை ஈந்த பேகன் எனப்படுபவன். பழனி மலைக்கு அருகில் உள்ள பொருந்தல் என்ற ஒரு மலைச்சாரல் உண்டு. அந்தப் பகுதிதான் பேகனுடைய ஆட்சி நடந்த இடம் என்கிறார்கள் கல்வெட்டு ஆய்வாளர்கள்.

பழனியிலுள்ள சண்முகநதி, தீர்த்தப் பெருமை கொண்ட நதியாகும். இந்த நதியில் குளித்துப் பழனி முருகன் கோயிலுக்கு வந்து தரிசனம் செய்து திரும்புவது முருக பக்தர்களின் பேராசையாக உள்ளது. காரைக்குடிப் பகுதியிலிருந்து ஏராளமான முருக பக்தர்கள் தைப்பூசத்திற்கு வருகிறார்கள்.

அதேபோல, எடப்பாடி, கோவை பகுதிகளிலிருந்தும் முருக பக்தர்கள் வருகிறார்கள். கேரளாவிலிருந்தும் கேரள மக்கள் முருகனைத் தரிசிக்க வருவது கண்கொள்ளாக் காட்சியாகும். காரணம், முருகன் மேற்கே உள்ள கேரளாவை நோக்கி நிற்கிறான் என்பதால், கேரள மக்கள் முருகன் மீது அளவற்ற பக்தி கொண்டு தரிசித்துத் திரும்புகிறார்கள்.

இவ்வாறு, வரலாற்றுச் சிறப்பும், பக்திச் சிறப்பும் மிக்க பழனி நகரத்தின் மற்றுமொரு சிறப்பு, நமது

பாரம்பரிய சித்த மருத்துவத்தின் தலைநகரமாகப் பழனி விளங்கிற்று. ஏறக்குறைய நூற்றுக்கணக்கான சித்த மருத்துவர்கள் பழனியில் இந்த மருத்துவத்தைக் குளிகை மூலமாகப் பல்வேறு பிணிகளுக்குத் தந்து, குணப்படுத்தி வந்திருக்கிறார்கள்.

அவர்களைப் பற்றியெல்லாம் ஒரு வரலாற்றுப் பதிவைச் செய்ய வேண்டும் என்று 'ஓம் சக்தி' நீண்ட காலமாக நினைத்து வந்தது. அந்த நற்காரியத்தைச் செய்வதற்கு, தன்னடக்கம் மிளிரும் எழுத்தாளர் பழனி கோபு முன்வந்தார். அவர் பழனியம்பதியைச் சார்ந்தவர். பிறந்து, வளர்ந்து அங்கேயே படித்தவர். தற்போது சென்னையில் வசித்து வருகிறார். அவருடைய பள்ளித் தோழராக விளங்கியவர்கள்தான் பழனியின் சித்த மருத்துவச் சக்கரவர்த்தியாக விளங்கிய மலையப்பசாமியின் பரம்பரையில் வந்தவர்கள்.

அவர்களைப் பற்றியெல்லாம் பழனி கோபு அவர்கள் அர்ப்பணிப்போடும், ஆர்வத்தோடும் பழனியில் தங்கி செய்திகளைத் திரட்டி, இரண்டு இதழ்களுக்கு ஞானதானம் வழங்கியுள்ளார். இது முதல் இதழ். இதில் சித்த மருத்துவத்தின் சிறப்புகளையெல்லாம் அறிந்த பரம்பரை வைத்தியர்களைப் பற்றி எழுதியுள்ளது ஒரு வரலாற்றுப் பதிவு என்றால் அது மிகையல்ல.

– இ.ஆர்

'வாரும் வாரும் தெய்வ வடிவேல் முருகரே வாரும்; புள்ளிமயிலோரே வாரும்' எனும் அருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகளின் காலைப்பாட்டினையும் 'போற்றியென் வாழ் முதலாகிய பொருளே, புலர்ந்தது பூங்கழற் கிணை துணை மலர் கொண்டு' எனும் மாணிக்கவாசகரின் திருப்பள்ளி எழுச்சிப் பாடலையும் பாடியவாறு, பச்சை, காவி வண்ண உடைகளில் துறவுக் கோலம் கொண்ட முருகனடியார்கள் பழனி மலைப் படியில் ஏறி தண்டாயுதப் பெருமானின் காலை நேர விஸ்வரூப தரிசனம் காண முருக அன்பர்கள் வருவார்கள்.

அந்த விடிந்தும் விடியாத காலைப் பொழுது பக்தர்கள் மனதில் பக்திப் பரவசத்தையும், இன்பக் களிப்பையும் ஏற்படுத்தும். அப்போது மூலவர் சன்னிதானத்தில் பழனி முருகன் கோவணாண்டியாகத் தலையில் அப்பிய சந்தனத்துடன் காட்சி தரும் தோற்றம் பக்த கோடிகளிடையே ஒரு சொல்லொணா ஆனந்த உணர்வை நாடி நரம்புகளில் பாயச் செய்யும். பிறகு சுவாமி பிரசாதமாக விபூதியும், முருகன் மேல் அப்பி இருந்த சந்தனத்தின் துளியும் வழங்கப்படும்.

இந்தச் சந்தனத் துளியை நெற்றியில் இட்டுக்கொள்ளாமல், வாயில் போட்டுக் கொள்வார்கள். காரணம், சித்த மகாபுருஷர் போகரால் நவ பாஷாணத்தால் உருவாக்கப்பட்ட முருகர் சிலையின்மீது இரவு பள்ளியறைப் பூசையின்போது வைக்கப்பட்ட சந்தனத் திரளானது, காலையில்தான் எடுக்கப்படுவதால், அது பிணிகளைத் தீர்க்கும் மருத்துவக் குணங்களை உள்வாங்கியிருக்கும் என நம்பப்பட்டு, அந்தச் சந்தனத்துளி உட்கொள்ளப்படுகிறது.


சித்த மருத்துவ வள்ளல் திருக்குறள் டாக்டர் பி.சி. கண்ணு

சித்த மருத்துவக் காவலர் டாக்டர் சி.பி. சாமி

அதனால்தான், பழனி முருகன் 'ஞான பண்டிதன்' அதாவது, ஞான மருத்துவன், ஞான ஆசிரியன் என்று அழைக்கப்படுகிறான். இயற்கையிலேயே பழனி மலையைச் சுற்றி மூலிகைச் செடிகொடிகள் இருந்து அங்கு வீசும் காற்றில் மூலிகை மருந்து வாசம் மிதந்திருக்கும் எனக் கூறுவர்.

இத்தகைய சூழலில் இங்கு சித்த வைத்திய முறைகள் தழைத்துச் சிறப்புப் பெற்றதில் வியப்பு ஏதும் இல்லை. சென்ற நூற்றாண்டு வரையில் 30–க்கும் மேற்பட்ட சித்த வைத்திய சாலைகள் பழனியில் இருந்திருக்கின்றன.

அவற்றுள் மலையப்பசாமி வைத்தியசாலை, ஆர்.எம்.கே. வேலுசாமி சித்த வைத்தியசாலை, தண்டபாணி, ஆனந்தா, யாழ்ப்பாணம், வெற்றிவேல், காளிமுத்து பழனி சித்த வைத்தியசாலை ஆகியவை குறிப்பிடத்தகுந்தன.

இந்த வைத்திய சாலைகள் யாவும் உள்நாட்டிலும், வெளிநாட்டிலுமுள்ள நோய்வாய்ப்பட்ட பல்லாயிரக்கணக்கான மக்களைக் குணப்படுத்தியிருக்கின்றன. எல்லாமே சித்த மருத்துவ முறைகள்தான்.

பழனியில் இன்றும் இயங்கிக் கொண்டிருக்கும் மலையப்பசாமி வைத்தியசாலை எட்டுத் தலைமுறைப் பாரம்பரியம் கொண்டது. இவர்களின் முன்னோர்களில் ஒருவரான சுப்பநாத வாத்தியார் என்பவர் தமது தந்தையாரிடமிருந்து மருத்துவ முறைகளைக் கற்றுத் தேர்ந்து பணிபுரிந்து வந்தார். அவருக்குப்பின் அவரது வழித்தோன்றலான நாகப்ப வாத்தியார் என்பவரும், அவருக்குப்பின் சட்டாம்பிள்ளை என்ற பொன்னுச்சாமி வாத்தியார், மேலும் பல வைத்திய அறிஞர்களைக் கேட்டும், தன் மருத்துவ அறிவைப் பெருக்கியும் மக்களுக்குச் சேவை செய்து வந்தார்.

பால் மணம் மாறாத பச்சிளம் குழந்தைகளுக்கு வரும் நோய்களின் தன்மையை ஆராய்ந்தும், அது சம்பந்தமான நூல்களைப் படித்தும், அதற்கேற்றவாறு சிகிச்சை முறைகளையும் மருந்துகளையும் கண்டுபிடித்துக் குழந்தை நோய்களுக்குத் தீர்வு கண்டார். அவருக்குப் பின் செல்லக் கண்ணுப் பிள்ளையவர்கள் பரம்பரையாகத் தனக்குக் கிடைத்த வைத்திய அறிவைக் கொண்டு நூல்களை ஆராய்ந்து மேலும் சில நல்ல மருந்துகளையும் கண்டுபிடித்தார்.

பழனியிலும், சுற்றுப்புற கிராமங்களிலிருந்தும் நோய்வாய்ப்பட்ட தம் குழந்தைகளை அவரிடம் காட்டி, மருந்துகள் பெற்றுச் சென்றனர். குழந்தைகளும் நோய் நீங்கப்பெற்று குணம் பெற்றனர். ஆகவே, அவருக்குக் 'குழந்தை வைத்தியம் செல்லக் கண்ணுப்பிள்ளை' என்ற பட்டப் பெயர் ஏற்பட்டது.




அவரது தனயன் மருத்துவர் சி.பி. சாமி அவர்கள், தன் மூத்த சகோதரர் திரு. மலையப்பசாமி அவர்களுடன் இணைந்து மருந்து செய்முறை, நாடிப் பரீட்சை, மருந்துப் பிரயோகம் இவற்றைக் கற்றுத் தேர்ந்ததுடன், பல சித்த வைத்தியப் பெரியோர்களிடமும், அறிஞர்களிடமும் சில காலம் பயிற்சி பெற்றார்.

பின்னர் ஒரு மகானை அணுகி அவரிடம் உபதேசம் பெற்று,



மலையப்பசாமி வைத்தியசாலை புதிய கட்டடத்தைத் திறந்துவைக்கிறார் தமிழக அரசின் அன்றைய அமைச்சர் கே.ஏ. மதியழகன். இடது பழனி எம்.எல்.ஏ., கிருஷ்ணமூர்த்தி. வலது டாக்டர் பி.சி. கண்ணு.

வைத்தியத்தின் நுட்பங்களைச் சரிவரக் கற்று, நோய்களுக்குத் தக்க மருந்துகள் கண்டுபிடித்து, தயாரித்து இத்துறையில் சிறந்து விளங்கினார். இவரும், இவரது முன்னோர்களும் படித்து ஆய்ந்த மருத்துவ ஓலைச்சுவடிகள் இன்றுவரை பாதுகாக்கப்பட்டு காட்சியாகக் காணக்கிடைக்கின்றன.

நோய்களைக் குணப்படுத்துவதில் வல்லவர் என்ற நல்ல பெயர் பெற்ற டாக்டர் சி.பி. சாமி அவர்கள், நேரில் வரமுடியாத அயலூர் மக்களின் நன்மையைக் கருதி, தபால் மூலம் பரிகாரம் கண்டு சுகமடையும் பொருட்டு 20.4.1920–இல் 'நித்தியானந்த வைத்தியசாலை'யைத் தொடங்கினார். பின்னர் அவரது மூத்த சகோதரரான மலையப்பசாமி அவர்கள் 14.11.1927–இல் காலஞ்சென்றுவிடவே, அவரது ஞாபகார்த்தமாக இவ்





டாக்டர் சி.பி. சாமி அவர்கள் அகத்தியரின் 'குணவாகடம்' ஓலைச்சுவடிக் கட்டினைத் தமிழக அரசின் அன்றைய நல்வாழ்வுத்துறை அமைச்சர் அன்பழகனிடம் அளிக்கிறார். உடன் டாக்டர் பி.சி. கண்ணு.

வைத்தியசாலையை 'மலையப்பசாமி வைத்தியசாலை' என்று பெயர் மாற்றம் செய்தார் டாக்டர் சாமி அவர்கள்.

பழனி மேலரத வீதியிலிருந்த இவ் வைத்தியசாலை, 1943–இல் ரயில்வே பீடர் சாலைக்கு இடம் பெயர்ந்ததுடன், வளர்ச்சியும் பெற்றது. இது நவீன முறையில் கட்டமைக்கப்பெற்று, மருந்து செய்சாலையில் குளிகைகள் செய்யவும், தைலங்கள் பிழியவும், கஷாயங்கள் வடிகட்டவும், மருந்துச் சரக்குகளை அரைக்கவும் இயந்திரங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

1940 – 50 களில் டாக்டர் சி.பி. சாமி அவர்கள் இலங்கையில் சுற்றுப் பயணம் மேற்கொண்டு, பல நோயாளிகளைச் சந்தித்து, அவர்களின் நோய்களைக் கண்டறிந்து, அதற்குத் தக்க மருந்துகள் தந்து அவர்கள் குணமடையச் செய்தார். அதனால், அவரது மருந்துகள் அங்கு பிரபலம் பெற்றன. எனவே, அங்கு ஒரு விற்பனைப் பிரதிநிதியை நியமித்து, மருந்துகள் அனுப்பி வைத்தார்.

டாக்டர் சி.பி. சாமி அவர்களுக்கு இரு வாரிசுகள். புதல்வி திருமதி வீரம்மாள் பஞ்சாட்சரம் அவர்கள். புதல்வர் டாக்டர் சி.பி. கண்ணு அவர்கள். இவர் சித்தவைத்தியர் பட்டம் பெற்றுத் தந்தைக்கு உறுதுணையாக இருந்து மருத்துவப் பணி புரிந்தார்.

டாக்டர் சி.பி. சாமி, அவரது புதல்வர் டாக்டர் பி.சி. கண்ணு அவர்கள் சித்த மருத்துவ சேவை செய்த காலம், மலையப்பசாமி வைத்தியசாலையின் பொற்காலம் என்று சொல்லலாம். இவர்களுக்குப் பின் இந்தத் தலைமுறை மருத்துவர்களாக டாக்டர் பி.சி. கண்ணு அவர்களின் துணைவியார் திருமதி சுசிலாராணி, மகன் ராஜ்குமார், அவரது துணைவியார் திருமதி மீனா, இளையமகன் கதிர்வேல் ஆகியோர் சித்த மருத்துவ டாக்டர்களாகப் பணிபுரிந்து வருகின்றனர்.

(மீதி அடுத்த இதழில்)

Registered with Registrar of Newspapers for India No. 42582/83
Licensed to post without Pre-payment under Regn. No. TN/WR/CBE/016/WPP/2018-20

Date of Publication
28.12.2018

Regd.No.CB/016/2018-20
OM SAKTHI - JANUARY - 2019